# பொருளடக்கம்

மலர் 19] ஜனவரி 1967 [இதழ் 7
ஹிஜ்ரீ 1386 ரமலான்-ஷவ்வால்



முஸ்லிம் முரசில் வெளியாகின்ற
கதைகளில் வரும் சம்பவம், பெயர்கள் யாவும் கற்பனையே!

# ஜக்காத்தளிப்பீர்!

"இபுனு ஜமாலுத்தீன்"

எண்ணிலார் வாடிட ஒருசிலர் வாழ்ந்திடல்
இறைமறை நீதியன்றும்—உடன்
நண்ணிய செல்வம் மறைவழி பேணியே
நல்கிநலம் பெறுவீர்!

"சேகரம் செய்தசெம் பொன்னினை வெள்ளியை
தீநரகில் காய்ச்சி—ஈயார்
தேகத்தில் சூடிடு வோம்"என மாமறை
செப்பும்மொழி நினைவீர்!

"பக்கத்து வீட்டான் பசித்திருக்க உண்ணும்
பாதகன் முஸ்லிமலன்"—என
மிக்க புகழுடை நாதர் முஹம்மதர்
மொழிவது கேளீரோ!

ஈயாத செல்வர்தம் தொழுகையை நோன்பினை
இறைவன் உவப்பதில்லை—அவர்
தீயராய் தீநர கேகுவார்; சத்தியம்;
தேறித் தெளிந்திடுவீர்.

"முஸ்லிம்கள் யாவரும் சோதர ராம்"எனும்
மறைமொழி ஏற்றபின்னும்—பிற
முஸ்லிம் படுந்துயர் கண்டும் உதவிடான்
முஸ்லிமோ? கூறிடுவீர்!

"மனைவியும் மக்களும் செல்வமும் உதவிடா
மாபெரும் நாள்வருமுன்—அருள்
நினைவுடன் ஏழையர் பங்கினை ஈந்திறை
நேசராய் மாண்புறுவீர்!"




# நன்றி செலுத்தும் நன்னாள்!

திருக் குர்ஆன் இந்த மாதத்தில் அருளப்பெற்றதால் ரமலானுக்கே ஒரு தனிச் சிறப்பு உண்டு.

"மனிதர்களுக்கு வழிகாட்டியாகவும் நேரான வழியைத் தெளிவாக்குவதாகவும், நன்மையையும் தீமையையும் பிரித்தறிவிக்கக் கூடியதாகவும் உள்ள அல்-குர்ஆன் இறக்கப் பெற்றதே அந்த ரமலான் மாதம்" என்று இறைவனாலேயே சிறப்பிக்கப்பட்டுள்ள அம் மாதத்தை மீண்டும் ஒருமுறை சந்தித்து, அவனுடைய கட்டளைக்கிணங்க மாதம் முழுவதும் நோன்பு நோற்று, அதை வெற்றிகரமாக நிறைவேற்றிய மகிழ்ச்சியில் திளைத்து, அந்த வாய்ப்பினை அளித்த அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் நன்னாளே 'ஈதுல் பித்ரு' என்னும் இந்த நோன்புப் பெருநாள். ஈந்துவக்கும் இன்பத் திருநாள். உயர்ந்த மானிடப் பண்புகளில் ஒன்றான ஈதல் குணத்தை வளர்க்கும் 'ஜகாத்'தும் 'பித்ரா'வும் கொடுக்கப் பட வேண்டியது இம் மாதத்திலேதான்!

மனிதகுலம் மாண்புறுவதற்கு வேண்டிய போதனைகள் அனைத்தையும் தன்னுள்ளே தாங்கிக்கொண்டிருக்கும் திருக் குர்ஆனுக்கும் இந்த ரமலான் மாதத்துக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு, இறைவனே சுட்டிக்காட்டும் தொடர்பு, நம் சிந்தனையைக் கிளற வேண்டும். திருமறையை நமக்கு அருளியதற்காகவும் அல்லாஹ்வுக்கு இந்த நன்னாளில் நன்றி செலுத்துவதோடு, நாம் அதன் வழிநின்று ஒழுகி, உண்மையான முஸ்லிம்களாகவாழ மீண்டும் ஒருமுறை உறுதி பூண்டு அவ்வுறுதியைச் செயலாற்றுவதற்கு முதற்படியாக திருக் குர்ஆனை நன்கு கற்க முற்படவேண்டும். அத்தகைய முயற்சிக்கு இறைவனின் இன்னருள் துணைபுரியுமாறு இறைஞ்சுவோமாக!

ஈத் முபாரக்!




## ஒப்பற்ற கூட்டணி

காங்கிரஸ் ஆட்சியைப் பதவியிலிருந்து அகற்றுவதற்காக தி. மு. க., முஸ்லிம் லீக், சுதந்திரா ஆகிய மூன்று முக்கிய கட்சிகளோடு மேலும் ஐந்து கட்சிகள் சேர்ந்த கூட்டுஅணி வெற்றிகரமாக உருவாகிவிட்டது. இக் கூட்டணியின் ஒன்றித்த பலம் எத்தகையது, அதில் சேர்ந்துள்ள கட்சிகளினிடையே ஏற்பட்டுள்ள கூட்டுறவு எவ்வளவு நெருக்கமானது என்பதையெல்லாம் சென்னை விருகம்பாக்கத்தில் நடந்த தி. மு க. மாநாட்டில் காண முடிந்தது. அம் மாநாட்டின நிகழ்ச்சிகளும், முதல் நாளன்று அதையொட்டி நடந்த ஒப்புவமை காண முடியாத ஊர்வலமும் கூட்டணியின் வெற்றி நிச்சயமாகிவிட்ட ஒன்று என்பதை நிரூபித்துவிட்டன. அம் மாநாட்டில் கலந்துகொண்டு ஆசி கூறிய மூதறிஞா ராஜாஜி அவர்கள், "நாம் இங்கு சேர்ந்திருப்பது மிகப்பெரிய காரியம் உலக சரித்திரத்தில் பதியவேண்டிய சேர்க்கை இது. நிச்சயம் பதியும்!" என்று கூறினார். அதில்கலந்துகொண்ட காயிதெ மில்லத் அவர்களும் "நம்மிடையே உள்ளஒற்றுமையை இம் மாநாடு எண்பிக்கிறது. வெற்றி நமதே!" என வாழ்த்தினார்கள்.

கூட்டணியில் சேர்ந்துள்ள கட்சிகளிடையே ஏற்பட்டுள்ள உடன்பாட்டிற்கு இணங்க தமிழ் நாட்டில், முஸ்லிம் லீக் கட்சிக்கு பாராளுமன்றத் தொகுதி ஒன்றும், சட்டமன்றத் தொகுதிகள் நான்கும் ஒதுக்கப் பட்டுள்ளன, அவற்றில் போட்டியிடும்முஸ்லிம் லீக் வேட்பாளர்களின் பட்டியலும் வெளியிடப்பட்டுள்ளது. ராமநாதபுரம் பாராளுமன்றத் தொகுதியில் ஜனாப் எஸ். எம். ஷரீப் எம். ஏ. போட்டியிடுகிறார். டாக்டர் ஹபீபுல்லா பேக் சென்னை துறைமுகத் தொகுதியிலும், சொல்லின் செல்வர் அல்ஹாஜ் எம். எம். பீர்முஹம்மது அவர்கள் மேலப்பாளையம்தொகுதியிலும், அட்வகேட் ஜனாப் ஏ. முஹம்மது சாலிஹ் தஞ்சை பாபநாசம் தொகுதியிலும், ஜனாப் எம். ஏ. கபூர் அவர்கள் ராணிப்பேட்டைத் தொகுதியிலும் போட்டியிடுகின்றனர்.

காயிதெ மில்லத் அவர்கள் சென்ற தடவை போல வரும் தேர்தலிலும் கேரள மாநிலத்தில் மஞ்சேரி தொகுதியில் போட்டியிடுகிறார்கள். முஸலிம் லீக் வேட்பாளர்களும் தோழமைக் கட்சி வேட்பாளர்களும் வெற்றிபெறுவதற்காகஇப்போது முதற்கொண்டே நாம் செயலபடத் தொடங்குவது அவசியமும் அவசரமுமான கடமை என்பதை நினைவூட்டுகிறோம்.

## பெருநாள் மலர்

வழக்கம்போல இவ்வாண்டும் பெருநாள் மலரை அதிகப் பக்கங்களோடும், சிறப்பான கவிதை, கட்டுரை, கதைகளோடும் வெளியிடத்துணைசெய்த வல்ல இறைவனுக்கு நன்றி செலுத்துகிறோம். இதற்கு உறுதுணையாக இருந்த எழுத்தாளர்கள், விளம்பரதாரர்கள், வாசகப் பெருமக்கள் அனைவருக்கும் எங்கள் இதயம் கனிந்த நன்றியையும் பெருநாள் வாழ்த்தையும் சமர்ப்பிக்கின்றோம்.

பம்பாய் வருகை



எமது பிரதிநிதி M. A. ஜலாலுதீன் சாஹிப் பம்பாய்க்கு விஜயம்செய்கிருர் அன்பர்களும், ஆதரவாளர்களும், சந்தா, விளம்பரம் தந்து ஒத்துழைக்குமாறு வேண்டுகிரும். நிர்வாகி,

**முஸ்லிம் முரசு**

# கண்டதும் கேட்டதும்



வரும் பொதுத் தேர்தலில் எதிர்க்கட்சிகள் அனைத்தும் சேர்ந்து காங்கிரஸ் கட்சியை எதிர்க்க எடுத்த பெருமுயற்சி வெற்றிபெற்றுவிட்டது. இதற்குரிய பெருமை பெருமளவு தி. மு. க. தலைவர் அண்ணாத்துரையையே சாரும்,

இவ்வாறு கூட்டணி சேர்வது காங்கிரசைத் தோற்கடிக்கப் பயன்படுமா? அப்படித் தோற்கடிக்கப்பட்டால் எதிர்க்கட்சிகள் நிலையான மந்திரிசபை அமைக்க முடியுமா? அத்தகைய மந்திரி சபை எந்தக் கொள்கையைப் பின்பற்றும்? என்பன போன்ற கேள்விகள் இன்று அரசியல் வட்டாரத்தில் பரவலாக அடிபடுகின்றன. காங்கிரஸ் தலைவர் காமராஜர் எதிர்க்கட்சியின் கூட்டணியால் காங்கிரசுக்குத் தான் இலாபம் என்கிறார். நேரடிப் போட்டியில் எதிர்க்கட்சி வேட்பாளரை விரும்பாத மற்ற கட்சிக்காரர்கள் அனைவரும் காங்கிரசுக்கே வாக்களிப்பார்கள் என்றுகூறிவருகிறார் இது உதட்டிலிருந்து வரும் பேச்சே தவிர உள்ளத்திலிருந்து வருவதல்ல. கூட்டணிகளுக்கு எத்தகைய வலிமை உண்டென்பதைக் கேரளத்தில் காங்கிரஸ் 1960-இல் அமைத்த கூட்டும்; சென்னை நகரசபைத் தேர்தலில் தி. மு க. அமைத்த கூட்டும் நமக்குப் பறை சாற்றுகின்றன. எனவே கூட்டணி வெற்றிபெறும் என்பதில் யாருக்கும் எவ்விதமான சந்தேகமும் ஏற்பட வழியில்லை.

சென்னை நகரில் தி. மு. கழகம் நடத்திய ஊர்வலமும், நான்காவது மாநில மாநாடும் பத்திரிகையாளர்களால் விமர்சனம் செய்யப்பட்டிருப்பது நூற்றுக்கு நூறு உண்மை. இதைக் கண்டு காங்கிரஸ்காரர்கள் அளவுக்கு மீறிய ஆத்திரம் அடைந்திருக்கிறார்கள் பத்தாண்டுகளுக்கு முன் இதே பத்திரிகைகள் தி மு. க. வைப் பற்றி செய்தியே வெளியிடாமல்இருந்தபோது, தி.மு க. தலைவர்கள் நேரடியாக மக்களுடன் தொடர்பு கொள்வதன் மூலமே தம் கட்சிக்கு வலிவு தேட முடியுமென்ற நம்பிக்கையில் இருந்தார்கள். ஆனால் காங்கிரஸ்காரர்களால் இன்று அந்த நம்பிக்கையையும் பெற முடியவில்லை. இதற்கான காரணம் எல்லாருக்கும் தெரிந்ததே.

தி. மு. க. தலைவர் அண்ணாத் துரை அவர்கள் சென்னை மாநாட்டில் உரையாற்றியபோது ''நான் ஒரு இஸ்லாமியனாகப் பிறவாத முஸ்லிம்'' என்று உளங் குளிரப் பேசியிருக்கிறார். நீண்ட காலமாகவே முஸ்லிம்களுக்கும் அவருக்கும் ஏற்பட்டுள்ள தொடர்பு அவரை இவ்வாறு பேசவைத்திருக்கிறது. மீலாத் கூட்டங்களில் பேசும்போதெல்லாம் அண்ணா அவர்கள் தமக்கு

சாதி சமயங்களில் நம்பிக்கை இல்லாவிட்டாலும் இஸ்லாமியக் கொள்கைகளை முழு அளவில் வரவேற்பதாகக் கூறிவந்திருக்கிறார். முஸ்லிம்களின் மீதும் இஸ்லாத்தின் மீதும் அவருக்குள்ள தனிப் பற்றின் சின்னமாக அவர் ஏற்படுத்தியுள்ள கூட்டணியையே உதாரணமாகக் காட்டலாம். சாதிகள் ஒழிய வேண்டும் என்ற கொள்கையுடைய அண்ணா அவர்கள் சாதிக் கட்சிகளுடன் கூட்டுச் சேரவில்லை. ஆனால் அதேநேரத்தில் உலகம்முழுதும் பரவியுள்ள இஸ்லாமிய சமுதாயத்தைச் சேர்ந்த இந்நாட்டு முஸ்லிம்களின் ஏகப் பிரதிநிதி ஸ்தாபனமான முஸ்லிம் லீகுடன் கூட்டு வைத்திருக்கிறார். மதம் என்பது வேறு; சாதி என்பது வேறு. மதம் என்பது முற்றிலும் வேறுபட்ட ஒருமார்க்கத்தைக் காட்டுவதாகும், எனவே அந்த மார்க்கத்தைப் பின்பற்றும் முஸ்லிம்கள் தங்கள் சட்ட திட்டங்களை அடியோடு கைவிட்டுவிட்டு, அவரவர் வாழும் நாட்டிலுள்ள பெரும்பான்மையினருடன் ஐக்கியமாகிவிடவேண்டுமென்று அண்ணாதுரை சிறிதும் எதிர்பார்க்கவில்லை. இந்த உண்மையை மகாத்மா காந்தி நன்கு உணர்ந்திருந்தார். இப்போது ராஜாஜியும் ஒப்புக்கொள்கிறார். எனவேதான் இன்று ராஜாஜியும், அண்ணாவும் முஸ்லிம் லீக்குடன் சேர்ந்து அரசியல் நடத்துவது தமிழ்நாட்டில் நல்ல ஒற்றுமையையும், சிறந்த பண்பாட்டையும் வளர்த்து வருகிறது. இந்தக் கூட்டணி அரசியலில் மட்டுமல்லாமல் மக்களின் அன்றாட வாழ்க்கையிலும் பிரிக்கமுடியாத இணைப்பை ஏற்படுத்தி இருக்கிறது என்று சொன்னால் மிகையாகாது.

## காயிதெ மில்லத் அவர்களின் பெருநாள் வாழ்த்து!

மாட்சிமை தங்கிய அல்லாஹுத்த ஆலாவின் பேரருளால் அவனது அன்புத்தூதராம் நபி பெருமானார் (சல்) அவர்கள் வழி நின்று அந்த வல்ல இறைவனுக்காக நோற்ற புண்ணிய ரமலான் நோன்புகளுக்குமுத்திரை வைப்பது மகிமைக்கு உரிய ஈதுல் பித்ருப் பெருநாளாகும். அந்த நன்னாளிலே அன்புச் சகோதரர்கள் சகோதரிகள் யாவருக்கும் எனது மனங்கனிந்த மரியாதையான வாழ்த்துக்களைச் சமர்ப்பித்துக் கொள்கிறேன்,



நோன்பின்போது கொண்ட தன்னடக்கமும் கட்டுப்பாடும் வாழ்க்கையில் வெற்றிக்கும் மகிழ்ச்சிக்கும் இன்றியமையாததாகும். அவை வாழ்க்கை முழுவதும் இருந்து தீரவேண்டிய அவசியமான அம்சங்கள்—தன்னடக்கமும் கட்டுப்பாடுமுள்ள மக்களின் வாழ்க்கை நாட்டுக்கும் உலகுக்கும் சிறப்பையும் மேன்மையும் கொண்டு தருவதாகும். ஆகவே நோன்பில் நாம் கற்றுக்கொண்ட அந்த உயர்பாடத்தை நாம்தொடர்ந்து மேற்கொண்டு நடத்தல் வேண்டும். வல்ல இறைவன் எல்லாருக்கும எல்லா நலன்களையும் தந்தருள் புரிவானாக! ஆமீன்.

அன்புள்ள
உங்கள் சகோதரன்,
(Sd)
எம். முகம்மது இஸ்மாயில்

# பட்டமும் பாராட்டும்

"நெஞ்சில் நிறைந்த நபிமணி" என்னும் அழியாப் புகழுக்குரிய காவியத்தை இயற்றிய கவிஞர் சிராஜ் பாக்கவி அவர்கள் தற்போது மலேசியாவிலும் சிங்கையிலும் சுற்றுப்பிரயாணம்செய்து வருகிறார்கள், அவர்களுக்கு ஆங்காங்கே சிறப்பானவரவேற்புகள் நடைபெற்று வருகின்றன.

பினங்கு நகரில் தாவூது ரெஸ்டாரெண்டு ஹாலில் ஜனாப் எஸ். எம். இத்ரீஸ் ஜே பி. அவர்கள் தலைமையில் நூல் வெளியீட்டு விழா 12-10-66-ல் நடைபெற்றது. அவ் விழாவினுக்கு ஏற்பாடு செய்திருந்த தாவூது ரெஸ்டாரெண்டின் உரிமையாளர் ஜனாப் எம். என். எம். யூசுப் அவர்களின் தொண்டுள்ளத்தையும் நல்ல காரியம் எதற்கும் அள்ளிவழங்கும் பண்பையும் பாராட்டும் முறையில், அன்னாருக்கு, கவிஞர் சிராஜ் அவர்கள் "வள்ளல் மணி" என்ற சிறப்புப் பட்டத்தை வழங்கி வாழ்த்துப் பாமாலை ஒன்று வாசித்தளித்தார். வாழ்க "வள்ளல் மணி" அவர்களின் வளமான சமுதாயப்பணி!



கவிஞர் அவர்களுக்கு சிங்கப்பூரில் நடந்த வரவேற்புகளில் சிங்கை தென் இந்திய ஜம்இய்யத்துல் உலமா சபையினர் நடத்திய பாராட்டு விழாவும் குறிப்பிடத்தக்கது சிங்கை அட்டர்னி ஜெனரல் இஞ்சே அல்ஹாஜ் அஹ்மது பின் முஹம்மத் இப்ராஹீம் அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கி, சபையின் சார்பில் மௌலவி சிராஜ் பாகவி அவர்களுக்கு "நூருல் மில்லத்" (சமுதாயஒளி) என்னும் சிறப்புப் பட்டம் வழங்கி கௌரவித்தார்.

விழாவில் கலந்துகொண்ட தமிழ் முரசு ஆசிரியர் திரு. கோ. சாரங்கபாணி அவர்கள் கவிஞரின் அரும் பணியைப்பாராட்டிப் பேசினார். தமிழ் உலகமே பெருமைப்படத்தக்கபணியை சிராஜ் அவர்கள் செய்திருப்பதாக அவர் குறிப்பிட்டார். தமிழ் முரசு துணை ஆசிரியர் ஜனாப் பி. ஹாமீம் முஸ்தபா, "உமறுதரும் சீரு" ஆசிரியர், ஜனாப் வி. நூர் முகம்மது, மௌலவி முஹம்மது ஸயீத் சாஹிப், மௌலவி அப்துல் ஜலீல் சாஹிப் ஆகியோரும் பங்கு கொண்டு உரை நிகழ்த்தினர்.

அரியதும் பொருத்தமானதுமான ஒரு சிறப்புப் பட்டத்தை, அதனை அளிக்கத் தகுதியுடையவர்களிடமிருந்து பெற்றுள்ள கவிஞர் சிராஜ் பாக்கவி அவர்களைப் பாராட்டுகிறோம்.

# திருக்குர்ஆன் தெளிவுரை

## 97. நோன்பு நோற்பது எதற்காக?

“நம்பிக்கையாளர்களே, உங்களுக்கு முன்னிருந்தவர்கள் மீது விதியாக்கப்பட்டிருந்ததே போல உங்கள் மீதும் நோன்பு விதிக்கப்பட்டுள்ளது; நீங்கள் தீமையிலிருந்து தற்காத்துக்கொள்ளும் பொருட்டு”

(2: 183)

“நீங்கள் பட்டினியிருந்து நோன்பு நோற்பதன் உள் நோக்கம் என்ன?” என்று பிற மதத்தினர் முஸ்லிம்களைப் பார்த்து உண்மையாவே அதைப்பற்றித் தெரிந்துகொள்ளும் நல்ல நோக்கத்துடன் கேட்கும்போது, சரியான முறையில் விளக்கம் கூறத் தெரியாமல் சிலர் தமக்குத் தோன்றியதையெல்லாம் கூறக் காண்கிறோம். அதற்குரிய சரியான பதிலைத் திருமறையின் மேற்காட்டியுள்ள வசனம் நமக்களிக்கிறது.

இறையச்சத்தின் விளைவாக தீய காரியங்களிலிருந்து தன்னைத் தான் பேணிக் காத்துக்கொள்வதைக் குறிக்கும் சொல்லையே நோன்பின் நோக்கத்தை விளக்கும் சொல்லாகத் திருமறையில் கூறப்பெற்றுள்ளது,

இறைவனின் ஆணைக்குக் கட்டுப்பட்டு, உணவு, உடலுறவு மட்டுமின்றி தீய எண்ணங்கள், பேச்சுக்கள், செயல்கள் அனைத்திலிருந்தும் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும், நோன்பு நோற்கும் முஸ்லிம். ஆண்டிலொரு மாதம் இவ்வாறு அவன் பெறும் பயிற்சி, அவனுடைய உடலையும் உள்ளத்தையும் தூய்மைப்படுத்தி, இச்சைகளை வென்று, புலன்களின்மீது ஆதிக்கத்தை வளர்த்துக்கொள்ளவும், அதைத் தொடர்ந்து படிப்படியாக ஆத்மீகப் பாதையில் முன்னேறவும் அவனுக்கு உதவுகிறது, நோன்பு விதியாக்கப்பட்டதன் நோக்கம் அதுதான் என்பதை திருக்குர்ஆனின் இவ்வசனத்திலிருந்து நாம் தெரிந்து கொள்கிறோம்,




## 25· 'பித்ரா'வின் தர்மம்

"ஒவ்வொரு முஸ்லிமும், ஆணாயினும், பெண்ணாயினும், அடிமையாயினும், சுதந்திரராயினும், சிறுவராயினும், ஒரு மரக்கால் பேரீச்சங்கனி அல்லது வாற்கோதுமையை பித்ரா வுடைய தர்மமாக அளிக்கும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். மேலும் ஜனங் கள் பெருநாள் தொழுகைக்குப் புறப்பட்டுச் செல்லு முன்பாகவே அது அளிக்கப்பட்டுவிட வேண்டுமெனவும் அறிவித்தார்கள்!" என இப்னு உமர் கூறினர்.

[புகாரீ 24 : 70]

பித்ரின் தர்மத்தை தன்னைச் சுற்றியுள்ள எளிய உறவினர்க் கும், அநாதைகளுக்கும், தேவை யுள்ள வழிப்போக்கருக்கும் ஏழ் மையில் உழலும் பிறருக்கும் கொடுக்க வேண்டுமென்று மேலும் விளக்கப்பட்டுள்ளது.

பெருநாளின் பிறையைக் கண்டவுடன் இரவிலேயோ அல்லது அதற்கு இரண்டொரு நாள் முன்னதாகவோ கூட அதைக் கொடுக்கலாம்.

இப்போதுள்ள தம் நாட்டுக் கணக்குப்படி தொலிக் கோது மையானுல் பட்டணம் படியில் ஒன்றரை, மணிக் கோதுமையா யின் முக்கால் படி, அல்லது அதற்குரிய விலையை ஒவ்வொரு வருக்காகவும் கொடுக்க வேண் டும்.

பெருநாளுடைய மகிழ்ச்சியில் ஏற்றத் தாழ்வு இன்றி, உள்ள வர்கள், இல்லாதவர்கள் அனைவ ருமே பங்குகொள்ள வகை செய் வதற்காகவே வகுக்கப்பட்டுள் ளது இந்த அற்புதமான திட்டம் என்று தெளிவாகத் தெரிகிறது.

அனைவருக்கும் எமது ஈத் முபாரக் !

★ ★

போன் :
25194.



சென்னை நகர மத்தியில் சகல நவீன வசதிகளுடன் கூடியது. தங்கும் அறைகளில் காற்று சுழல் விசிறியும், ஸ்நான அறை, கக்கூஸ், தொலைபேசி, வேண்டிய சாமான்களை வாங்கிவர ஒரு ஆள் தனியே நியமிக்கப்பட்டிருக்கிறது. ஷை லாட்ஜ் ஹார்பர், கலெக்டர் ஆபீஸ், ஹைகோர்ட் கஸ்டம்ஸ் ஹௌஸ் முதலிய இடங்களுக்குப் பக்கத்தில் உள்ளது. குடும்பங்கள் தங்குவதற்கு பெரிய அறைகள் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சாப்பாடு, காபி, டிபன் முதலியவைகளைப் பக்கத்திலிருக்கும் பாம்பே ஸ்டையில் (BOMBAY STYLE) ஹோட்டல் **'கபே ஜெனர'**லிலிருந்து வரவழைத்துக் கொடுக்கப்படும்.

நீங்கள் ஒரு தரம் தங்கினால் மறுபடியும் இதே லாட்ஜுக்குத்தான் வருவீர்களென உறுதி கூறுகிறோம். நிர்வாகிகள் மற்றும் சிப்பந்திகள் மிகவும் மரியாதையாக உங்களுக்கு வேண்டிய தேவைகளைப் பூர்த்தி செய்வார்கள்.

# ரஜூலா லாட்ஜ் ★

**7. மண்ணடித் தெரு சென்னை-1.**

# பிறை கண்டேன்!

## "மஹதி"

**பி**றையைக் கண்டேன். துஆஓதினேன். ஓதியபடியே நின்றுவிட்டேன்.

என் மனைவி அருகே வந்து என் முகத்தை உற்று நோக்கினாள்.

"அட அல்லாஹ்வே! என்ன இது? பிறையைக் கண்டதும் அனைவரும் மகிழ்ச்சியடைவார்கள். நீங்கள் ஏன் முகத்தை 'பப்ளிமாஸ்' மாதிரி ஆக்கிக் கொண்டு சிலையாய்ச் சமைந்து நிற்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"உஸ்...ஸ்! பேசாதே! நான் சந்திரனுக்கே சென்று கொண்டிருக்கிறேன்."

"அம்மாடியோவ்! என்னை இந்த உலகிலேயே விட்டு விட்டா போகிறீர்களா? ருஷிய ராக்கெட்டிலா? அமெரிக்க ராக்கெட்டிலா?"

"நான் கட்சி சேராதவன். பிறருடைய ராக்கெட்டிலோ, 'லூனா'விலோ செல்ல விரும்பவில்லை. சுய சிந்தனை ராக்கெட்டிலே செல்கிறேன்."

"இன்னும் போய்க் கொண்டே இருக்கிறீர்களா? போய் இறங்கி விட்டீர்களா?"

"இன்னும் போய்க்கொண்டே இருக்கிறேன்."

"ஏன் உங்கள் ராக்கெட் மந்தமானதோ?"

"சட்! வாயை மூடு!— இதோ இறங்கி விட்டேன்!"

"சௌக்கியமாகப் போய்ச் சேர்ந்து விட்டீர்களா? அல்லாஹ்வுக்கு நன்றி. லூனா, சந்திரனைப் படம் பிடித்து அனுப்புகிறதாமே! அதைப் போல் சந்திரனில் நடப்பதை எனக்குத் தெரிவியுங்கள்."

"கேள்! சொல்கிறேன்! வேலி ஆப் ஸ்டார்ம்ஸுக்கு முன்னால் நின்று கொண்டிருக்கிறேன்."

"எதற்கு முன்னாலே நிற்கிறீர்கள்?"

"ஓ! உனக்கு ஆங்கிலம் புரியாதா? வேலி ஆப் ஸ்டார்ம்ஸ் என்றால் புயல்களின் பள்ளத்தாக்கு என்று அர்த்தம்"

"புயல்களின் பள்ளத்தாக்கா? சந்திரனில் காற்றுமில்லை, நீருமில்லை, நெருப்புமில்லை, மண்ணாங்கட்டியுமில்லை என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். அங்கு புயல்கள் எப்படி வந்தன?"

"உஸ்...ஸ்! அதெல்லாம் எனக்குத் தெரியாது. பெயர் வைத்த மேதாவிகளைப் போய்க்கேள். குகைக் குள்ளி

ருந்து ஓர் அதிசய உருவம் புறப்படுகிறது.''

"அது எப்படி இருக்கிறது? சொல்லுங்கள்!... சொல்லுங்கள்!''

"அவசரப்படாதே! ஒரு முதியவர் உருவம் — மிகவும் வயதானவர். நரைத்தநீண்ட தாடி முழங்கால்வரை தொங்குகிறது. தலை மொட்டையாயிருக்கிறது. கழுத்து முதல் குதிகால்வரை வெள்ளை அங்கி அணிந்திருக்கிறார். ஆனால் என்ன அதிசயம்? முகத்தில் சுருக்கங்களே இல்லை. இளமைப் பொலிவு காணப்படுகிறது. கண்களில் ஒளி வீசுகிறது. என்னைப் பார்த்து "அஸ்ஸலாமு அலைகும்'' என்று கூறுகிறார் நான் "அலைக்கு முஸ்ஸலாம்'' என்று கூறுகிறேன். என்னை மார்போடு அணைத்து முத்தமிடுகிறார். அன்போடு என்னைத் தம்முடன் அழைத்துக் கொண்டு குகைக்குள் நுழைகிறார். குகைக்குள் இருட்டே இல்லை. ஒரே ஒளிமயம்!

என்ன ஆச்சரியம்? அங்கே நீண்ட மேஜையைச் சுற்றி நாற்காலிகளில் பெருங் கூட்டம் அமர்ந்திருக்கிறது. அக் கூட்டத்திலே அனைவரும் பகட்டான பட்டாடை அணிந்திருக்கிறார்கள்.''

இச்சமயம் என் மனைவி குறுக்கிட்டாள் — "அது சரி! அங்கே பெண்களும் இருக்கிறார்களா?'' என்று கேட்டாள்.

"உம்! இல்லை?''

"அட அல்லாஹ்வே! சந்திரனில் பெண்களே இல்லையா? வெறும் ஆண்கள் உலகமா?"

"சும்மா இரு! அவசரப்படாதே!" முதியவரிடம் கேட்டுச் சொல்கிறேன். இப்போது கேள்! பெண்களும் இருக்கிறார்களாம். குழந்தைகளும் இருக்கின்றனவாம். அவர்கள் தனித்தனியாக இவ்வாறு கூட்டமாகக் கூடியிருக்கிறார்களாம்."

"ஓ! கோஷா முறை அங்கும் இருக்கிறது போலும்! அக்கூட்டத்தினர் என்ன செய்கின்றனர்?"

"எதிரே மேஜை மீது அறுசுவை உண்டிகளை வைத்து உண்ணுகிறார்கள். முதியவர் என்னையும் ஒரு நாற்காலியில் அமர்த்தி உண்ணும்படிக் கேட்டுக் கொள்கிறார்.

நான் முதியவரைக் கேட்கிறேன்: அவர் தெரிவிக்கிறார்: இது ஈத் பெருநாள் விருந்தாம், இவ்வாறு சந்திரலோகத்தில் பல்வேறு இடங்களிலும் நடந்து கொண்டிருக்கிறதாம்.

"இங்கு ஏழை, பணக்காரர் ஆகிய இருவகையினர் இருக்கிறார்களா? என்று கேட்கிறேன். முதியவர் கூறுகிறார். இருக்கிறார்களாம். ஆனால் செல்வந்தர் பெருநாள் பண்டிகையின் போது ஏழைகளுக்குத்தாம் உடுத்தியுள்ள ஆடைகளைப்போன்ற ஆடைகளையே வாங்கிக் கொடுத்து அனைவரும் ஒரு சேரத் தொழுது மஹல்லாவாரியாக ஒரே இடத்தில் கூடி ஒரே

> **சமாதானம்**
>
> **நோன்பு நோற்பது, தர்மம் செய்வது, தொழுவது இவைகளை விடச் சிறந்த செயல், ஒருவர்க்கொருவர் சமாதானம் செய்து வைத்தலாகும்.**
>
> **—நபிமொழி**

வகையான விருந்து உண்பார்களாம். எல்லாச் செலவும் பணக்காரர்களைச் சேர்ந்தது தானும். இது அவ்வுலக வழக்கமாம்." என்று கூறிமுடித்தேன்.

"யா அல்லாஹ்! நாமும் அந்தச் சந்திர மண்டலத்துக்கே சென்றுவிடலாமா?" என்று என் மனைவி கேட்டாள்.

"இதென்ன பிரமாதம்? செல்வந்தர்கள் மனம் வைத்தால், தம்முடைய மஹல்லாவில் உள்ள ஏழை எளியவர்களுக்கும் புத்தாடை வாங்கிக் கொடுத்து பொது விருந்து வைத்து அவர்களுடன் சேர்ந்து உண்பது அசாத்தியமானதா? பொது விருந்து வைக்காவிட்டாலும் ஏழைகளும் பெருநாள் அன்றாவது வயிறார உண்ண வகை செய்ய முடியாதா!"

"உம்! தாங்கள் மகிழ்ச்சிகரமாக இருக்கவிரும்புகிறார்களே யொழிய பெருநாளன்று வறுமையில் உழல்பவர்களைப் பற்றி சிந்திப்போர் யார் இருக்கிறார்?"

"அதைச் சிந்தித்த வண்ணமேதான் சோக மயமாகி நிற்கிறேன்." என்றேன்.

சி. கே. தானூர் அவர்கள் மலையாள மொழியில் எழுதிய பல சிறு கதைகள் பிரசுரிக்கப் பெற்றுள்ளன. தமிழில் அவருடைய முதல் முயற்சி இந்த சரித்திரக் கதை; எனினும் சுவையான நடையில் எழுதியிருக்கிறார்.

# நீதியின் முன்றல்

(சி. கே. தானூர்)



இரவின் மயான அமைதியில் ஆக்ரா பட்டணம் துயின்று கொண்டிருந்தது. முகலாயரின் கலைக் காதலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக கண் குளிரும் மாட மாளிகைகள் வானை நோக்கி திகழ்ந்தன.

அம் மயான அமைதியை நிலை குலையச் செய்துகொண்டு புறப்பட்ட, மணியோசை ஆக்ரா பட்டணத்தை அதிரச் செய்தது. கதியற்றவர்களுக்கு விதியளிக்கும் காவலின் சின்னமாக அவ்வோசை, மேற்கே வானில் தட்டி எதிரொலித்தது. தங்கள் கோரிக்கைகளையும் உரிமைகளையும் கேட்டு பெற்றுக் கொள்ளவும்; அதற்கு வழி தேடவும் மன்னரிடம் குடிமக்கள் கோரும் விண்ணப்பத்தின் எதிரொலியே, அம் மணியோசை!



உலக இன்பத்தின் பஞ்சணையில், மெய் மறந்து தவழும் ஆட்சியாளர்களுக்கு நாதியற்றோன் நாதத்தைக் கேட்க நேரமேது? எல்லையில்லா அல்லல்படும் அகதிகளின் துன்பத்தை உணர இதயமேது? சுற்றுப்புறங்களில் தாண்டவமாடும் வறுமைப் பேயைக் காணக் கண் பார்வையேது? ......?......? இருந்தது...! அது, மனிதனை மனிதன் நேசத்துடன் அரசாண்ட காலம்! அங்கு நீதியும் சட்டமும் தடையின்றி ஆட்சி செலுத்தின. அங்கு, நேர்மையும், சமாதானமும், சமத்துவ நோக்கமும் பூத்து குலுங்கிற்று.

அந்த மணியோசை ஜஹாங்கீர் சக்கரவர்த்தியை ஆழ்ந்த நித்திரையிலிருந்தும் தட்டி எழுப்பியதில் வியப்பில்லை! உறக்க மயக்கத்துடன் பட்டு மெத்தையில் எழுந்து அமர்ந்

தார், சக்ரவர்த்தி. நீதியின் சின்னமான அம் மன்னுதி மன்னருக்கு அதை நிறைவேற்றுமல் இனி உறக்கமேது?

காலைக் கதிரவனின் தங்கக் கிரகணங்கள் யமுனு நதியின் நீல நீரில் பட்டு பளிச்சிட்டன! ஒரு கலந்த நீலப் பட்டுப் புடவையின் ஓரங்களில் தங்கச் சரிகை பின்னி வைத்தாற்போல், அந்த நதி காட்சியளித்தது. அந்த காரத்தின் ஏகாதிபத்தியத்தைக் கவிழ்த்துவிட்ட கதிரவனை பறவைகள் இன்ப கீதத்தால் வரவேற்றன.

சோகமே உருவான நிலையில் ஒரு பெண்மணியை அவைக்கு அழைத்து வந்தார்கள். அவள் வதனத்தில் ஏமாற்றமும் துன்பமும் குடிபுகுந்திருந்தன. அவையில் அமர்ந்திருந்த அமைச்சர்கள், இராஜ தந்திரிகள், எல்லோருமே அவளுடைய துன்பத்தின் காரணத்தை ஆராய்ந்து கொண்டிருந்தார்கள்.

அவளுக்கு ஏற்பட்ட துன்பம் என்னவென்று சக்கரவர்த்தி அன்புடன் வினவினுர். கண்ணீரில் குளித்த ஒரு பெருமூச்சுடன் அவள் பதிலளித்தாள்,

"பாதுஷா! நான் ஒரு வண்ணாத்தி. நேற்று மாலை அரண்மனைப் பகுதியிலிருந்து வந்த ஒரு துப்பாக்கித் தோட்டாபட்டு என் அன்புக் கணவர் உயிர் நீத்தார். மணமாகி ஒரு சில நாட்கள்தான் கடந்துள்ளன. அதற்குள் நான்... இதோ... ஒரு விதவையாகி விட்டேன்... பாதுஷா... என் துன்பத்திற்கு ஒரு வழி காணவேண்டும்..."

ஜஹாங்கீர் சிந்தனையிலாழ்ந்தார். தன் ஆட்சியில் நிரபராதிகள் சுட்டு வீழ்த்தப்படும் அவல நிலையைக் கண்டு வாளாவிருக்க வல்ல ஓர் இதயம் அவருக்கில்லை.

"இன்று மாலை அரண்மனை வட்டாரத்திலிருந்து துப்பாக்கியால் சுட்டவர்களை ஆஜராக்குங்கள்" கட்டளை பிறந்தது!

ஒருவரும் கொண்டுவரப்படவில்லை. யாருமே அப்போது சுடவில்லையாம்! ஒரு போர் வீரன் கூட...!! அனைவரும் திகிலடைந்தார்கள்

"நாட்டில் நடமாடும் அக்கிரமங்களையும் அநீதிகளையும் ருசுப்படுத்த முடியவில்லையாம்! நெறி கெட்ட ஆட்சி! நீதியும் நெறியும் சமாதானமுமற்ற சாம்ராஜ்ஜியப் பெருமை! நெறி கெட்ட ஆட்சியால் மதி கெட்ட மாந்தர்...நீதியின் முகமூடி அணிந்து உலவும் எத்தர்கள்... கூடாது... இதை வளரவிடக் கூடாது...... கொள்ளையின்; கொலையின் உலைக்களத்தில் குற்றம் ஏது மற்ற உயிர்கள் கருணையின்றி பலியிடப்படும் இவ்விழிந்த செயல், நீதியை நிலைநாட்டும் ஒரு நாட்டில் நடந்ததாகக் காதில் விழவே கூடாது..."

பாதுஷா கர்ஜித்தார்.

திடீரெனத் தேம்பி அழும் சத்தம் கேட்டது. கன்னங்களில் கண்ணீர் அருவியெனப் பாயும் முகத்துடன் ராணி நூர்ஜஹான் குற்றம் புரிந்த விழிகளுடன் தர்பாரில் ஆஜரானர்

மிகுந்த துன்பத்துடன் ராணி அரசனிடம் கூறினர்,

"நான் புரிந்த, மாபெரும் கொடூரமான குற்றத்திற்கு எனக்கு தகுந்த தண்டனையளியுங்கள்.

இன்று மாலை, புறா ஒன்றை வேட்டையாடுவதற்காகச் சுட்டது நான்தான், ஆனால், அந்த தோட்டா இந்த சகோதரியை விதவையாக்கியதை எண்ணி வருந்துகிறேன். பாதுஷா, நீதியை நிறைவேற்றுங்கள்...''

குற்றத்தை ஒப்புக்கொண்ட, நூர்ஜஹானின் வேண்டுகோள் அவையை நிலை குலையச் செய்தது. ஜஹாங்கீர் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டார். எண்ணங்களின் போராட்டம் அந்த இதயத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்ததை முகம் தெளிவு படுத்தியது!

நிமிடங்கள் ஒரு குற்றவாளியைப் போல நகர்ந்தன...

ஆழ்ந்த எண்ணக் கடலிலிருந்து கரை கண்டதைப் போல் பெருமூச்சுடன் எழுந்தார்' ஜஹாங்கீர். கொலைக் களத்தில் ஊதுகின்ற சங்கு முழக்க உத்தரவிட்டார். அஞ்சாமையின் பாலொளி மின்னும் சுந்தர வதனத்துடன் காட்சியளித்தார், நூர்ஜஹான். ஜஹாங்கீரின் கண்களும் கம்பீரமுற்றன. அச்சமின்மையைத் தவிர மற்றொன்றும் தென்படவில்லை, அந்த முகத்தில்.

சக்கரவர்த்தி அந்தப் பெண்ணை அருகில் அழைத்தார்; குண்டுகள் நிறைந்த துப்பாக்கியொன்றை அவளுடைய கரங்களில் திணித்தார்.

என்ன நடக்கப் போகிறது என அறியாமல்; புரியாமல் அவையோர் விழித்து நின்றனர்.

''இதோ இங்கு நிற்கும் இந்த நூர்ஜஹான் காரணமாகத் தானே நீ விதவையானாய்...?''

ஜஹாங்கீர் அவளையே பார்த்து கூறினார்.

''சட்டப்படி தண்டனை பெற வேண்டியது ராணியே! கணவனை யிழந்து ஏமாற்றத்தின் உலைக்களத்திலே கிடந்து தவிக்கும் உன்னுடைய அனுபவத்தையே அவளும் பெற வேண்டும். அவளைக் கொன்றுவிட்

டால், ஒரு விதவையின் துன்பத்தை அவளால் உணர முடியாது! எனவே......அவளுடைய கணவனை என்னை நீ சுட்டு கொல்ல வேண்டும்... ம்... சீக்கிரம்...நடைபெறட்டும்......''

சற்றும் எதிர்பாராத அந்த கட்டளை, அரண்மனையை திடுக்கிடச் செய்தது; அவையோர்கள் அதிர்ச்சியடைந்தார்கள். தன் மூலம் தன் கணவர் சுட்டுக் கொல்லப்படுவதா? அதுவும் தன் கண்ணெதிரில்? அதை அந்த அன்பு மனைவியால் எப்படி பொறுத்துக்கொள்ள முடியும்? இதயம் உருகி ரத்தக் கண்ணீர் பெருக்கெடுத்தோடிற்று. ராணியின் இதயக் குமுறல் அரண்மனையை ஊசலாட வைத்தது. அமைச்சர்கள் திடுக்கிட்டார்கள்; சேவகர்கள் சிலையானார்கள்.

திடீரென, ஏதோ உணர்ந்தவள் போல் அரசனைப் பார்த்து அந்த விதவை கூறினாள்,

''ஒரு விதவையின் சுசந்த துன்ப பாரத்தைச் சுமந்த நான், என் குலத்தில் பிறந்த ஒரு சகோதரியையும் அதை சுமக்க விடமாட்டேன்...''

சக்கரவர்த்தியின் முகத்தில் கடுகு வெடித்தது. கோபக் கனல் கக்க கர்ஜித்தார், ஜஹாங்கீர்,

''இதோ! என்னுடைய நீதி நடப்பிலே நீ களங்கமுண்டுபண்ணுகிறாய். நீதியின் முன்னால் ஜஹாங்கீர் சக்கரவர்த்தியும், ராணி நூர்ஜஹானும் எனக்கு துரும்பே... உம்... தயங்காதே''

அந்த விதவை தாழ்மையுடன் வேண்டிக் கொண்டாள்.

''முடியாது... இந்த கொடும் செயலுக்கு... என்னால் முடியாது...என்னை மன்னித்துவிடுங்கள்''

ஆறுதலின் சின்னமாக அவையில் பெருமூச்சுயர்ந்தது.

இன்பத்தின் மணியோசை தென்றலிலே மிதந்துவர அரண்மனை குளிர்ச்சியடைந்தது. கர கோஷத்தால் இயற்கை பூரிப்படைந்தது.

மிக்க தாழ்மையுடன் ராணி அந்த பெண்ணிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். அன்று முதல் அவர்கள் இருவரும் ஒரு கொடியில்மலர்ந்த இருபூக்களைப் போல் தோழியரானார்கள்.

கல்வியும் செல்வமுமற்ற, ஒரு ஏழைக் குடிசையிலிருந்து வந்த சமையல் தொழிலாளியான அந்த இளம் விதவைப் பெண் அரண்மனையிலிருந்து திரும்பிச் சென்றது மனோகரமான ஒரு மாடமாளிகையை நோக்கித் தான்!

# பிறைவிடு தூது!

மேற்றிசையின் வானத்து வெள்ளிக் கீற்ருய்
மின்னுகின்ற பெருநாளின் பிறையே வந்தாய் !
ஏற்றுதற்கும் போற்றுதற்கும் இனிய நாளை
எழில்செய்ய இளம்பிறையே தோன்றி விட்டாய் !
நோற்றுவந்த பெருநோன்பை முற்ற வைத்தாய்;
நோன்புக்குப் பெருநாளோ நாளை என்ருய் !
சாற்றுகின்றேன் என்நெஞ்சக் கிடக்கை யெல்லாம்;
சந்தித்தே என்னவரில் சொல்லு வாயா !

மாலையிட்டார்; துணைவியென்ருர்; மகிழ்ந்திருந்தேன் !
மணக்கோலம் கலையுமுன்னே பிரிந்து சென்ருர் !!
சேலையொத்த விழியாளே! என்ருர்; அந்தச்
சேல்விழியைக் கண்ணீரில் நீந்த வைத்தார் !
தாழையென நீண்டிருக்கும் கரங்க ளென்ருர்;
தளிர்க்கையின் தொடிகழறச் செய்து விட்டார் !
வாழையெனத் தழைத்திருக்கும் பெண்மை என்ருர்;
வாழ்நாளைத் தனியாக்கித் தொலைக்குச் சென்ருர்!

அரும்பள்ளிக் குழல்பின்னி முடிக்க வில்லை;
அழகுமுகம் கண்ணாடி பார்க்க வில்லை;
குறும்பாகச் செவ்விதழ்கள் விண்ட தில்லை;
குமுதவிழி அஞ்சனத்தைக் கொள்ள வில்லை;
கரும்பான மொழிபேசிக் கேட்க வில்லை;
கண்ணென்றும் மணியென்றும சொன்ன தென்னணி
துரும்பான என்னுடலம் இருப்ப தெல்லாம்
தூரதேசம் சென்றவரின் வருகைக் கன்ரே !

நல்லுணவை என்கையால் படைத்து வைப்பேன்;
நறும்நெய்யை ஊற்றியதில் சொதிய வைப்பேன்;
அள்ளியள்ளி அவருண்ணப் பார்த்தி ருப்பேன்;
அவருண்டு மீந்ததைநான், அமுத மென்றே
உள்ளினிக்க நாவினிக்க உண்டி ருப்பேன்;
உடனவர்க்கு வெற்றிலையும் மடித்த ளிப்பேன்!!
அள்ளியுண்ண அவரில்லை; மீத மில்லை;
அறிந்திருந்தும் மறந்தாரே பேதை என்னை !

இன்றைக்கு நானென்ன சமைக்க வென்பேன்;
எட்டிக்காய் பொறித்தாலும் இனிக்கு மென்பார் !
வெண்டக்காய் சமைத்திடவா? என்றும் கேட்பேன்;
வேண்டாம்உன் விரல்போல இருக்கு மென்பார் !
சுண்டக்காய் பொறித்திடவா? எனவும் கேட்பேன்;
சொர்ணம்நீ தொட்டாலே சுவைக்கு மென்பார் !
கண்டங்காய் முள்ளாகிப் படுக்கை தைக்கக்
கடல்தாண்டிச் சென்றாரே என்ன செய்வேன்?

"நித்தமிங்கே உம்முருவை மனதிற் தாங்கி
நெஞ்சத்தின் சுமையாலே வதங்கு கின்றாள்;
கொத்துமல்லிச் சரமள்ளிக் குழலிற் சூடி
குமுதமலர் முகம்காட்ட ஏங்கு கின்றாள்;
இத்தரையில் உம்மையல்லால் இன்ப மில்லை
என்றிருக்கும் ஏந்திழையைக் காண்பாய்" என்றே
வித்தகரைக் கண்டுரைக்க மாட்டா யோ,நீ;
விண்ணேற்ற முதற்பிறையே எந்த னுக்காய் !

—கவிஞர் தா். காசிம்

மகிழ்ச்சியையும் இன்பத்தையும் நாலுபேரிடம் பறைசாற்றி ஆரவாரமிட்டு மகிழும் பெண்ணினம் துன்பத்தையும் வேதனையையும் மட்டும் நான்கு சுவர்களுக்குள்ளேயே புதைத்து அடக்கி விடுவதென்பது எல்லோருக்குமே கைவந்த கலையல்ல. எனினும் அத்தகைய ஒரு சில பெண்களில் பரீதாவும் ஒருத்தி.

# தண்டனை

கே. ஜெய்புனவிசா

"கடைசியா கேட்கிறேன் கையெழுத்துப் போடுறியா இல்லையா?" சாலியின் குரல் கடுமையாய் ஒலித்தது. மலை முகட்டில் இடிவீழ்ந்தது போன்ற அவனது பயங்கரமான குரலின் அதிர்ச்சியால் தொட்டிலில் உறங்கிக்கொண்டிருந்தகுழந்தை குல்ஜாரி பாத்திமா வீறிட்டு அலறியது.

"என்ன உன்னைத்தானே! நான் பாட்டுக்குக் கேட்டுக்கிட்டிருக்கேன். நீ பாட்டுக்குக் குழந்தையைத்காலாட்டிட்டிருக்கே கேட்கிறவனைப் பார்த்தா மனுஷனாத் தெரியலியா?" மீண்டும் சினம் மிகுதியால் கத்தினான் சாலி.

"என்னை என்னதான் செய்யச் சொல்றீங்க? கட்டின புருஷனுக்காக ஒரு பொண்ணு எதை வேண்டுமானாலும் தியாகம் செய்வா. எத்தனை துன்பங்களை வேண்டுமானாலும் பொறுத்துக் கொள்வா, ஆனால் எதுக்காக— யாருடைய சுகத்துக்காக இத்தனையும்செய்கிறாளோ, அவங்களே அவளுக்கும் தனக்குமுள்ள தாம்பத்திய உறவைப் பிரிச்சிட்டு தன் வழியே போக மனைவியானவள் ஒருபோதும் சம்மதிக்க மாட்டாங்கிறதை நீங்க கொஞ்சம் யோசித்துப் பாருங்க."

சிரமப்பட்டு பயந்து பயந்து பேசிய பரீதாவின் குவளைமலர் விழிகளிலிருந்து கண்ணீர் திரண்டு பெருகி கன்னங்களில் வழிந்தோடியது.

"என்னடி இது மாய்மாலம்? எனக்குபுத்திசொல்லற அளவுக்கு வந்துட்டியா? கதை புஸ்தகம் படிச்சுப் படிச்சு எனக்கே பாடம் சொல்லத் தொடங்கிட்டியா? கையெழுத்துப் போடுறியா இல்லையா?"

"என் சொத்தை விக்கிறதுக்குக் கையெழுத்து கேட்டபோதெல்லாம் மறுக்காமெப் போட்டேன் ஆனால் நான் ஹயாத்தோடு துனியாவில் இருக்கும் போது இன்னொருத்தியைகலியாணம் கடடிக்க நான் ஒருபோதும் கையெழுத்துப் போட மாட்டேன்."

"என்ன சொன்னே! கையெழுத்துப் போட மாட்டிய?" அவன் முகம் சினத்தால் சிவந்தது. மீசை துடித்தது. பறகள் நறநறவென்று அரைபட்டன.

"நீங்க என்ன செய்தாலும் சரி, நீங்கள் கல்யாணம் பண்ணிக்க நான் கையெழுத்துப் போடவே மாட்டேன்"

"மயிலே, மயிலே இறகு போடுன்னு போடாது. அடி உதவுற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவமாட்டாங்க." இயற்கையிலேயே முரடனான சாலி, சாதுவான தன் மனைவி இன்று எதிர்த்துப் பேசி விட்டாளே என்ற ஆத்திரத்தால் பசியோடு பாயும் வேங்கையாய் பாய்ந்தான். பரீதாவின் கன்னங்களில் பளார், பளாரென அறைந்தான். ஆத்திரத்தில் இன்னது தான் செய்கிறோம் என்ற உணர்வின்றி அருகில் உடை தாங்கியில்மாட்டியிருந்த இடுப்புப்'பட்டையை உருவி அவளை விளாசினான்.

"ஆ, அல்லாஹ்!" எங்கே தன் குரல் அக்கம்பக்கத்திலுள்ளவர்களின் கூரிய செவியில் கேட்டு விடுமோ என்ற அச்சத்தோடு தாங்க முடியாத வேதனையிலும் புடவை முந்தானையை சுருட்டி வாயைப் பொத்திக் கொண்டு மெல்ல எழுந்தாள்.

மகிழ்ச்சியையும், இன்பத்தையும் நாலுபேரிடம் பறைசாற்றி ஆரவாரமிட்டு மகிழும் பெண்ணினம், துன்பத்தையும், வேதனையையும் மட்டும் நான்கு சுவர்களுக்குள்ளேயே புதைத்து அடக்கி விடுவதென்பது எல்லோருக்குமே கைவந்த கலையல்ல; எனினும் அத்தகைய ஒரு சில பெண்களில் பரீதாவும் ஒருத்தி!

"ஏண்டி உன்னைக் கவனிக்க மாட்டேன்னுதானே கையெழுத்துப் போட மாட்டேங்கிறே? இனிமே உன்னை எட்டிப் பார்க்கப் போறதில்லே நான், நீஎன்ன 'லா' படிச்சவளா, என் மேலே கேஸ் போட்டிடுவேன்னு பயப்பட? நான் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்யத்தான் போறேன். நீ என்ன பண்ண முடியும்?"

'தான்' என்னும் அகந்தை, நான் நினைத்தால் எதுவும் நடக்கும் என்ற ஆணவம், 'நானா நடப்பது என்ன?' என்பதை உணராத, படைத்த வல்லோனை, காக்கும் நல்லோனை மறந்த செருக்கு அவனது ஒவ்வொரு சொல்லிலும் ஆணித்தரமாய் பளிச்சிட்டது.

பெருகிப் பிரவாகமாய் ஓடும் நீரினில் மின்னி மினுமினுக்கும் நீர்க்குமிழிகள் எத்துணை நேரம் தன் அழகைக்காட்ட முடியும்? சில நிமிடங்களுக்குள்ளாகவே மறைந்து நீரோடு ஒன்றித் தானே ஆகவேண்டும்? படைத்தவனால் அனுப்பி வைக்கப்படுகிற மனிதன் 'அவனை' மறந்து வல்லமை பேசினாலும் பின் அவனிடம் சென்றுதானே ஆக வேண்டும்? இந்த நீர்க் குமிழி வாழ்க்கைக்குள் தான் பணத்தைக் காட்டி எத்துணை ஆட்டங்கள் ஆடிவிடுகிறான் மனிதன்!

இதனால்தான் எல்லாம் உணர்ந்த ஞானிகள் பணத்தால் வரும் பற்றுக்கோடுகளை உதறி விட்டு ஈகையினால் மட்டும் வருகின்ற இன்பத்தை நாடுகிறார்கள் போலும்!

கோபத்தோடு பேசிய சாலி, தன் பெட்டி படுக்கை, துணிமணிகளை எடுத்து மூட்டை கட்டிக்கொண்டு புறப்பட்டான்.

"அத்தா...உ...ம்!" தவழ்ந்து வந்த குழந்தை குல்ஜாரி பாத்திமா தந்தையின் காலைக் கட்டிப் பிடித்து கள்ளமின்றிச் சிரித்தது. அந்த கபடமறியாத மதலையின் அழகில் ஒருகணம்

தன்னை மறந்து நின்றான் சாலி. அடுத்தகணம் குழந்தையை விலக்கிவிட்டு சரேலென வெளியேறினான் அவன். நிகழ்ந்ததை அறியாத குழந்தைச் செல்வி தன்னிரு பிஞ்சுக் கைகளை தரையில் தட்டிக்கொண்டு வீறிட்டுக் கத்தியழுதது.

தன் இதயத்தினின்று கசியும் கண்ணீரைத் துடைக்க இயலாத வளாய், தன் செல்வியின் கண்ணீரைத் துடைத்து அள்ளியணைத்து விம்மினாள் பரீதா.

கிழிக்கப்படாத அன்றைய தேதி காலண்டரில் காட்சியளித்தது, "கிழித்து எறிய வேண்டிய தாளை அகற்றி விடலாம், ஆனால் வாழ்க்கையில் புரையோடிய தீய பழக்கங்களை எப்படி அகற்றுவது?" தன்னையே கேட்டுக் கொண்டாள் பரீதா.

கண்கள் கலங்கின, நினைவு 'எங்கோ' நீந்தத் தொடங்கியது.

(2)

செல்வத்தை அள்ளிக் கொடுக்கும் கரும்பும், பருத்தியும் மிகுதியாய்க் கொழிக்கும் கொங்கு நாட்டின் எல்லையோடு உறவாடி நிற்கும் மலையாளச் சீமையான பாலக்காட்டுக்கு அருகேயுள்ள ஓலவக்கோடுதான் சாலியின் சொந்த ஊர். அவனது வாலிப மிடுக்கும், வியாபார நுணுக்கமும் சேர்ந்து சாதாரண லாரி டிரைவராக இருந்த அவனை கோவையில் பிரபல லாரி 'ஓனர்' சையது ராவுத்தரின் மருமகனாக மாற்றியது.

அவன் பரீதாவைக் கைப்பிடித்ததோ அல்லது அவனது புத்தி சாதுரியமோ எதுவாயினும் சரி, அன்றிலிருந்து அவனது தொழிலில் நல்ல லாபம் கிட்டத் தொடங்கியது. நாலு காசு கையில் குலுங்கியது சர்க்கரைக்குத்



தட்டுப்பாடு உள்ள காலம்! தமிழ் நாட்டிலிருந்துதான் கேரளத்திற்கு வெல்லம், கருப்பட்டி முதலிய உணவுப் பொருட்கள் போகவேண்டும். ஆனால் தமிழ் நாட்டிலேயே தட்டுப்பாடு அதிகமாக இருந்ததால் 'பர்மிட்' இல்லாமல் கேரளத்திற்கு எந்தப் பொருளும் அனுப்பக்கூடாது என்ற கடுமையான சட்டத்தை மீறி செயல்படத் தொடங்கினான் சாலி.

இன்ஸ்பெக்டரின் சோதனைக்கு பயந்து மற்ற லாரி டிரைவர்கள் பின்வாங்கிய சமயத்தில் திருட்டுத்தனமாக இரவோடிரவாக வெல்லத்தை மலபாருக்கு ஏற்றிச் செல்ல முன் வந்தவன் சாலி' வழக்கமாகக் கிடைக்கும் பணத்தோடு ஒரு 'லோடு'க்கு கூலியாக நூறு ரூபாய்ப் பணம் மண்டி முதலாளியிடமிருந்து டிரைவரின் கைக்கு ஓசையின்றி மாறிவிடும். அத்தோடு சரக்கைப் பெறுபவரிடமும் மாமூல் கிடைக்கும்.

நேர்மையோடு நடப்பவன் வறுமையோடு வாய்க்கும், வயிற்றுக்கும் போராட்டம் நடத்தும் போது, குறுக்கு வழியில் வெல்லம், அரிசி, சர்க்கரை என்று 'லோடு' எடுத்துச் சென்ற சாலி விரைவிலேயே பல ஆயிரங்களைச் சேர்த்தான். அது மட்டுமா? இரவு முழுவதும் கண் விழித்து லாரி ஓட்டும் அயர்வு தெரியாமலிருக்க உள்ளே ஊற்றத் தொடங்கிய 'தண்ணி' நாளடைவில் கொடிய குடிப்பழக்கமாக மாறியது. பணம் சேரச் சேர அவனுள் குடி கொண்டிருந்த சுயநலமும், பேராசையும் வளரத் தொடங்கியது மனைவிக்கு சீதனமாகக் கொடுத்த நிலத்தை விற்று அத்தோடு தன் பணத்தையும் போட்டு சொந்தமாக லாரி

யொன்று வாங்கினான் சாலி. முதலாளியாக மாறியதிலிருந்து அவன் மனத்தில் பதிந்திருந்த கொஞ்ச, நஞ்ச நல்ல குணங்களும் மறையத் தொடங்கின மனம் மாறி வந்ததைப் போலவே உடம்பும் மாறத் தொடங்கியது.

உழைத்து உரமேறிய கறுத்த உடல், இப்போதைய உயர்ரக உணவாலும், மேலை நாட்டுச் சரக்காலும் செழுமை பெற்று மெருகேறியது. கட்டிளங்காளையான சாலியைக் காண்போர் அவனை திருமணமானவன் என்று சொல்லவே முடியாது.

வியாபாரத் தளமான கோவையிலே மனைவி, மக்களோடு தனிக் குடித்தனம் வந்தவன் 'வியாபரவிஷயம்' என்று அடிக்கடி ஒலவக்கோட்டுக்குப் போகத் தொடங்கினான். இதன் காரணம் அப்போது பரீதாவுக்குப் புரியவில்லை. பின்னர்தான் உதய சூரியன் நெருங்க, நெருங்க இருள் பிரிவதேபோல் அவளுக்கு 'செய்தி' புரியலாயிற்று.

அதற்குக் காரணம் அவள் தான் என்று எண்ணினான் சாலி. இறைவனின் சோதனை போல் நடந்தது அந்த நிகழ்சி.

ஆம்!......

## (3)

குழந்தை குல்ஜாரி பாத்திமாவுக்குப் பிறகு ஒரே ஆண்டில் அவள் மீண்டும் கருவுற்றபோது குழந்தைப்பேறு அவ்வளவு சுலபமாக இல்லை. அரசாங்க மருத்துவ மனையில் பிரபல லேடி சர்ஜனின் முயற்சியால் பரீதாவைப் பிழைக்க வைத்தான் எல்லாம் வல்ல இறைவன். பாவ உலகைப் பாரேன் என்பதுபோல் பிறக்குமுன்பே உயிர் துறந்தது சிசு. சுமார் மூன்று மாத காலம் படுக்கையிலேயே உழன்ற பரீதா மெல்ல மெல்ல நடமாடத் தொடங்கியபோது டாக்டரின் வேண்டுகோள் அவளை திகைத்துத் தடுமாற வைத்தது.

''முழுக்க இரண்டு வருஷத்துக்கு நீங்க தாயாகாமல் பார்த்துக் கொள்ளனும். சுருக்கமாச் சொன்னால் நீங்களிருவரும் நெருங்கவேகூடாது. 'நோ இயாஸ்' பேசம்! நான் சொன்னது புரிஞ்சுதல்ல. வர்றேன்.' லேடி டாக்டர் சென்றுவிட்டார். ஆனால் பரீதாவோ விக்கித்து நின்றாள்

தன் நெஞ்சினில் ஊன்றி விதைத்திருந்த வித்து ஈரத்தை உறிஞ்சி வளருவதற்கு, பரீதாவுக்கு விதிக்கப்பட்டிருந்த இந்த 'கட்டுப்பாடும்' சாலிக்கு ஒரு நொண்டிச் சாக்காகியது.

சாலியின் நெஞ்சினில் ஊன்றி வளர்ந்த வித்துதான் என்னவென்று புரியவில்லையா?

ஆம்!

ஒலவக்கோட்டில் ஒட்டல் கடை நடத்திக் கொண்டிருந்த அபூபக்கர் குட்டியின் நட்பு ஏற்பட்டதிலிருந்து அடிக்கடி அவரது வீட்டில் சாலிக்கு விருந்து பரிமாறப்பட்டது. கல்பாத்தி ஆற்றின் 'சுதும்பு' மீன் வறுவலும், 'மன்ன' மீன் குழம்பும் அவர் வீட்டில் சாப்பிடும் ஆர்வத்தை அவனுக்கு அதிகப்படுத்தியது.

குட்டியின் வீட்டுத் தொட்டியில் செழித்திருந்த குறுமிளகுப் பாத்திகளுக்கு நீரூற்றும்போதும், காற்றினால் விழுந்த மட்டைத் தேங்காயிலிருந்து நார் உரிக்கும் போதும், ஒநாய்கள் உள்ளே புகாமலிருக்க மருதாணிக்

கொம்புகளை ஒடித்து வேலி கட்டியும் சதா சுறுசுறுப்புடன் வளைய வரும் மலையாள முண்டுடன் கூடிய அந்த அழகியின் கண்களைச் சந்திப்பதற்கே அவன் அங்கு செல்வது வழக்கம். ஏற்கனவே மனைவியிருப்பினும் கையில் பணமிருந்தால் இன்னொன்றையும் கட்டி வைக்கத் தயங்காத அபூபக்கர் குட்டியின் செல்ல மகள் சபியாவை அவன் நிக்காஹ் செய்ய விரும்பியதில் வியப்பில்லை!

ஊருக்கு வாய்ப்பூட்டுப் போட நொண்டிச் சாக்குதான் 'ரெடிமேடாக' இருக்கிறதே! ஆனால் முதல் மனைவியின் ஒப்புதல் கையெழுத்து வேண்டுமே? அப்போது விழித்துக் கொண்ட பரீதா, கணவனால் அடித்து நொறுக்கப்பட்ட போதும் கையெழுத்துப் போடவே இல்லை!

## (4)

விழிகளினின்றும் பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் பரீதா. அவள் நெஞ்சினின்றும் பிறந்த நீண்ட பெருமூச்சு வேதனையைச் சுமந்து வந்தது.

அவள் உள்ளம் குமைந்தது. இறைவனிடம் மானசீகமாகப் பிரார்த்தித்தாள் பரீதா.

"அல்லாஹ்! என்னையும் ஒரு பெண்ணாய்ப் படைத்து இந்த துனியாவில் வாழ வைத்த இறைவா. எத்தனையோ துன்பங்களில் என்னைக் காத்து கருணை காட்டியதுபோல் இனியும் காப்பாற்று. அவர் குடித்துவிட்டு வரும்போதெல்லாம் அவரைத் திருத்துவதற்காக எத்தனையோ சித்திரவதைப் பட்டிருக்

கிறேன். ஆனால் அழவில்லை. என் பணம் சொத்து அனைத்தும் பலவந்தமாக அவரால் பறிக்கப் பட்டபோதும் கலங்கவில்லை. ஆனால் 'மனைவி' என்ற தகுதியை மட்டும் இன்னொருத்தி பறிக்க நான் விடமாட்டேன். ஒரு முஸ்லிம் நான்கு பெண்கள் வரை மணந்து கொள்ளலாம் என்று நீ அனுமதி கொடுத்திருக்கிறாய். ஆனால் எல்லா மனைவிகளையும் ஒரே மாதிரியாக பாவித்து நடத்த வேண்டுமென்ற நிபந்தனையையும் விதித்திருக்கிறாய். அதுபோல நடக்க அவரால் முடியவே முடியாதே அல்லாஹ்! ஆகையால் அந்த உரிமையை என் ஒருத்திக்கே சொந்தமாக்கு ஆண்டவனே.'' அநாதரவான நிலையில் மற்றவர்களிடம் சொல்லமுடியாத குறைபாடுகளை ஆண்டவனிடம் தானே மனம்விட்டு முறையிட முடியும்.

பணப்பசை உள்ளவரை இறைச்சியைக் கண்ட கழுகுகளாய் வட்டமிடும் போலிகள் நெருக்கடியான சந்தர்ப்பத்தில் விலகி விடுவதைப் போல் பரீதாவின் அப்போதைய தவிப்பிற்கு ஆறுதலாக ஒரு வார்த்தை கூறுவதற்குக் கூட ஆளில்லை.

'இந்நேரம் அங்கே நிக்காஹ் முடிந்திருக்கும்! ஹூம்! என் தலையில் ரப்பு எப்படி எழுதியிருக்கிறானோ அப்படித்தானே நடக்கும்,' பரீதாவின் மனத்தறி எண்ணங்களை நெய்தது.

கண்ணீரும், பெருமூச்சுமாகக் கலங்கித் தவித்தாள் பரீதா.

''அம்மா வீட்டிலே யாருங்க, கதவைத் திறங்க.'' யாரோ வெளியிலிருந்து பரபரப்பாக

அழைத்தனர். வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்தாள் அவள். 'யாரது?' கதவைத் திறந்து ஒருக்களித்தாற்போல் வெளியே பார்த்தாள். இரண்டு, மூன்று பேர் நின்றிருந்தனர். அடிக்கடி தன் கணவனைத் தேடிவரும் லாரி ஆபீஸ்காரர்கள் என்பதைக் கண்டாள்.

''கல்யாணத்துக்குப் போறவழியிலே...மழையிலே கார் சறுக்கி கவிழ்ந்திடுச்சு. இரண்டு மூன்று பேருக்கு நல்ல அடி. சாலிக்கு காலில் பலமான காயம். பெரியாஸ்பத்திரிக்குக் கொண்டு வந்திருக்காங்க!'' அவசரமாக விஷயத்தைச் சொன்னார்.

பரீதாவின் எதிரே உலகமே இருண்டது. யாரோ தூக்க முடியாத பாறங்கல்லைத் தூக்கித் தன் தலையில் போட்டது போல் அதிர்ச்சியால் விழி பிதுங்க விறிட்டவாறு மயங்கித்தரையில் சாய்ந்தாள் அவள்

## (5)

''என்னங்க, ஹார்லிக்ஸ் கரைச்சுக்கொண்டு வரட்டுமா?'' பரீதாவின் பரிவான குரலைக் கேட்டு மெல்ல அவளை நிமிர்ந்து பார்த்தான் சாலி

'ஊம்'' ஹார்லிக்ஸைப் பருகியவன் பரீதாவையே ஆர்வம் பொங்க நோக்கினான். அவன் பார்வை அவளிடம் மன்னிப்புக்காக மன்றாடியது.

''என்ன அப்படிப்பார்க்கிறீங்க மனசிலே எந்தக் கவலையும் வைக்காதீங்க. ஏதோ இந்தவரை உயிருக்கு ஆபத்தில்லாமே காயத்தோடு போனதே அதுக்காக அல்லாவுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும்.''

''பரீதா, ஒரேயடியா உயிர் போயிருந்தா எவ்வளவு நல்லாயிருக்கும்? அப்படியில்லாமெ ஒடியாடித் திரிஞ்ச காலையே ஆண்டவன் பிடிங்கிட்டானே. ஆக்ஸிடெண்ட்டிலே காலைப் பறி கொடுத்துட்டு பழகினவங்க முன்னாலே இனிமுடமா நான் நடமாடணுமேங்கிறதை நினைக்கும் போது உயிரே போயிருக்கக் கூடாதான்னு துடிக்கிறேன்.''

''அப்படியெல்லாம் சொல்லாதீங்க. இதெல்லாம் ஆண்டவனின் சோதனை இதைப்பொறுத்துக்கொண்டு வாழ்வதுதான் வாழ்க்கை! இன்பம் வரும் போதுமட்டும் என்றும் வாழ்க்கை இப்படியேஇருக்கக்கூடாதான்னு துள்ளுகிறோம். ஆனால் துன்பம் வரும்போது வேதனையைத் தாங்காமெ பறந்து போகத் துடிக்கிறோமே. இதைப்போல எல்லோருமே பறந்து போயிட்டா இந்த துனியாவே காலியாயிடாதா? முடம் என்று உங்களையே நீங்க ஏன் தாழ்த்திக்கிறீங்க? டாக்டர் சொன்னப்படி பம்பாயிக்குப் போய் பெரிய டாக்டர்கிட்டே இடது காலுக்கு ரப்பர் வெச்சுட்டா நீங்களும் எல்லாரையும் போல நடமாடலாமே. கவலைப் படாதீங்க'' கணவனுக்கு இதமாக ஆறுதல் கூறினாள் உண்மைத் துணைவியான பரீதா.

''பரீதா என்னை மன்னிச்சிடு. உனக்கு நான் இழைத்த துரோகத்திற்கு ஆண்டவன் சரியான தண்டனை கொடுத்திட்டான். ஒரு ரெண்டு வருஷம் உன் உடம்பு தேறும்வரை காத்திருக்காமெ மலையாளத்திலே கல்யாணம் செய்யப் போனேனே அந்த அநியாயத்தைப் பொறுக்காத ஆண்

டவன் போகிற வழியிலேயே விபத்து மூலம் காலைப் பிடுங்கிட்டான். கால்போனது தெரிஞ்சதும் உன்னோட மனக்குமுறல் தான் அப்படிய யிடுச்சின்னு அவங்களும் மாறிட்டாங்க. என்னை மன்னிச்சிடு பரீதா. உன் கற்பு நெறிதான் கோட்டையாய் நின்று என் உயிரைக் காப்பாற்றியதுன்னு நினைக்கும் போது என் வேதனை கூட பறந்து போகுது உன் முகத்தை ஏறெடுத்தும் பார்க்கக்கூடாதுண்ணு ஆணவமாய்ப் பேசிட்டுப் போனேன். ஆனால் இப்போ உன் நிழலிலேதான் தேறிட்டு வர்றேன். ஆண்டவனை மறந்து அகம்பாவமாய் நடந்த எனக்கு 'அவன்' தண்டனை மூலம் நல்ல புத்தியைக் கொடுத்திட்டான்."

பரீதாவின் கரத்தைப் பற்றி கண்களில் ஒற்றியபடி பேசினான் சாலி. அவன் உள்ளத்தில் படிந்திருந்த மாசு மெல்லக் கரைந்து கண்களில்கண்ணீராய்வழிந்தது. கணவனின் மனமாற்றத்தைப் புரிந்துகொண்ட பரீதா அவனது கண்ணீரை பெருமிதத்தோடு துடைத்தாள்.

# இதயத்தில் ஒரு நோய்

"ஷைக்கோ"

"எண்சாண் உடம்புக்கு சிரசே பிரதானம்"—என்ற சொற்ருெடர் ஒன்றை நாம் கேவிப்பட்டிருக்கிருேம்.

ஆனல் இன்றைய நிலேயில், அவ்வாறு சொல்வதை விட, "எண்சாண் உடம்புக்கு இதயமே பிரதானம்." என்று சொல்வதே, பொருத்த முடையதாகப் படுகின்றது!

இப்போது ஏற்படக் கூடிய மாணங்களில்,பெரும்பாலான மரணங்கள், மாரடைப்பு, இதயக்கோளாறுகளால் ஏற்படுபவைகளாகவே இருக்கக் பார்க்கின்ருேம். இந்த வகையில் இதயத்துக்கு, இப்போது பெரும் பிரதானம் ஏற்பட்டிருக்கின்றது என்பதை நாம் மறுக்க முடியாது!

இதயத்தில் ஏற்படக்கூடிய நோய்கள், மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவைகளாகவும் கூட இருக்கின்றன.

அத்தகைய இதய நோய்களில், சிலவகையானவை, நாம் அடிக்கடி கேள்விப் படக் கூடியவைகளாகும்

இதயத் தாக்குதல் Heart Attack என்று கூறப்படுகின்ற நிலேமை இதயத்தின் தசைக்குள் இரத்தத்தைச் செலுத் தக்கூடிய, இரு குழாய்கள் குறுகிப்போய் விடுவதால், அல்லது, அதில் இரத்தமானது கட்டிப்போய் அடைப்பு ஏற்படுவதால், இதயம் வேலே செய்யாமல் நின்றுபோவதால் ஏற்படுவதாகும்.

வாத இதய நோய்-Rheumatic Heart Disease என்னும் ஒருவகை இதய நோயும் உண்டு. இந்த நோயானது இதயத்தின் அடைப்புக் கருவிகளேயும், தசை பாகத்தையும் வடுப்படுத்தி, இரத்தத்தைப் பல பாகங்களுக்கும் அனுப்பக்கூடிய இதயத்தின் சக்தியைக் குறைத்துவிடும். அதனுல், மனிதனே வாத சுரத்தில் படுக்கையாகப் போட்டுவிடும்!

இன்ஞெரு வகையான, அதி இரத்த அமுக்கம்—High Blood Pressure -என்ற நோயும் உண்டு. இதயத்திலிருந்து போகக் கூடிய இரத்

தக் குழாய்களின் துவாரம் சிறிதாகி விடுவதால், இதயம் அதிக வேலை செய்து, இரத்த அமுக்கத்தை அதிகப்படுத்த வேண்டி ஏற்படும். இதனால், இரத்தக்குழாய்களும் கடினப்பட்டுத் தடித்துப் போய்விடும் இது முற்றும் படி விட்டால், முடிவு மரணம்தான்!

இத்தகைய விநோதவகை இதய நோய்கள் மனிதனைச் சாடி நின்றாலும்கூட, இன்றைய மனித நாகரிகம், அவற்றையெல்லாம் முறியடித்துச் சிதறவைக்கும் அளவுக்கு வளர்ந்துள்ளது, என்று நாமெல்லாம் பெருமைப்பட முடியும்!

"ஒவ்வொரு நோய்க்கும், அதைத் தீர்க்கும் மருந்துண்டு"—என்று நபிகளார் (ஸல்) அவர்கள் சொல்லிச் சென்ற வாக்கு, மெய்யாகும் வகையில், எல்லாவகையான நோய்க்கும், அதைத் தீர்க்கும் மருந்து வகைகளை, மருத்துவ உலகம் கண்டே வருகின்றது.

அதற்கேற்ப, இதய நோய்களுக்கும், வகை வகையான மருந்துகள் கண்டே வருகின்றார்கள் மருத்துவர்கள். இதயத்தில் நோய் ஏற்பட்டால், மிக எளிதாக, நவீன கருவிகள் கொண்டு, நெஞ்சைக் கீறி, இதயத்தைத் தனியாக வெளியில் எடுத்து, அம் மருத்

துவர்கள் சிகிச்சை செய்யவும், துணிந்து விட்டிருக்கிறுர்கள் இப்போது, மேனுடுகளில் !

இப்படி, எந்நோய்க்கும் நன் மருத்துவம் பார்க்கும் முறை பெருகி வருகிறது—என்பதில் நாமெல்லாம் பெருமைப்படத் தான் வேண்டும் !

ஆனுல்...ஆனுல்...

மருத்துவர்களைக் கொண்டு மருத்துவம் பார்க்க முடியாத, மிகப் பயங்கரமான, இதயத் தைத் தாக்கும் நோய் ஒன்று உண்டு! அந்நோய், வேறு எந்நோயையும் விட அச்சம் தரத்தக்கது— அழிவுதரத் தக் கது !

அது எந்நோய் என்று தெரி யுமா உங்களுக்கு ?

அதுதான், தீங்கு தரும் பாவநோய்! பாவம் சேர்க்கும் இதய நோய் !

இந் நோயைப்பற்றி, நபிக ளார் (ஸல்) அவர்கள், அழ கான அபாய அறிவிப்பு ஒன் றைச் செய்தார்கள் :

"உங்களுடைய உடலில் ஒரு தசைக்கட்டி இருக்கின் றது. அது கெடாமல் இருக் கும் காலம் வரை, உங்கள் உடலும் கெடாமல் இருக்கும் அது கெடுமாஞல், உங்கள் உடலும் கெட்டு விடும் !"

இந்த நபி (ஸல்) அவர்க ளின் அபாய அறிவிப்பில் காணக்கூடிய 'தசைக் கட்டி' என்பதுதான், அந்த இதயம்! 'அது கெடுவது' என்பது தான், இதயத்தில் பாவம் தோன்றுவது !

பாவ எண்ணங்களும், தீங் கான நோக்கங்களும் உருவா கும் இடம் இதுதான்! அவ் இதயத்தில் அத்தகு எண்ணங் கள் உருவாகுமாஞல், அது மனிதனை பாபாத்மாவாக்கி, நரகை நோக்கிச் செல்லத் தக்க பிராணியாக அமைத்து விடும் !

தீங்குகளிலிருந்தும், பாவங் களிலிருந்தும் மனிதன் தன் னைத் தற்காத்து, இதயத்தை இனிதாக்கி, உடலத்தை ஒழுங்காக்கி, நல்வாழ்வு வாழ்ந்து நலம் பெற வேண்டு மாஞல்,

அவன் செல்லவேண்டிய மருத்துவர்,

நல்லதைப் போதிக்கும் நல மிக்க மார்க்க அறிஞர்கள் போன்றுரேயாவும் !

அவர்கள் தரும் பிணி நீர்க் கும் மருந்து குர்ஆன், ஹதீஸ் அறிவுரைகளும், இன்னபிற நல்லுரைகளுமே யாகும் !

அவற்றிற்கு அடங்காத வியாதி–பவநோய்–வேறு எவற்றிற்கும் அடங்காது !

★ ★ ★

அனைவருக்கும் எமது ஈத் முபாரக்!

பினாங்கு

# தாவூது ரெஸ்டாரண்ட்

மிக்க நேர்த்தியானது; மிக்க ருசிகரமானது என்று மக்களின் நன்மதிப்பைப் பெற்ற சிறந்த உணவகம்




புதிய மூன்று மாடிக் கட்டிடத்தில் ஏர்க்கண்டிஷன் வசதியுடன்

# Dawood Restaurant

PHONE: 61617

63 Queen Street, PENANG.

# பெருந்தன்மை

எம். ஆர். எம். முகம்மது முஸ்தபா



அப்துல்லாஹ்வுக்கு இரு புதல்வர்கள் அக்தர், அக்பர் என்று. அவர்களைப் பெற்றெடுத்தபோது அவர் அடைந்த மகிழ்ச்சியை சொல்லி முடியாது மான்கன்றைப் போன்ற தம் காதற் புதல்வரைக் காணும போதெல்லாம் அப்துல்லாஹ் மனத்தில் கொள்ளைப் பெருமை குமிழியிடும் ஆனால் பிள்ளைகள இருவரும் வயதில் வளர்ந்த போது அவர்கள் இருவருக்கு மிடையே வேற்றுமையும் வளர்ந்தபோதுதான் அவர் மனம் வருந்தத் துவங்கினர்.

அக்தரும் அக்பரும் உண்மையில் கீரியும் பாம்புமாகவே மாறினர்கள். எதற்கு எடுத்தாலும் இருவரும் போட்டியிட்டார்கள 'இவனுக்கு என்ன நான் இளைத்தவனு?' என்னும் மனநிலை இருவருக்கும் இருந்தது. ஆனால் ஒன்றில் மட்டும் அவர்கள் இருவருக்கும் இடையில் ஓர் ஒற்றுமை உண்டு 'அப்பா எப்பொழுது சாவார்?' என்பதுதான் அது. 'வாழ்வின் இளவேனில் இளமைப்பருவம். அதன் இனிமையைத் துய்க்க விடுவதில்லை இந்த அப்பாக்கள்' என்று எண்ணுவதில் அவர்கள் ஒருவராயிருந்தார்கள். தந்தையின் சொத்துக்களைத் தம் விருப்பம் போல் செலவிட அவர்கள் துடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களின் ஆசையையும் கெடுப்பானேன்?' என்றுதானே, என்னவோ ஒரு நாள் நெஞ்சுவலிக்கிறது என்று வீடுவந்து படுத்தவர்தாம் அப்துல்லாஹ், கொஞ்ச நேரத்திற் கெல்லாம் பொட்டென்று போய்விட்டார். பொய்யாகப் பிள்ளைகள் இருவரும் புரண்டு அழுதார்கள் அழும் போதே பாவி மனிதனுக்கு மூச்சு திரும்பி வந்துவிடக் கூடாதே' என்றும் பிரார்த்தித்துக்கொண்டார்கள். அவர்கள் அஞ்சியதுபோல் அப்துல்லாஹ்வுக்கு அடங்கிய மூச்சு ஒன்றும் திரும்பிவந்து விடவில்லை.

புதைத்து விட்டு வந்தவர்கள் கொஞ்சம பொறுக்கக்கூடாதா? பிள்ளைகள் இருவரும் அப்பாவின் பெட்டியைத் துளாவத் துவங்கினர். பணத்தைக் கைப்பற்ற ஒருவன் முனைந்தான், பத்திரங்களை எடுத்துக்கொள்ள இன்னொருவன் முயன்றான். சொத்துக்களைப் பங்கிட்டுக் கொள்வதில் அவர்கள் இடையே பெரும் சண்டையே மூண்டு விட்டது குத்து வெட்டு என்று போய்விடும் என அறிந்த பெரிய மனிதர்கள் சிலர் பஞ்சாயம் செய்ய முன் வந்தார்கள். இருந்த சொத்துக்களை இருவருக்கும் அவர்கள் பங்கிட்டபோது அக்தர் தனக்கு எது வேண்டும் என்பானே அதனையே அக்பரும் கேட்டான. அக்பர் எதைக்கேட்பானே அதனைத் தனக்குத் தந்

தால் தான் உண்டு என்பான் அக்தர். இருவரும் விட்டுக் கொடா மனப்பான்மை கொண்டிருந்ததால்பஞ்சாயத்தார்கள் இருந்தவை அனைத்தையும் இரண்டிரண்டாகப் பிரித்து, பிரிக்க முடியாததைப் பிளந்து ஆளுக்கு ஒரு துண்டு போட்டார்கள். இப்படி பிரிக்கப்பட்டவற்றுள் ஒன்று அவர்கள் வீட்டில் நூறு ஆண்டுகளுக்கு மேல் இருந்தபெட்டகம். பாட்டிகட்டிய பட்டுச்சேலையின் ஊடேயும், தந்தையின் ஜரிகைத் தொப்பியின் நடுவேயும் கத்தி பாய்ந்தது.

அம்மிக்கல்லிலிருந்து ஆறு வேலி நிலம்வரை பிரித்துக் கொண்டபின் எஞ்சியிருந்தது ஒரே ஒருபொருள். "அதனை யார் வைத்துக் கொள்ளுகிறீர்கள்?" என்று பஞ்சாயத்தார் கேட்டார்கள்.

'அண்ணாவே வைத்துக் கொள்ளட்டும்' என்றான் இளையவன்.

"இல்லை, இல்லை, தம்பியிடமே இருக்கட்டும்' என்றான் மூத்தவன்.

இத்தனை பொருள்களிலும் அவர்கள் இருவரும் ஒருவருக்கு மற்றவர் பெருந்தன்மையுடன், தாராளத் தன்மையுடன் பிரிக்காமல், பிரிக்க முடியாவிட்டால் பிளக்காமல் முழுசாக விட்டுக் கொடுத்த பொருள் எது தெரியுமா?

அவர்களைப் பெற்று வளர்த்த தாய். அதுவும் எப்படிப்பட்ட தாய் சொத்து எதுவும் எனக்கு வேண்டாம். என் பிள்ளைகளே போதும் என்று சொன்ன தாய்.



# மார்க்க சட்டத்தில்
# அரசினர் தலையீடு!

(நாடு முழுமைக்கும் குறிப்பாக, திருமணம், பிரிவினை, சொத்துரிமை என்பனவற்றில் ஒரே விதமான சிவில் சட்டம் தான் இருக்க வேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் அரசினர் எடுக்கும் முயற்சியைப் பற்றி முஸ்லிம் பாராளுமன்ற உறுப்பினர்களின் கருத்தறிய இந்திய அரசாங்க சட்ட மந்திரி விடுத்திருந்த மடலுக்கு முஸ்லிம் லீக் பாராளுமன்ற உறுப்பினர்களான காயிதெ மில்லத், சி. எச். முஹம்மது கோயா, ஏ. கே. ஏ. அப்துஸ் ஸமத் ஆகியோர் கையொப்பமிட்டு அளித்த பதிலின் சில பகுதிகள் கீழே தரப்படுகின்றன.)

இந்திய அரசியல் நிர்ணய சபையில், அரசியல் சாஸனத்தின் 44-வது பிரிவு விவாதிக்கப்பட்ட பொழுது, எங்கள்முஸ்லிம் லீக் பிரதிநிதி, ஒரே விதமான சிவில் சட்டம் கொண்டு வருவது என்பது நாட்டிலே பின்பற்றப் பட்டுவரும் தனிப்பட்ட சட்டங்களை எந்த விதத்திலும் பாதிக்காது என்று தெளிவாக்கும் வகையில், ஒரு திருத்தத்தைப் பிரேரேபித்தார், ஆனல் அந்தத் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. எனவே எங்கள் கட்சியின் தலைவர், சபையின் முதல் வராகிய காலஞ் சென்ற மதிப்புக்குரிய பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினர்; அதில், மக்களுடைய நம்பிக்கையையும், மதத்தையும் பாதிக்கக்கூடிய இப்படிப்பட்ட பிரச்சினையை வாக்கெடுப்பின மூலம் முடிவு செய்யக் கூடாது என்றும் எனவே இந்தப் பிரச்சனையை மீண்டும் இந்திய அரசியல் சபையில் விவாதிக்க வேண்டும் என்றும் கோரியிருந்தார். இதற்கு பண்டிட்ஜீ எழுத்து மூலம் தந்த பதிலில். இந்தப் பிரச்சினையை மீண்டும் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள அவர் ஒத்துக்கொள்ளா விட்டாலும், (ஷரீஅத் எனப் படும்) முஸ்லிம்களின் சொந்தச் சட்டத்தைப் பொறுத்தவரை,

முஸ்லிம்கள் அவர்களாகவே விரும்பும் வரை எந்தவிதமான திருத்தமும் செய்யப்பட மாட்டாது

என உறுதி மொழியளித்திருந்தார்.

அரசியல் அமைப்பின் 44-வது பிரிவு (இந்தியா முழுமைக்கும் ஒரே வித சிவில் சட்டம் இருக்க வேண்டும் என்று கூறும் பிரிவு) சிபாரிசு செய்யும் தன்மை வாய்ந்ததே தவிர சட்டரீதியாக நிலை நாட்ட வேண்டிய கட்டாயத்

தன்மைவாய்ந்தது அல்ல. அன்றி, நமது அரசியல் அமைப்பின் 25-வது பிரிவு எல்லா மக்களுக்கும் நம்பிக்கை சுதந்திரத்தையும், விரும்பும் மதத்தைப் பின்பற்றும் உரிமையையும் பூரணமாக அளிக்கிறது. இந்த உரிமை சட்ட பூர்வமாகவும் நிலைநாட்டும் தன்மையுடையதாகும். எனவே தான் பண்டிட்ஜீ. 44-வது பிரிவு மீண்டும் விவாதிக்கப்பட வேண்டுமென்பதை விரும்பவில்லை போலும்.

1952-ஆம் ஆண்டில் விசேஷ விவாக மசோதா டெல்லி ராஜ்ய சபையில் சமர்ப்பிக்கப்பட்ட பொழுது. அதன் பிரிவுகளில் சில ஷரீஅத் சட்டத்திற்கு முரண்பட்டவை என்ற அடிப்படையில் ஆட்சேபனைகள் எழுப்பப்பட்டன. அந்த மசோதா பொதுமக்களுடைய அபிப்பிராயத்தை அறிவதற்காக அறிவிக்கப்பட்டு பொது மக்களுடைய கருத்துக்களை அறிந்த பிறகு மீண்டும் ராஜ்யசபையில் சமர்ப்பித்த வேளையில் சட்ட மந்திரி பேசும் பொழுது,

முஸ்லிம்கள் ஒரு சமுதாயம் என்ற முறையிலே இந்த சட்டத்திற்கு எதிராக இருக்கிறார்கள்

என, அவர் சேகரித்த தகவல்களின் அடிப்படையில் கூறினார்.

என்றாலும் முஸ்லிம்களின் சொந்த சட்டமாகிய ஷரீஅத் சட்டத்தில் தலையிடக்கூடிய, ஒரேவித ஸிவில் சட்டம் இருக்க வேண்டும் என்ற கோரிக்கை இடையிடையே எழுப்பப்பட்டு முஸ்லிம் சமுதாயத்திற்கு மனவேதனையையும், கவலையையும் அளித்து வந்திருக்கிறது.

முஸ்லிம்கள் ஷரீஅத் சட்டத்தில் செய்யப்படும் எந்தமாற்றத்தையும் எதிர்ப்பதற்குரிய காரணம் இயற்கையானதாகும், ஷரீஅத் சட்டம் எனப்படும் முஸ்லிம்களின் சொந்தச் சட்டம் இஸ்லாமிய திரு வேதமாகிய திருக்குர்ஆனின் பிரிக்க முடியாத ஓர் அங்கமாகும் இது ஏதோ பழக்க வழக்கங்களினாலோ, பாரம்பரியத்தினாலோ உண்டான சட்டமல்ல. ஆனால், இஸ்லாமியக் கருத்துப்படி அல்லாஹ் அருளிச் செய்த திருக் குர்ஆனிலிருந்து நேரடியாகப் பெறப்பட்டதாகும். முஸ்லிம்கள், திருக்குர்ஆனை முற்

ருகப் பின்பற்றி யொழுகக் கடமைப்பட்டிருக்கிருர்கள். இந்த விஷயத்தில் முஸ்லிம்களுக்கு வேறு மார்க்கமேயில்லை. திருக்குர்ஆனிலிருந்து பெறப்பட்ட அடிப்படைகளை— சட்டங்களை— மாற்றவோ, மாற்றுவதற்கு அங்கீகாரமளிக்கவோ அவர்களுக்கு எத்தகைய உரிமையும் இல்லை.

இதை ஏதோ பிற்போக்குத் தன்மை யென்றோ - பிடிவாதப் போக்கு என்றோ கூறிவிட முடியாது. ஆனால், இது அவர்கள் தங்களுடைய வாழ்வின் நெறிமுறைகளாக ஏற்றுக்கொண்டுள்ள மதத்தின் தெளிவான இலகுவான அங்கமாக இருப்பதே இதன் காரணமாகும்.

நம்முடைய நாட்டு அரசியலமைப்பின்படி, இவ்வாறு, மக்கள் தங்கள் மதத்தைப் பின்பற்றி ஒழுகுவதென்ற இயற்கையான உரிமை அங்கீகரித்து ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது.

முஸ்லிம்களின் திருமண சட்டத்தைப் பற்றி சில நண்பர்கள் பேசுவதையும் எழுதுவதையும் கண்டால், முஸ்லிம்கள் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியாரைத் திருமணம் செய்துகொள்ள இஸ்லாம் தாராளமாக அனுமதி வழங்கியிருப்பதுடன், அதை ஊக்குவிக்கவும் செய்கிறது என அவர்கள் கருதுவதாகத் தெரிகிறது. இந்த சட்டத்தில், ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரை-நான்கு மனைவியர் வரை — திருமணம் செய்து கொள்ளலாம் என்றிருக்கும் விதி ஒருசில சூழ்நிலைகளில் ஒரு அனுமதியாக — இன்னும் சொல்லப்போனால் எத்தனை மனைவியரை வேண்டுமானாலும் மணந்து கொள்ளலாம் என்றிருந்த முறைக்கு வரம்பு வகுக்கும் நெறியாக—இருக்கிறதே தவிர வேறல்ல என்பதை இவர்கள் அறியவில்லை. அன்றி இந்த விதி முறை சமுதாயத்தில் புரையோடியுள்ள சில தீமைகளைப் போக்கி நன்மையை நல்குவதாகவும் அமைந்திருக்கிறது.

உண்மையாக நடைமுறையில் பார்க்கப்போனால், மிகப்பெரும்பாலான முஸ்லிம்கள் ஒரே தாரம் உடையவர்களாகவே வாழ்ந்து வருகிருர்கள். இதைப்பற்றி புள்ளி விவரம் சேகரிக்கப்படுமானால், இந்த உண்மை எளிதாக முடிவாக நிரூபிக்கப்படும்.

நம்முடைய நாட்டில் முஸ்லிம்களின் ஷரீஅத் சட்டத்தை மாற்றுவதற்கு ஆதாரமாக சில முஸ்லிம் நாடுகளின் உதாரணம் எடுத்துக் காட்டப்படுகிறது. ஆனால் சில முஸ்லிம் நாடுகளிலே நடந்து வருவது என்னவென்றால் அங்கெல்லாம் சட்டத்தை விலக்கி அமல்படுத்தும் வழிமுறைகளில் சில பல மாற்றங்கள் நாடப்படுகின்றனவே தவிர, சட்டத்தின் அடிப்படையில் எந்தவித மாற்றத்தையும் அந் நாடுகள் செய்யவில்லை. ஆனால் அவை எப்படியிருப்பினும் குறிப்பாக சட்டங்களை மாற்றியமைக்கும் இத்தகைய செயல்களில் வேறெந்த நாட்டிலும் கடைபிடிக்கப்படும் வழி முறைகள் நாமும் பின்பற்றத்தக்க விவாதத்திற்கு அப்பாற்பட்ட சட்டங்களாக நாம் ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. சட்டத்தை விளக்கிக் காட்டவும், அதை அமல்படுத்தும் செயல் முறைகளை வகுத்துக் கூறவும் போதிய ஞானம்பெற்ற கல்வியாளர்களும் சட்ட மேதைகளும், நம் நாட்டிலும் இருக்கத்தான் செய்கின்றனர்.

முஸ்லிம் நாடுகளை உதாரணம் காட்டிப் பேசும்போது, நாமும் ஒன்று கேட்க விரும்புகிரோம்.

இந்த முஸ்லிம் நாடுகள் எல்லாம் அந்த நாடுகளில் உள்ள சிறு பான்மையினரும், முஸ்லிம் களின் சொந்தச் சட்டத்தைத் தான் பின்பற்ற வேண்டும் என நிர்ப்பந்தம் செய்கின்றனவா?

ஒரே சிவில் சட்டம் வேண்டு மென்று பேசுபவர்கள் நாட்டின் ஒருமைப் பாட்டிற்கு, இப்படிப் பட்ட சட்டம் தேவையெனக் கூறுகின்றனர் அவர்கள் கூறும் ஒருமைப்பாடு மற்றவர்களின் மத, நம்பிக்கையில் தலையிடுவ தாகும். என்றாலும், அத்தகைய ஒருமைப் பாட்டையே அவர்கள் வலியுறுத்துவதா? அப்படியா னால், 'ஒரே நாடு—ஒரே மதம்' என்ற கொள்கையைத்தான் அவர்கள் எதிரொலிக்கிறார்களா? இப்படிப்பட்ட கொள்கை நடை முறைக்கு ஏற்றதுதானா? ஆனால், இந்த நாட்டிலே எண்ணச் சுதந் தரம் இருக்கும் வரையிலே அப் படிப்பட்ட கொள்கை நிறைவே றுவது என்பது நடக்கவே முடி யாத காரியமாகும் இன்னும் சொல்லப் போனால் இந்தக் கொள்கையை வலியுறுத்துவ தென்பது, ஒருமைப் பாட்டை விட மக்களை பிரிவினைப் பாதைக்கே வழி நடத்திச் செல்லும் என்போம்.

மேலும் எல்லாத் துறைகளி லும் ஒரேவிதமான சட்டங்களை இயற்றுவது கொண்டுதான் ஒரு மைப்பாட்டை உண்டாக்க முடி யும்என்று எண்ணுவதும் தவறா கும். நன்றாக நிலைநாட்டப்பட்ட ஒருமைப்பாடு மிளிரும் — உலக ஜனநாயக நாடுகளிலே — ஒரே துறையிலே கூட பலவிதமான சட்டங்கள் பின்பற்றப்படுகின் றன உதாரணமாக ஐக்கிய அமெ ரிக்க நாட்டிலே, மதுவிலக்கைப் பற்றிய சட்டம் ஒரு ராஜ்யத் திலிருந்து மற்றொரு ராஜ்யத்தில் மாறுபட்டதாகவே இருக்கிறது. தடுக்கப்பட்ட திருமண உறவு முறைகளைப் பற்றி வகுக்கப்பட் டுள்ள சட்டங்கள் கூட நாட்டி லுள்ள ஒரு வகுப்பினருக்கும் பிறிதொரு வகுப்பினருக்கும் மாறுபட்டதாகவே இருக்கிறது. இப்படிப்பட்ட எடுத்துக்காட்டுக் கள் எண்ணற்றவை இருக்கின் றன

உண்மையாகவே தேசிய ஒரு மைப்பாட்டிற்கு அடிப்படை ஆதாரமாக அமைந்திருப்பது, மக்களின் மன ஒற்றுமையே தவிர, ஒரே விதமான சட்டங் கள் அல்ல. இப்படிப்பட்ட ஒற் றுமை, பரஸ்பரம் சகிப்புத் தன்மை, பரஸ்பரம் மரியாதை, பரஸ்பரம் அன்பு பாராட்டல், ஒருவர் மற்றவருடைய கருத்து களையும், வாழ்க்கை முறைகளை யும். மதித்துப் போற்றுதல்— ஆகிய பண்புகளாலேயே அடைய முடியும், நம்முடைய அரசியல் அமைப்பு இத்தனைக் கும் வழிசெய்கிறது. அவற்றை சரியான முறையில அமல் நடத் துவது சொணடே நம்முடைய நாட்டை, தகர்க்க முடியாத சரியான அடிப்படையில் அமைக்க முடியும்.

இறுதியாக நாங்கள் கூற விரும்புவது இதுதான். முஸ்லிம் களின் சொந்தச் சட்டமாகிய ஷரீஅத்தில் எந்த விதத் தலை யீடும் கூடாது இதை மாற்ற வேண்டுமென அரசாங்கத்தி டம் ஏதாவது முயற்சி இருக்கு மானால் அந்த முயற்சி கைவிடப் படவேண்டுமென அரசினரிடம் வற்புறுத்தி வேண்டுகிறோம்.




## 9. கேள்வியும் பதிலும்!

அன்றைய போரை இயக்க விடுதியின் மேல் மாடியில் வந்தமர்ந்த ஸஅதின் உள்ளத்தில் பாரசீகப் படைகளை முஸ்லிம் குதிரை வீரர்கள் பிளந்து செல்வதற்கு வழி விடாமல் பலமான கோட்டைச்சுவர் போல நின்றுகொண்டிருந்த யானைகளின் பிரச்சினை இன்னும் தீர்ந்தபாடில்லையே என்ற நினைவுதான் மேலோங்கியது.

வழக்கம் போல அவர் கட்டளையொன்றைக் காகிதத்தில் எழுதினார், கீழே வீசினார். கொஞ்ச நேரத்தில் அவர் முன் இருவர் வந்து நின்றனர். தோற்றத்தைக் கொண்டு அவர்களைப் பாரசீகர்கள் என்று சொல்லிவிடலாம் என்ற போதிலும், அவர்கள் முஸ்லிம்களாக இருந்தார்கள். இஸ்லாமியச் சேனையில் சேர்ந்திருந்தார்கள். அவர்களிடம் தளபதியார் ஸஅத் கேட்டார்:

"அதோ வரிசை வரிசையாக நிற்கின்றனவே யானைக் கூட்டங்கள்! நம்முடைய படை முன்னேற்றத்திற்கு அவை எவ்வளவு பெரிய தடையாக இருக்கின்றன? இப் பிரச்சினையைச் சமாளிக்க உங்களால் வழியேதும் சொல்ல முடியுமா?"

சற்று நேரம் யோசனையில் மூழ்கியவர்களாக நின்றனர் அப் பாரசீக முஸ்லிம்கள். பிறகு தமது மனதில் பட்ட எண்ணத்தை ஒருவர் சொல்ல, அதை மற்றவர் ஆதரித்துப் பேசினார்.

"அப்படியா? உடனே அதைச் செய்து பார்ப்போம்!"—

மீண்டும் ஒரு காகிதம் எடுத்தார் ஸஅத். அவசர அவசரமாக அதில் ஏதோ வரைந்து கீழே எறிந்தார். அங்கு காத்திருந்த வீரன் வழக்கம் போல அதை எடுத்துக்கொண்டு, புரவி மீது ஏறியவனாக களம் நோக்கி விரைந்தான். அங்கே ஒரு புறம் படை நடத்திக் கொண்டிருந்த காஃகாவிடம் தந்து திரும்பினான்.

தளபதியாரின் கட்டளையைத் தாங்கிவந்த அந்தக் காகிதத்

துண்டைப்பிடித்த அவர் உடனே தம்முடைய துணையதிகாரிகளில் ஒருவரை அழைத்துக் கொண்டார். பின்னர் அவ்விருவரும் பரிகள் மீது தாவியேறியவர்களாக கூர்மையான முனைகள் கொண்ட வேல்களை ஏந்திய வாறு பாரசீகர்களின் வேழப் படையை நோக்கி விரைந்தனர்.

அவ்வேழங்களின் தலைமையில் இருபெரும் கரிகள் தங்கள் கனத்த உடல்களை அசைத்த வாறு நின்று கொண்டிருந்தன. அவற்றைக் குறியாகக் கொண்டு அலாதி வேகத்துடன் பாய்ந்து வந்தனர், காஃகாவும் அவருடைய சகாவும். அவற்றை நெருங்கியபோது, தாம் ஏறியிருந்த குதிரையின் கடிவாளத்தைத் தமது இடது கரத்தால் இழுத்துப் பிடித்தவராக, அதன் அங்குவடியில் அழுத்தமாக எழுந்து நின்றார் காஃகா. பின்னர் தம்முடைய வலது கரத்தில் பிடித்திருந்த நீண்ட ஈட்டியை முதலாவது பெரிய யானையின் கண்கள் ஒன்றில் சடாரெனக் குத்தி அழுத்தினார். அதேநேரம் அவருடனிருந்த வீரர் அம்மிருகந்தின் மற்றொரு கண்ணைக் குத்திக் குருடாக்கினார். அப்போது கொஞ்சமும் தாமதியாமல், அக்கரியின் தும்பிக்கையை வெட்டி வீழ்த்தினார் காஃகா. தன்னுடைய கண்களில் ஏற்பட்ட புண்களின் வேதனையைத் தாளாது அது அலறிக் கொண்டிருந்த வேளையில், அதனருகே நின்ற இரண்டாவது யானையின்பால் தங்கள் கவனத்தைப் பாய்ச்சினர், காஃகாவும் மற்றவரும். அதன் கண்களையும் அதிக துணிச்சலுடன் ஈட்டியால் குத்தி அதன் தும்பிக்கையையும் இரண்டு துண்டாக்கினர்.

களமெல்லாம் அதிரப் பயங்கரமாகப் பிளிறிக் கொண்டே அவ்விரு வேழங்கள் முன்னேற, முஸ்

லிம் வீரர்கள் இருவரும் கண்ணி மைக்கும் நேரத்தில் அப்பால் விலகினர். பெருமதங் கொண்ட அந்த யானைகள், கண் தெரியாத நிலையில், தங்கள் குன்றனைய சதைத்திரள்களை இழுத்துச் சென்றன. தங்களுடைய தலைவர்களுக்கு நேர்ந்ததைக் கண்டு பெரிதும் அச்சமுற்ற மற்ற யானைகளும் பீதிகொண்டவைகளாக அவற்றைப் பின் தொடர்ந்து ஓடின. அவ் வேழங்களைக் கட்டுப்படுத்த முடியாத மாவுத்தர்கள் அவற்றின் முதுகுகளின் மீதிருந்து கீழே குதித்தனர்.

வெகுஆத்திரத்துடன் அவர்கள் வீசிய வாட்களிலிருந்தும் எய்த அம்புகளிலிருந்தும் தப்பித்து, தங்கள் முகாம் திரும்பினர் காஃகாவும் அவருடன் சென்றவரும்.

ஆனால் ஆற்றின் திசையில் சென்ற யானைகள் களம் திரும்பவே இல்லை.

அதைக் கண்டு கடுஞ்சினம் கொண்ட பாரசீகர்களும் உற்சாக மீறிய முஸ்லிம்களும் ஒருவரை நோக்கி ஒருவர் அடர்ந்தேறி, கடூரமாகச் சண்டையிட ஆரம்பித்தனர். இரு தரப்பிலுமே அநேகர் பற்பல வீரதீரச் செயல்களைப் புரிந்த நிலையில் போர் மும்முரமாகி நாளெல்லாம் தொடர்ந்து நடந்தது. மெல்ல மெல்ல மேற்கு வானத்தில் தாழ்ந்து வந்த சூரியன் முடிவில் தொடுவானத்துக்கப்பால் மறைந்த பின்னும் இரு சேனைகளும் களத்திலே நீடித்து நின்றன. இரவு முழுதுமே அவை மூழுமூச்சுடன் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. அதனால் களத்தில் பெருக்கெடுத்தோடிய குருதி வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தவனைப் போலக் காலைக் கதிரவன் செம்முகத்துடன் கீழ்திசையில் எழுந்தான். அப்போதும்கூட பாரசீகர்களும் முஸ்லிம்களும் பயங்கரமான கைகலப்பில் ஈடுபட்டிருந்தனர்.

"ஊக்கம் கொள்ளுங்கள்! எதிரிகளை முடிவாகச் சாடி நொறுக்குவோம்!" இஸ்லாமியச் சேனையிலிருந்த பலவேறு கோத்திரங்களைச் சேர்ந்த வீரர்களை அவர்களின் தலைவர்கள் வீறுடன் அழைத்தனர்.

"அல்லாஹு அக்பர்!" என்று முழக்கியவர்களாக களத்தின் பல முனைகளிலுமிருந்த முஸ்லிம் வீரர்கள் தங்கள் புரவிகளிலிருந்து கீழே குதித்தனர். வீராவேசமுடன் வாட்களை உருவியவர்களாக, எதிரியணிகளை ஊடுருவிப் பிளந்து பாய்ந்தனர்.

அவர்களில் ஒரு சிலர், காஃகாவின் தலைமையில் அசாதாரண துணிச்சல் கொண்டவர்களாக, உயர்ந்த பொன்னாசனத்தில் வீற்றுத் தன் படைகளுக்கு விறைப்பான உத்திரவுகளை இட்டுக் கொண்டிருந்த தளபதி ருஸ்தும் இருந்த திக்கை நோக்கிப் பாய்ந்தனர். அதைக் கண்ட மற்றும் பல முஸ்லிம் வீரர்கள் அத்திசையில் விரைவாகக் குவிந்தனர்.

ருஸ்தும் அதைக் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. அதனால் அவனுக்கு வியப்பு மேலிட்ட போதும், உடனே தனது சிம்மாதானத்திலிருந்து குதித்தான் அவன். தன்னுடைய நீண்ட வாளை விறுக்கென்று உருவியவனாக அதைத் தன்னைத் தாக்க வந்த முஸ்லிம்கள்பால் அதிக வீரமுடன் சுழற்றி வீசினான். முஸ்லிம்கள் பலருக்கு அவனுடைய வாள் காயமுண்டாக்கியது போலவே, முஸ்லிம்களின் வாட்கள் பட்டு அவனுடம்பிலும் பல விழுப்புண்கள் ஏற்பட்டுக் குருதி சொட்டிக் கொண்டிருந்தது. ஆயினும் கொஞ்சமும் மனம் தளராது போராடிக் கொண்டிருந்த அவனை நோக்கிப் புயலெனப் பாய்ந்தார் ஹலால் அல்ஃகமா. ஒரு நொடியில் அவனைத் தன் வாளால் வெட்டி வீழ்த்தினார். அப்படியே அவனுடைய அரியாசனத்தில் தாவிக் குதித்தவராக, மகிழ்ச்சி பீறிட்ட குரலில் கூறினார்:

"கஅபாவின் இறைவன் மீது சத்தியமாக! பாரசீகப் பெருந்தளபதி ருஸ்துமை நான் வீழ்த்திவிட்டேன்!"

களமெங்கும் எதிரொலிக்கும் படியாக வெற்றி முழக்கங்களை எழுப்பினர் முஸ்லிம் வீரர்கள்.

அப்போது, தங்கள் தளபதி களத்திலே விழுந்ததைக் கண்ட பாரசீகப்படைகளிடையே குழப்பமும் கலவரமும் ஏற்பட்டன. பீதிமுற்றிய நிலையில் அவை பலவாறு பிரிந்து சிதைய, எதிரிகள் பல பக்கங்களிலும் சிதறியோடினர்.

அவர்களை விடாது தொடர்ந்து சென்றனர் முஸ்லிம் வீரர்கள். அவர்களுடைய வாட்களுக்கு மேலும் பல்லாயிரம் பாரசீகர்கள் பலியாயினர். அப்பகைவர்கள் பெருமிதமுடன் ஏந்திவந்திருந்த புனிதக் கொடி துஃபாஷே கவயானி முஸ்லிம்களின் வயமாக, பாரசீகர்கள் தீர்க்கமான முறையில் முறியடிக்கப்பட்டுப் போயினர்.

அந்நிலையில், போரில் உயிர் தப்பிய பாரசீகப் படையினர் வடக்கு நோக்கி ஓடினர்.

அந்த மாபெரும் வெற்றிக்காக வல்லவனுக்கு நன்றி செலுத்திய ஸஅத், பாரசீகரின் வலிமைக்கு மிகப் பலத்த அடி தரும் வகையில் முஸ்லிம்கள் அடைந்த வெற்றிபற்றிய செய்தியுடன் வீரர் ஒருவரை மதீனவுக்கு விரைந்தேகும்படி செய்தார்.

ஒட்டகத்தின் மீதேறியவராக அவ்வீரர் சோலைகளையும் பாலையையும் கடிதில் கடந்து சென்றார்.

மதீனவின் எல்லையை அவர் வந்தடைந்தபோது—

காலைச் சூரியனின் கடுமையையும் பொருட்படுத்தாது, பட்டையின் ஓரம் நெடிதுயர்ந்த மனிதர் ஒருவர் நின்றுகொண்டிருந்தார். ஒட்டகை வீரர் அவரை நெருங்கிவர, அவர் முகத்தில் ஒருவித ஆதுரம் படர்ந்து மிக ஆவலுடன் கேட்டார்:

"நீர் எங்கிருந்து வருகிறீர்?"

"கதிஸியாவிலிருந்து!"- ஒட்டகத்தை நிறுத்தாமல் ஒட்டத்திலே விட்டபடியே சொன்னார் அஞ்சல் வீரர்.

அந்த நெட்டையான மனிதரோ ஒட்டகத்தின் விரைவான நடைக்கேற்பத் தொங்கோட்டம் ஓடத்துவங்கினார். பரபரப்புடன் கேட்டார்: ''அங்கு நடந்து கொண்டிருந்த போரின் முடிவு என்ன?''

''அல்லாஹ்வின் கிருபையால் முஸ்லிம்களுக்கு வெற்றி கிடைத்து விட்டது!'' என்றவராக ஒட்டகத்தைத் தொடர்ந்து ஓட்டிக்கொண்டு சென்றார், வெற்றிச் செய்தியை கலீபாவுக்கு ஏந்தி வந்த வீரர்.

வளர்ந்த மனிதனின் முகத்தில் ஓரே மகிழ்ச்சியின் மலர்ச்சி! மதீனாவை நோக்கி விரைந்து கொண்டிருந்த ஒட்டகத்தின் காலடிகளோடு இணைந்தோடிய நிலையிலே, அதன் மீதிருந்த வீரரிடம் அடுத்தடுத்துப் பல கேள்விகளைக் கேட்டு வந்தார் அவர். ஒட்டகை வீரரும் அலுக்காமல் பதில் சொல்லிவந்தார். அவர் வாயிலாக, பாரசீகத் தளபதி ருஸ்தும் களத்திலே மடிந்து பட்டார்—பகைவரில் முப்பதினாயிரம் பேர்கள் உயிரிழக்க, முஸ்லிம் சேனையில் எண்ணாயிரத்து ஐநூறு வீரர்களே இறந்து போயினர் என்பன போன்ற பல விபரங்களை அறிந்த போது, ஓடிவந்து கொண்டிருந்த மனிதரின் வாய் மொழிந்தது:

''அல்ஹம்துலில்லாஹ்!''

அவ்வாறு கேள்வியும் பதிலுமாக ஒட்டக வீரரும் அவரைத் தொடர்ந்து ஓடிய நெட்டை மனிதரும் மதீனாவந்து சேர்ந்தனர்.

''அஸ்ஸலாமு அலைக்கும், அமீருல் மூமினீன்!''—

நாலு புறங்களிலுமிருந்து அடக்கமான முறையில் அழகிய மூகமன் கூறினர் பொதுமக்கள். காலை வெய்யிலில் தமது உடம்பெல்லாம் வியர்வை வழிய வந்து கொண்டிருந்த நெடிதுயர்ந்த மனிதருக்கு ஆழ்ந்த மரியாதை காட்டி விலகி வழி விட்டனர்.

'அப்படியானால் இவர்?... விசுவாசிகளின் தலைவரான உமர் அவர்களா?'—

ஒட்டக வீரருக்கு ஓரே வியப்பும் திகைப்புமாகப் போய்விட்டது. அதற்குமுன் அவர் கலீபா உமரைப் பார்த்ததில்லை.

'என்ன கைசேதம்! ஒட்டகத்தை நாம் விரைவாக ஓட்டி வரச் செய்து விட்டோமே!'—

தம்முடைய உள்ளம் பதறியவராக ஒட்டகமீதிருந்த முஸ்லிம் வீரர் சொன்னார்:

''அமீருல் மூமினீன்! என்னை மன்னிக்க வேண்டும். தாங்கள் இன்னாரென்று இதுவரை எனக்குத் தெரியாமல் போய் விட்டது. தாங்களும் சொல்லவில்லை. உண்மையறிந்திருந்தால், இப்படி நான் ஒட்டகத்தின் மீதும் தாங்கள் ஓட்டமும் நடையுமாகவும் வரும்படி நேர்ந்திருக்காது. ஒட்டகத்தைநிறுத்தி தங்களுக்கு உரிய மரியாதை செய்திருப்பேனே! அறியாமல் நிகழ்ந்துவிட்ட இத் தவறைத் தாங்கள் மனம் பொறுத்துக் கொள்ள வேண்டும்!''

அதைக்கேட்ட கலீபா உமர் தம்முடைய குரலிலோ முகபாவத்திலோ எவ்விதமாற்றமுமில்லாமல் சாவதானமாகப் பதிலிறுத்தார்.

''பரவாயில்லை, சோதரரே! அதனால் என்ன தீமை வந்து விட்டது? தயவு செய்து போரைப் பற்றிய விபரங்களைத் தொடர்ந்து சொல்லும்!''

ஒட்டக வீரரின் மனது நிம்மதியடைந்தது. இன்னும் அதிக ஆவலுடன் அவர் கதிஸிய்யா வெற்றி பற்றிய விபரங்களைக் கலீபாவுக்கு எடுத்துரைத்தார்.

(தொடரும்)

டிசம்பர் இதழின் தொடர்.

# விஞ்ஞானமும் கலையும்!

மூலம்: முஹம்மது மார்மடியூக் பிக்தால் (ஆங்கில முஸ்லிம்)
தமிழ்: ஆர். பி. எம். கனி, பி. ஏ., பி. எல்.



பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில்தான் உண்மையான நாடகங்களைப் பற்றிய அறிகுறி முஸ்லிம் உலகில் தோன்றலாயிற்று. அப்போது பாரசீகத்திலும், துருக்கியிலும் சில நல்ல நாடகங்கள் எழுதப்பட்டன. அவற்றிலும் முஸ்லிம்கள் நடிக்கவில்லை. எழுதியவர்கள்தான் முஸ்லிம்கள்; நடித்தவர்கள் அர்மேனியர்களும் யூதர்களுமேயாகும். முஸ்லிம் வாழ்க்கையிலிருந்தும், சரித்திரத்திலிருந்தும் எடுக்கப்பட்ட சம்பவங்களை தமாஸ்கஸைச் சேர்ந்த ஷேக் ஒருவர் நாடகங்களாக்கினுர். அவை இலக்கியத்திலும் இடம் பெற்றுவிட்டன. மிகப் பெரிய முறையில் தயாரிக்கப்பட்ட 'சலாஹுத்தீனுல் அய்யூபி' என்ற சரித்திர நாடகமும் 'அபீபேஹ்' என்ற கவிதை நாடகமும் என் நினைவில் வருகின்றன.

இன்று மேல் நாட்டில் நடிகர்கள் பெற்றுள்ள ஸ்தானத்தை, அன்று முஸ்லிம் நாடுகளில், கதை சொல்வோர் பெற்றிருந்தனர். இக்கதை சொல்வோர் மக்கள் வாழ்க்கையை அடிப்படையாகக்கொண்டு அற்புதமான, உணர்ச்சியூட்டும், நீதி போதனை செய்யும், ரசமான கதைகளை உண்டாக்கி வந்தனர். கீழ் நாடுகளில் இக்கதைகளை இலக்கியத்தில் சேர்த்ததில்லை. எப்போதாவது ஒரு சில அறிஞர்கள், அவற்றை இலக்கிய மதிப்புள்ளவையாக்க முயன்றதுண்டு. அரபியில் இத்தகைய கதைகளை 'மகாமா' என்பர். 'மகாமா', 'சமர்' ஆகிய இரு வார்த்தைகளும் ஒரே பொருளுடையவைதான். இரவில் கேளிக்கைக்காக உட்கார்ந்திருப்பது என்றே இரண்டுக்கும் பொருளாகும். ஆனுல் 'மகாமா' என்பது ஆடம்பரமான இடங்களில் கூடியிருந்து கேட்பது எனவும், 'சமர்' என்பது பொதுவான காப்பிக் கடைகளிலோ தெரு மூலைகளிலோ கூடியிருந்து கேட்பது எனவும் பொருள்படும்.

அல்ஹரீரீ என்ற நாவலாசிரியர் தனது நாவலின் கருத்

தையும், அதில் வரும் தீயவ னை அபூஜைது என்பவன் பெயரையும் அபூ செய்யித் அல் ஹஜ்ஜாஸி என்ற பெய ருடைய நீளமான நாடோடிக் கதையிலிருந்தே எடுத்தார். நாம் யாவருமறிந்த கதை வரி சையான "ஆயிரத்து ஓர் இர வுகளை" மேல் நாட்டினர் அரபு இலக்கியத்திலேயே சிறந்த நூலாகக் கருதுகின்ற னர். அபூ ஜைது கதை வரி சைப் போன்ற மிகப் பெரிய வரிசைகள் பலவுண்டு இஸ் லாம் பரவுமுன் இருந்த அந் தார் என்ற கவிஞனைப்பற்றிய கதைவரிசையும், சைப்—பின்—ஸி—யஸல் என்பவரைப் பற்றிய கதை வரிசையும் அரபி யில் அதிகப் பிரசித்தி பெற் றவை. சைப்—பின்—ஸி-யஸல் என்பவர் நைல் நதியைக் கெய்ரோவுக்கு எப்படி அழைத்து வந்தார் என்பது ரஸமான கதை.

அந்தாரைப் பற்றிய கதை இன்னும் ரஸமானது. எகிப்து அரசனுடைய அரண்மனையில் மிக இழிவான ஒரு விஷயம் நடந்துவிட்டது. மக்கள் யாவ ரும் அதைப் பற்றியே பேச ஆரம்பித்து விட்டனர். அவர் களுடைய கவனத்தை வேறு பக்கம் திருப்பவேண்டிய அவ சியம் ஏற்பட்டது. உடனே

அரசர் அறிஞனை ஓர் எழுத்தாளனை அழைத்தார். ஓர் ரசமான கதையை எழுதும்படி கூறினர். அக்கதையை நெடுகிலும் கதைசொல்வோரிடம் கொடுக்கும்படி செய்தார். அந்த எழுத்தாளன் எழுதியதுதான் அந்தாரைப் பற்றிய கதை. அந்தார் என்ற அரபுக் கவிஞருடைய ஒருபாடல் அரேபியாவின் ஏழு இனிய பாடல்களில் ஒன்ருகக் கருதப்படுவது. இக்கவிஞனைப் பற்றிய கதைத் தொடரின் ஒவ்வொரு தொடரும் ஒரு மிக முக்கியமான கட்டத்தில் முடிவடைந்தது. இவை ஒன்றின்பின் ஒன்ருய்த் தெருக்களில் கதை சொல்வோரிடம்சென்றன. தம்மைச்சுற்றி உட்கார்ந்திருப்போருக்குத் தீப்பந்த வெளிச்சத்தில் கதை சொல்வோர் தமது நடிப்போடு சேர்த்து அதைப் படித்துக் காட்டினர். விரைவிலேயே அரண்மனையில் நடந்த விஷயத்தைப் பற்றிப் பேசிய மக்கள் அதை மறந்தனர், அவர்கள் கவனம் தொடர் கதையிடம் சென்று விட்டது. இவ்விதம் அந்தாரைப்பற்றிய ரஸமான கதை எகிப்தில் பிரசித்திபெற்றது. அதற்கு ஓரிரு நூற்ருண்டுக்குப்பின் தமாஸ்கஸிலுள்ள கதை சொல்வோர் அக்கதை

யைச் சொல்லத் தொடங்கினர். இவற்றில் ஒரு பகுதியைக் கேட்ட ஒருவன் அன்றிரவு முழுதும் அதற்குப்பின் என்ன நடந்தது என்பதைப் பற்றிச் சிந்தித்தவாறு தூங்க முடியாது கஷ்டப்பட்டான். தன் எதிரிகள் கையில் அகப்பட்ட அந்தார் என்னஆனார் என்று அறிய ஆவல் கொண்டான். அந்த இடத்தில்தான் கதை சொல்பவன் நிறுத்தியிருந்தான். இந்நபர் நள்ளிரவில் கதை சொல்வோன் வீட்டிற்கே போய் அவனை எழுப்பினான். கதையின் அடுத்த கட்டத்தைத் தனக்குக் கூறுமாறும் அதற்காகத் தான் பணம் உதவுவதாகவும் வேண்டினான். அடுத்த கட்டம்வரை கதையைக் கேட்ட பின்தான் அவன் மனம் நிம்மதியுற்றது, இக்கதைகளை அன்றைய முஸ்லிம் உலகம் சற்று இன்பமூட்டுவதாகஎண்ணினாலும் இழிவானதாகவே கருதிற்று. இவை மூன்றும்தர மக்கள் படிப்பதற்குரியவை என எண்ணிற்று. ஆனால் இன்று நாம் அவ்விதம் கருத முடியாது. காரணம் அவை இன்று மேல்நாட்டில் நாவல் என்று எழுதப்படுகிற இலக்கியத்தின் ஒரு முக்கிய பகுதிக்கு ஆரம்பமாக விளங்கியிருப்பது தான்.

சிற்பத்தில் முஸ்லிம் நாகரிகம் சாதித்ததென்ன என்று கூறவேண்டியது அவசியமா? கார்தோவா மாதாக் கோயிலிலிருந்து, சமர்கந்து சவுக்கம் வரை, அல்ஹம்ப்ராவிலிருந்து

தாஜ்வரை, டான்யூப் நதிக் கரையில் பெஸ்தை நோக்கி நிற்கும் ஞானியார் கபுர்முதல், கெய்ரோவிலும் கைரூனிலும் உள்ள மணராக்கள்வரை, ஜெருஸலத்திலுள்ள பாறையின் மேலுள்ள கும்பத்வரை இஸ்லாமியச் சரித்திரத்தில் எத்தனை நாடுகளின் பெயர்கள் காணப்படுகின்றனவோ அத்தனை சிற்ப மோஸ்தர்கள் இருக்கின்றன. அவையாவும் இஸ்லாமியச் சிற்பங்களே. அவற்றில் யாவரும் பாராட்டும் ரகங்கள் உள்ளன. அழகை ரஸிப்பவனுக்காக

இஸ்லாமிய சிற்பக்கலை சாதித்தவை மஸ்ஜித்களாகவும், அரண்மனைகளாகவும், கோட்டைகளாகவும், பள்ளிக்கூடங்களாகவும், ஆஸ்பத்திரிகளாகவும் எத்தனையோ பூலோக சொர்க்கங்கள். ஆரம்ப முஸ்லிம் தலைவர்கள் அழகுணர்ச்சியுள்ளவர்கள்; விக்ரஹ மோஸ்தரில் உள்ள கலைகளை அவர்கள் கவனிக்கக் கூடாததால், அவர்கள் கவனம் முழுமையும் இயற்கை அழகை அதிகப்படுத்துவதிலேயே செலவிடப்பட்டது. அவர்கள் ஆக்கிய கலா சிருஷ்டிகள் சுற்றுப்புறங்களிலுள்ள இயற்கையோடு பொருந்தியவைகளாகவே இருந்தன. பெருந் தூண்களைக்கொண்ட கட்டடங்கள், கடை வீதிகள் ஆகியவை கடலாழத்தில் தெரியும் பொருட்களைப் போன்ற தோற்றமுடையவை. நிழலின் குளுமையும், வெயிலின் வண்ணமும், காம்பீர்யமும், சக்தியும் நாசூக்கும் கலந்து தோன்றுபவை முஸ்லிம் சிற்பங்கள். உலக முழுவதுமுள்ள முஸ்லிம் சிற்பங்களில் இவற்றைக்காணலாம். அரபு கலிபாக்களைப் போலவும் துருக்கி சுல்தான்களைப்போலவும், மொகலாய சக்ரவர்த்திகளைப் போலவும் தோட்டங்கள் ஆக்கியோரும், அழகு படுத்தியவர்களும், சிற்பத்தை ஆதரித்தோரும் வேறு எங்கும் இருந்ததில்லை எனலாம். தாஜ் மஹாலின் கதையை நீங்கள் யாவரும் அறிவீர்கள். ஆனல் செவைல் அரசர் முஃதமித்தைப் பற்றிய கதையை நீங்கள் கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். ஒரு தடவை முஃதமித் தன் மனைவியோடு பிரயாணஞ் செய்து கொண்டிருந்தார். மலை உச்சிகளை வெண் மேகங்கள் தழுவி நிற்பது அவர் மனைவி ஐயாமத்துக்கு இன்பமூட்டுவதாக இருந்தது. அதே இன்பத்தை அவளுக்கு எக்காலத்தும் ஊட்டுவதற்காக, கார்தோவாவுக்கு மேற்கே நின்ற குன்றின் உச்சியில் முந்திரி மரங்களை அவர் நடும்படி செய்தார். ஒவ்வொரு வசந்த காலத்திலும் அவை வெண்மேகம் அணைந்ததென வெள்ளைப் பூக்கள் நிறைந்து நிற்பதை அவள் கண்டுகளிக்க ஏற்பாடு செய்தார். துருக்கிய, பாரசீகத் தோட்டங்களைப் பார்த்தயாரும் அவற்றின் அழகை மறக்க முடியாது. தோட்டங்களையும் நான் சிற்பத்தோடு சேர்த்துப் பேசக் காரணம், பழைய கிரேக்கத் தோட்டங்களைப்போல, இவையும் சிற்ப முறையில் திட்டமிடப்பட்டு அமைக்கப்பட்டன என்பது தான்

வர்ணம் பூசுதலும், வர்ண அச்சுக் குத்துதலும் முஸ்லிம் உலகில் புகழ் பெற்றவைகளாக இருந்தன. அவற்றின் அழகு அபூர்வமானதாகஇருந்தது வீட்டின் கூரைகளுக்கு உபயோகப்படும் ஓடுகளிலும், கற்களிலும் அருமையான பூஞ்செடிகளைச் செதுக்குவதிலும் முஸ்லிம்கள் பெயர் பெற்றிருந்தனர். (தொடரும்)

அன்பர்களுக்கும் அபிமானிகளுக்கும்

எமது இதயங்கனிந்த

ஈத் வாழ்த்து!



# கிரெஸென்ட் மூவீஸ்



திரைப்பட விநியோகிஸ்தர்கள்:

வடஆற்காடு, தென்ஆற்காடு, செங்கல்பட்டு,

சித்தூர், பாண்டிச்சேரி.



# Crescent Movies

**14, Ellis Road**

**MADRAS-2**

முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் தமிழுக்கும் தமிழ் வாயி லாகத் தம் மார்க்கத்திற்கும் ஆற்றியுள்ள தொண்டு அளவிடற்கு அரியது. அவர்களுள் நவமணிகள் என்று போற்றத்தக்க பெரும் புலவர்கள் ஒன்பதின்மரைப் பற் றிய சுவையான அறிமுகம் இது. அப் புலவர் பெருமக் களையே பேசவைக்கும் அரியதொரு நாடக பாணியில் அன்பர் 'ஜேயெம்'' அவர்கள் படைத்தளித்துள்ள இவ் வரிய ''இலக்கிய யாத்திரை'' ரேடியோ மலேசியாவில் ஒலிபரப்பாகியது. அனுமதி பெற்று இங்கே பிரசுரிக்கப் படுகிறது.

# கவிக் குரல்

இரவின் அமைதி; விண்ணிலே முழுமதி; தரையிலே அமுதக் கதிர்களின் திருவிளையாடல். ஆறும் கடலும் அந்தக் கதிர்களின் கூட்டுறவிலே களித்து நிற்கும் எழில் தோற்றம். மரங்கள் அந்தக் கதிர்களை உண்டு, தென்ற லில் சிந்துபாடி தமது கரங்களாகிய கிளைகளை ஆட்டி ஆட்டி மகிழும். மோகனக் காட்சி. புல்லும, பூவும், வயலும்,வாய்க்கா லும் மோனத் தவத்திலே மூழ்கி நின்று, மதியின் கதிர்களை தம்மகத்தே இணைத்துத் தருக்கி நிற்கும் தண்ணிய தோற்றம்.

உலகெங்கும் அமைதி; அழகிய அமைதி; நிறைவுபெற்று விட்ட அமைதி. போராட்டக் குரல் இல்லை, இல்லாமை என்ற ஏக்கப் பெருமூச்சு இல்லை, வர்க்க வேறுபாட்டுக் குரல் இல்லை. இயற்கையின் எழில் தூங்கும் தோற்றம், தென்றல் தாலாட்டுப் பாடி இயற்கையைத் தொட்டிலாட்டி தூங்கவைத்து விட்ட காட்சி.

தூரத்தில் ஒரு சன்னக் குரல், உணர்ச்சி அனைத்தையும் கொட்டி உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து எழுந்துவரும் புதிய குரல், கடலையும் ஆற்றையும் வயலையும் வாவியையும் தாண்டி, இரவின் அழகிய அமைதியைக் கலைத்து ஒலிக்கும் காவியக் குரல். குயிலின் குதூகலக் குரலா அது...?

மனதிலே, மன ஆழத்திலே எங்கேயோ தூங்கிக்கிடந்த கனவுகளை எழுப்பி வெளிக் கொணரும் ஆற்றல் இந்த மாயக்

குரலுக்கு ஏது? அழகிய இந்தச் சூழலையும் தாண்டி நீண்ட நெடுந்தூரத்துக்கு அப்பால், எப்போதோ, எங்கேயோ நடந்து முடிந்துவிட்ட நல்லநல்ல காட்சிகளை எல்லாம் எப்படி அது நினைவுக்குக் கொண்டு வருகிறது?

தென்றல் இலேசாக இனிதாக வீசுகிறது. குயிலின் கீதம் சன்னமாக உணர்ச்சியோடு ஒலிக்கிறது. மதியின் அமுதக் கதிர்கள் புத்தொளி பரப்புகின்றன. இயற்கை அனைத்தையும் ரசித்துக் கொண்டு தூங்குவதைப்போல தோற்றமளித்துக் கொண்டிருக்கிறது.

புல்வெளியிலே சாய்ந்துகொண்டு, புதிய நறுமணத்தை நுகர்ந்துகொண்டு, இயற்கையின் மெல்லிய இதயத் துடிப்பையும் அது கூறும் ஆயிரமாயிரம் கதைகளையும் அறிந்து சிந்தனை செய்துகொண்டே இருக்கும் ரசிகன் இப்போது மெல்லத் தலைதூக்குகிறான். விண்ணை நோக்குகிறான். மதியைப் பார்க்கிறான். அருகிலே கண் சிமிட்டி நிற்கும் கணக்கற்ற தாரகைகளைக் காணுகிறான். குயில் வழங்கிய குரலிலே தன்னை மறந்து, அது அழைத்துச் சென்ற வழியிலே கற்பனைப் படகேறி எங்கேயோ சென்று கொண்டிருப்பவன் அல்லவா அவன்? இப்போது கண்களை கசக்கிக்கொண்டு பார்க்கிறான் வேகமாக ஒலிக்கும் கதம்பக் குரல்களைக் கேட்கிறான்.

[பல்வேறு இசையின் மெல்லிய கதம்ப ஒலி]

என்ன குரல் இது! எத்தகைய கருத்துகளை தம்மகத்தே கொண்டிருக்கும் குரல் இது! என்று வியந்து நிற்கும் அவனது பார்வையைக் கவரும் தோற்றம்தான் என்ன?

அதோ ஒரு மாபெரும் கூட்டம் விண்ணிலிருந்து இறங்கி தன்னை நோக்கி வருவதாக அவனுக்குத் தோன்றுகிறது. ஒளிபடைத்த கண்களும், உறுதிமிக்க தோள்களும், எழிற் கோலமும் கொண்ட அந்தக் கூட்டம் நெருங்கி வருகிறது. சுமார் முன்னூற்று ஐம்பது பேர்கள் வரையில் அந்தக் கூட்டத்தில் இடம் பெற்றிருக்கிறார்களே. ஒவ்வொருவர் கையிலும் ஏடும் எழுத்தாணியும் இடம்பெற்றிருக்கின்றன. அவர்களது வாய் உயிரும் உணர்வும் ஒன்றிய சொற்களை உச்சரித்த வண்ணம் இருக்கின்றது.

இதோ அருகில் வந்து விட்டார்கள்... அவர்களது தோற்றத்தில்தான் எத்தகைய கம்பீரம்! ஒவ்வொருவராக பார்க்கிறான் ரசிகன், ஒருவர் கையிலே இருக்கும் ஓலைச் சுவடியின் மேல் 'மிஃராஜ் மாலை' என்ற எழுத்துகளைக் காணுகிறான். மற்றொருவரது கையில் இருக்கும் ஏட்டுச் சுவடியின் மேல் 'சீறாப் புராணம்' என்று பெரிய எழுத்துக்களில் பொறிக்கப் பட்டிருப்பதைப் பார்க்கிறான். 'குத்புநாயகம்' 'ஆரிபு நாயகம்' 'மக்காக் கலம்பகம்' 'நாகை யந்தாதி' 'திருப்புகழ்' 'முகிய்யித்தீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ்' 'நவமணி மாலை' 'செய்தத்துப் படைப்போர்' 'பூவடிச்சிந்து' 'மும்மணிக்கோவை' —இப்படி பல்வேறு சுவடிகளைக் கையில் ஏந்திக் கொண்டு நிற்கும் அந்தப் பெரியார்களை வைத்தகண் வாங்காமல் பார்த்துக்கொண்டே நிற்கிறான் ரசிகன்.

இவர்களெல்லோரும் யாராக இருக்க முடியும்...? இந்த வினா மெதுவாக அவனது மன வெளியில் எழுகிறது.

"இவர்கள் அனைவரும் புலவர்கள், முஸ்லிம் புலவர்கள், தமிழ் வளர்த்த முஸ்லிம் புலவர்கள். சென்ற ஐந்நூற்றாண்டு காலமாக சாந்தி சமயக் கருத்துக்களை பைந்தமிழில் குழைத்து தெவிட்டாத பாவாக வழங்கியவர்கள். தமது உயிரையும் உணர்வையும் சமயத்துக்காகவும் தமிழுக்காகவும் தியாகம் செய்த தக்கோர்கள்"—இப்படி ஒலித்த அசரீரிக் குரல் அறிமுகம் செய்துவைக்கிறது.

'இத்தனை முஸ்லிம் புலவர்களா? அவர்கள் இத்தனை நூல்களை எழுதியிருக்கிறார்களா? வியப்பாக இருக்கிறதே...' ரசிக உள்ளம் இப்படி நினைக்கிறது.

"உண்மைதான், நீ நினைப்பதில் தவறில்லை. உன்னிடமிருக்கும் பெரு நிதியத்தின் சிறப்பை நீ உணரவில்லை. முன்

னூற்றுக்கு மேற்பட்ட முஸ்லிம் புலவர்கள் இயற்றிய ஆயிரத்துக்கு மேற்பட்ட கவிதைப் படைப்புகளைப் பற்றி நீ சிந்தித்தது கூட இல்லை என்று தோன்றுகிறது. அது உன் தவறு. உனது முன்னோர்கள் விட்டுச்சென்ற கருவூலங்களை நீ புறக்கணித்து விட்டாய்...'' அசரீரிக் குரல் இப்படி ஒலிக்கிறது.

ரசிகன் பதறுகிறான். எங்கிருந்தோ வந்து சேர்ந்து கொண்ட புதியதோர் உணர்ச்சி அவனை ஆட்டிவைக்கிறது. ''ஒன்றிரண்டு புலவர்களைப் பற்றியும், விரல்விட்டு எண்ணக் கூடிய நூல்களைப் பற்றியும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன்... எஞ்சியோரைப் பற்றி எதுவும் அறியேன்...''சோகம் சேர்ந்த குரலில் ரசிகன் முறையிடுகிறான்.

''கவலை வேண்டாம், நீ அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே அத்தனை முஸ்லிம் புலவர்களும் இதோ உனக்கு முன்னால் வருகை தந்திருக்கின்றனர். அவர்கள் அனைவரையும் நீ சந்தித்துக்கொள். தாமியற்றிய நூல்களைப் பற்றி அவர்கள் எடுத்துச் சொல்லுவார்கள். உனக்கு ஏற்படும் ஐயங்களை எல்லாம் அவர்களிடம் எடுத்துச் சொல் பதில் அளிப்பார்கள். .இதோ இந்த வரிசையில் முதலாவதாக இருப்பவர் தான் முதல் முஸ்லிம் தமிழ்ப் புலவர், ஏனைய புலவர்களுக்கெல்லாம் முன்னோடியாக அமைந்திருப்பவர். அவர் தான் 'ஆலிப்புலவர்' என்று அன்போடு அழைக்கப்படும் செய்கு அலிப்புலவர். முதலில் அவரை நீ சந்திக்கலாம்...'' அசரீரிக் குரல் மறைந்தது, ரசிகன் மனதிலே தெளிவு பிறந்தது. புலவர்களை நோக்கி அவன் அடியெடுத்து வைத்தான்.

(1)

*ரசிகன்:* **ஆலியப்பா அவர்களே! தமிழ் முஸ்லிம் புலவர்களுக்கெல்லாம் தாங்களே முன்னோடியாக அமைந்திருப்பது பெருமகிழ்ச்சியளிக்கிறது. தமிழில் பாட வேண்டும். அதுவும் இஸ்லாமியக் கருத்தைப் பற்றிப் பாடவேண்டும் என்ற எண்ணம் தங்களுக்கு எப்படித் தோன்றியது என்பதைப்பற்றி கொஞ்சம் சொல்லலாமா?**

ஆலிப்புலவர்: தாராளமாகச் சொல்லலாமே... நான் பதினாருவது நூற்றாண்டில் வாழ்ந்தவன். அப்போது தமிழகத்தில் நல்ல முறையில் இஸ்லாம் பரவியிருந்தது. ஆனால் இஸ்லாமிய இலக்கியங்கள் தமிழில் இல்லை. அரபியிலும் பார்ஸீ மொழியிலும் இருந்தது உண்மையே. அரபுத் தமிழிலும் ஒரு சில எழுந்திருந்தன. ஆனால் தமிழ் மட்டும் கற்றிருந்த முஸ்லிம்களுக்கு இவை பயன்படவில்லை. சமயக் கருத்துக்களைப் பற்றியும் நபிமார்களைப் பற்றியும் மக்களுக்குச் சொல்லுவது தேவையாகப்பட்டது இல்லாவிட்டால் அவர்கள் வேறு மத நூல்களையும், வரலாறுகளையும் படித்து அந்த வழியிலேயே சென்றுவிடுவார்கள் போல் தோன்றியது. ஆகவே தமிழ் முஸ்லிம்கள் அனைவருக்கும் புரியும் வண்ணம் இஸ்லாமியக் கருத்தை வைத்துக்கொண்டு ஒரு கவிதை நூல் எழுத எண்ணமிட்டேன்.

ரசிகன்: நீங்கள் எழுதிய நூல் யாது? அதன் வரலாறு பற்றி கொஞ்சம் சொல்லுங்கள்.

ஆலிப்: நாயகத் திருமேனி அவர்களின் விண்ணேற்றம் பற்றியதே நான் எழுதிய கவிதை நூல். ''மிஃராஜ் மாலை'' என்று அதற்குப் பெயர் சூட்டினேன். காயல்பட்டினம் சமய அறிஞர் செய்யிது முகம்மது அலாவுத்தீன் அவர்களே நூலுக்கான கருத்தை விளக்கிச் சொன்னார். நூலை கோட்டாற்றில் அரங்கேற்றினேன். அந்த நாளில் தமிழகம் முழுவதும் இதற்கு நல்ல வரவேற்பு இருந்தது. அது சிறிய நூல்தான். அந்த நூலை இயற்றிக்கொண்டிருந்த நாளிலே என் இதயம் முழுவதும் இத்தனை நாளும் கண்டறியாத மகிழ்ச்சியிலும் பக்தி உணர்விலும் திளைத்திருந்தது.

ரசி: உண்மையே. தாங்கள் நூலின் கருப்பொருளோடும் சம்பவம் நிகழ்ந்த அந்த புனித காலத்தோடும் ஒன்றியிருப்பீர்கள் அதனாலேயே தங்கள் இதயத்தில் இத்தகைய உணர்வு எழுந்திருக்கிறது. தங்கள் நூலிலிருந்து தங்கள் குரலில் ஒரே ஒரு பாடலை எடுத்துச் சொல்லி விளக்கம் தருவீர்களா?

ஆலிப்புலவர்: தாராளமாக! மக்காவைப்பற்றி நான் நினைத்தேன். அது ஒரு வளம் திகழும் நகராக எனக்குத் தோன்றியது. அங்கே காட்சி இன்பத்தைக் கண்டேன். செவிக்கின்பத்தைக் கண்டேன். வாய்க்கின்பத்தையும் கண்டேன். வயலிலும் காட்டிலும் பொன்னும் மணியும் தரும் பயிர்கள் பூத்துக் குலுங்குவதைக் கண்டேன். கண்ணுக்கெட்டிய வரையில் தென்றலின் தாலாட்டிலே தவழ்ந்து விளையாடும் பயிர்களைக் கண்டேன். மலைகளிலே குயிலின் கூட்டம். அவற்றின் வாயிலிருந்து உள்ளம் உருக்கும் இன்னிசை இந்த நகரிலே எத்திசையிலிருந்தும் எதிரொலிப்பது ஒரே இசை. மழலை மொழியில் ஆகட்டும், மங்கை நல்லார்களின் மதுர மொழிகளில் ஆகட்டும். எங்கும் எப்பொழுதும் ஒலிப்பது நபிபெருமான் புகழ்பாடும் ''சலவாத்''திசை மகிழ்ச்சி நிரம்பி வழியும் மனைகள் இன்பம் ததும்பும் இல்லங்கள். வதுவைகள் ஒருபுறம் மங்கல வாழ்த்துகள் மறுபுறம், எங்கும் இன்பச் சிதறல், இதுதான் நான்கண்ட மக்கா நகர்...

ரசிகன்: மிகவும் நன்றாகச் சொல்லிவிட்டீர்கள். கேட்க இனிக்கிறது. இத்தகைய கருத்துகளை எல்லாம் அழகுபட விளக்க பல பாடல்கள் எழுதியிருப்பீர்கள் என்று நினைக்கிறேன்.

ஆலிப்புலவர்: இல்லை ஒரே பாடலிலேயே முடித்துவிட்டேன்

ரசிகன்: ஒரே பாடலிலா...? தயவு செய்து அந்தப் பாடலைச் சொல்லமுடியுமா?

ஆலிப்புலவர்: (இசையோடு)

'காடு தோறும் கனகப் பெரும்பயிர்
வீடு தோறும் விருந்தும் வதுவையும்
நாடு தோறும் நபி சலவாத்திசை
கோடு தோறும் குயிலினம் கூவுமே'

ரசிகன்: இரத்தினச் சுருக்கமான பாடல் பொறுக்கி எடுக்கப் பட்ட சிக்கனச் சொற்களால் அமைந்த இணையற்ற பாடல். ஆலியப்பா அவர்களே... உங்களுக்குத் தமிழ் இலக்கிய வரலாற்றில் தனி இடம் என்றும் உண்டு. இன்னும் வரவிருக்கும் எத்தனை யெத்தனையோ முஸ்லிம் புலவர்கள் தங்களையே வழிகாட்டியாகக் கொள்ளுவார்கள். தங்கள் பெயர் என்றும் நிலவும்.

ஆலிப்புலவர்: மிக்க நன்றி...நான் விடைபெறுகிறேன் (போகிறார்)

(2)

ரசிகன்: பெரும் புலவர் உமறு அவர்களே! தங்களை சந்திக்க நேர்ந்தது குறித்து பெருமகிழ்ச்சி அடைகிறேன். தமிழ் முஸ்லிம் புலவர்களிடையே தாங்கள் இணையற்றதொரு இடம் பெற்றிருக்கிறீர்கள். அதுமட்டுமல்ல உலக மகா கவிகளில் தாங்களும் ஒருவர். தங்களின் சீறாப்புராணம் இலக்கியப் புகழ்பெற்றது. சீறாவைத் தவிர தாங்கள் வேறு என்னென்ன நூல் இயற்றியிருக்கிறீர்கள என்பதைச் சொல்ல முடியுமா?

உமறு: பலபட பாராட்டி விட்டீர்களே! சமுதாயத்தின் நன்றி உணர்வினை தங்கள் பேச்சிலே கேட்டேன். மிக்க மகிழ்ச்சி. சீறாப்புராணம் இயற்றுவதற்கு முன்பதாக முதுமொழி மாலை பாடியிருக்கிறேன். சீதக்காதி மீது திருமண வாழ்த்தும், நொண்டி நாடகமும் ஆக்கியிருக்கிறேன். என்றாலும் என் உள்ளத்தில் உறுத்திக் கொண்டிருந்த சோகத்தையும், ஏமாற்றத்தையும் செயலற்ற தன்மையையும் உளங் குழைய எடுத்துக் கூறி மன்றாடி என்னை மறந்து பாடிய 'முது மொழி மாலை'யை நினைத்தால் இன்றும் கூட எனக்கு புத்துணர்ச்சி ஏற்படுவதைப் போல தோன்றுகிறது. சீறாப்புராணத்தைப் பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை என்று நினைக்கிறேன். காரணம் அந்த காப்பியத்தின உள்ளே என்னையே இழந்து விட்டேன்.

ரசிகன்: எட்டைய புரத்தில் மன்னரது அரண்மனையிலே தாங்கள் வாழ்ந்த நாட்களைப்பற்றி கேட்டிருக்கிறேன்... அந்த சூழ் நிலைக்கு முற்றிலும் மாறுபட்ட மற்றொரு நிலைக்கு தங்களை இட்டுச் சென்ற சக்தி எது? அதைப்பற்றிச் சொல்லுகிறீர்களா?

உமறு: நன்றாகக் கேட்டுவிட்டீர்கள்... இலேசான உள்ளத்தோடு வாழ்ந்தேன். கற்பனை வெளியில் சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தேன். உண்மையே அத்தகையஎனக்கு ஒரு இலட்சியம் தந்து, நான் செல்ல வேண்டிய பாதையைக் காண்பித்து வழி

நடத்தியவர் சீதக்காதி அவர்கள் அவர்தானே சீறு எழுத வேண்டும் என்று என்னை வற்புறுத்தியவர்? அவருக்குப் பிறகு சதகத்துல்லா அப்பா, மஹ்மூது பந்தர் கண்ணுட்டி அப்பா முதலியோர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். நான் எழுதிய காப்பியத்துக்கு கொடைநாயகமாக விளங்கி எனக்கு துணைபல புரிந்த அபுல் காசிம் மரைக்காயரை நான் எப்படி மறக்க முடியும்? இவர்களெல்லோரும் சேர்ந்தே புதிய பாதையினை எனக்கு வகுத்துக் கொடுத்தார்கள்.

ரசிகன்: மகிழ்ச்சி... உங்களது வாழ்க்கையிலேயே எந்த ஒரு நிகழ்ச்சி என்றும் உங்களை பெருமை கொள்ளச் செய்கிறது...?

உமறு: எனக்கு சதகத்துல்லா அப்பா அவர்கள் உரைதர மறுத்துவிட்டார்கள். காரணம் எனது தோற்றமும், நடை உடையும் அவர்களுக்கு நம்பிக்கையை ஏற்படுத்தவில்லை. அந்த ஏமாற்றத்தை என்னால் தாள முடியவில்லை. சோகம் கப்பிய உள்ளத்தோடு இரவு முழுவதும் பள்ளிவாசலிலே அமர்ந்து குழம்பிக்கிடக்கிறேன். அப்போதுதான் என்னையுமறியாமல முதுமொழி மாலையைப் பாடுகிறேன். பாடிக்கொண்டே தூங்கிவிடுகிறேன். தூக்கத்திலே புதியதோர் ஒளியைக் காணுகிறேன். எங்கும் கண்டிராத பேரொளி அது. "கலங்காதே, வருந்தாதே. தளராது முயற்சியில் ஈடுபடு நோக்கத்தில் வெற்றிபெறுவாய்" என்று நாயகத் திருமேனி அவர்கள் தங்களது புனிதவாயால் என்னைத் தேற்றுகிறார்கள்... இந்த நிகழ்ச்சியை நான் என்றும் மறக்கமாட்டேன். என்னை பெருமிதம் அடையச் செய்கிறது அந்த நிகழ்ச்சி.

ரசிகன்: உங்கள் வாழ்க்கையில் என்றேனும் கண்ணீர் விட்டிருக்கிறீர்களா?

உமறு: ஆனந்தக் கண்ணீர் விட்டிருக்கிறேன். சோகத்தில் சிக்கியும் கண்ணீர விட்டிருக்கிறேன். நீங்கள் எந்தக் கண்ணீரைக் குறிப்பிடுகிறீர்களா? (சிரிப்பு)

ரசிகன்: சோகக் கண்ணீர்...

உமறு: என்னைக் கவர்ந்த சீதக்காதி அவர்களைக் காலன் கவர்ந்து சென்றுவிட்ட அந்தச் சமயம் என்னையும் மறந்து கதறினேன்; அழுதேன்; கண்ணீர் விட்டேன்.

ரசிகன்: ஆனந்தக் கண்ணீர்...?

உமறு: நான் இயற்றிய அமர காவியம் அரங்கேற்றி முடிந்த சமயம்... கண்ணுக்கெட்டிய தூரம் ரசிகப் பெருமக்கள் அமர்ந்து ஆரவாரம் செய்த அந்த சமயம்... எனது கவிதை அடிகள் எட்டு திக்கும் எதிரொலித்த அந்த சமயம்... என்னையுமறியாமல் கண்களில் நீர் பெருகி கன்னங்களை ஈரமாக்கிற்றே... அதை எப்படி மறக்க முடியும்?

ரசிகன்: நன்றாகச் சொல்லிவிட்டீர்கள் தங்களுக்கே உரித்தான நடையில்... தங்களை நிலைகுலையச்செய்த சம்பவம் ஏதேனும் உண்டா?

உமறு: நிலைகுலையச்செய்த சம்பவம்... இருக்கிறது. ஆம்... அதுதான்... எனது காவிய அரங்கேற்றம் தடைபடக் கூடாது என்பதற்காக தன் அருமை மகன் பால்புரையேறி மரணமடைந்து

விட்டதையும் மூடி மறைத்து நிகழ்ச்சியெல்லாம் முடிந்தபிறகு அமைதியாக அதை வெளியில் சொன்னாரே அபுல்காசிம் மரைக்காயரின் அருமைத் துணைவியார் சப்பாகு பீவி அவர்கள்... அந்த செய்தியை செவிமடுத்ததும் நான் நிலைகுலைந்துவிட்டேன்... அந்த நிகழ்ச்சியை நான் என்றுமே மறக்க முடியாது

ரசிகன். உங்கள் வாழ்க்கை சுவையுடையது தமிழகத்தின் பல பகுதிகளையும் நீங்கள் கண்டிருக்கிறீர்கள் பல்வேறு காட்சிகளையும் பலதரப்பட்ட மக்களையும் சந்தித்திருக்கிறீர்கள். அந்த எழிற் காட்சிகளையும் இதயம் பிளக்கும் நிகழ்ச்சிகளையும் தங்கள் அமர காவிடத்தில் இடம்பெறச் செய்துவிட்டீர்கள். அதற்காக தமிழ்கூறும் நல்லுலகு தங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறது.

உமறு: மிக்க மகிழ்ச்சி...

ரசிகன்: தங்களுக்குப் பிடித்தமான ஒரு பாடலை நான் செவிமடுக்கலாமா?

உமறு: எனக்குப் பிடித்தமான எனது பாடல் ஒன்று... தான் ஈன்றெடுத்த குழவிகளில் அழகியஒன்றைத் தேர்ந்தெடுக்கவேண்டுமென்று அன்னையிடம் சொன்னால் அவள் குழம்பிப்போக மாட்டாளா? என் நிலையும் அப்படித்தானே!... இருந்தாலும் இந்த ஒரு பாடலைக் கேளுங்கள்.

நாயகத் திருமேனி அவர்கள் குழந்தையாக இருந்த சமயம் அந்த இணையில்லாத குழந்தை இப்பொழுதுதான் நடை பயிலத் துவங்குகிறது. அந்தக் குழந்தையை ஒரு தடவை பார்த்தால்கூட போதும். துன்பம் அனைத்தும் அகலுகின்றன. இன்பமும் இனிமையும் இடம்பெற்றுவிடுகின்றன, மகிழ்ச்சி எழுகிறது. வாழ்க்கை வாழத் தகுதியுற்றதாக ஆகிறது. இந்தக் கருத்தை மனதில் வைத்துக்கொண்டுதான் இந்தப் பாடலைப் பாடினேன்,

வறுமையும் தீரும் நோயும் விட்டகலும்
மனத்தினில் கவலையும் நீங்கும்
சிறுமையும் அகலும் புத்தியும் பெருகும்
தீவினை வந்தடராது
தெறுபகை சிதையும் செல்வமும் வளரும்
தேகமும் சிறந்துபூரிக்கும்
உறுபவம் தொலையும் முகம்மதை எவர்க்கும்
ஒருபகல் காண்கில் என்றுரைப்பார்”

ரசிகன்: திருநபி அவர்களை ஒருதடவை நேரில் கண்டவர்களுக்கு மட்டும்தான் அந்தகைய பேறு என்றால் நாமெல்லோரும் எத்தகைய வாய்ப்பு இழந்தவர்கள். அவர்களது திருநாமத்தைச் சொல்பவர்களுக்கும். அந்தப் பெயரைக் கேட்டதும் உள்ளத்திலும் உடலிலு சிலிர்ப்பு உணர்வு ஏற்படுகின்றவர்களுக்கும் இந்தப் பேற்றை அளித்தருள் இறைவா... புலவர் திலகம் அவாகளே தங்களையும் தங்களின் இணையில்லாத காப்பியத்தையும் பற்றி நாங்கள் பெருமையடைகிறோம். தங்கள் பெயர் எங்கள இளவல்களுக்கு உணர்ச்சியளிக்கிறது. தங்கள் பெயர் என்றும் நிலைத்திருக்கும்,

உமறு: மிக்க நன்றி. (தொடரும்)

# பழமொழி

619. நம்பிக்கை ஏழைகளை உயிரோடிருக்கச் செய்கிறது; பயம் பணக்காரர்களைக் கொல்கிறது.

—பின்லாந்து

620. அநியாயமாய் அடைந்த பொருள் மற்ற பொருள்களை அழிக்கிறது

—பிரான்ஸ்

621. காதல், இருமல், புகை, பணம் ஆகியவைகளை நீண்டகாலம் மறைக்க முடியாது.

—பிரான்ஸ்

622. இதயமும் நாவும் சிறியவை, ஆனால் அவைகள் ஒரு மனிதனின் உயர்வைக் காட்டுகின்றன.

—ஜெர்மனி

623 ஒரு பொய் வாழ்வதற்கு மேலும் பத்துப் பொய்களை அதற்கு உணவாக அளிக்க வேண்டும்.

—ஜெர்மனி

624. ஒருவரைக் கேட்டுவிட்டு இருவர்களுக்கு நீதி வழங்காதே.

—கிரீஸ்

625. கடவுளின் கரம் என்றும் திறந்திருக்கிறது, என்றும் நிறைந்திருக்கிறது.

—ஹங்கேரி

626. இளம் மனைவி, கிழட்டுக் கணவன்—குழந்தைகள் நிச்சயம்; கிழட்டு மனைவி, இளங் கணவன்—உதை நிச்சயம்.

—ஸெக்கோஸ்லோவேகியா

627. சோம்பேறி சாத்தானின் கைத்தடி.

—வேல்ஸ்

628. மனிதனுக்கு மரியாதை அவசியம்; மலருக்கு நறுமணம் அவசியம்.

—இந்தியா

# ஆயிரம்

629. முடியுமென்று நம்பினால் முடியும்.

—இத்தாலி

630. உள்ளத்தின் விளக்கு சிந்தனை.

—மலாயா

631. நூறுதடவை கேட்பது ஒரு தடவை பார்ப்ப தற்கு சமம் அல்ல,

—சீனா

632. அறிவும் ஒழுக்கமும் வண்டியின் இரு சக்கரங் கள் மாதிரி.

—ஜப்பான்

633. கோபத்தால் சாதிப்பதைவிட பொறுமையால் ஒருவன் அதிகம் சாதிக்கிறான்.

—ஆப்பிரிக்கா

634; இளைஞர்கள் இறக்கலாம்; முதியவர்கள் இறந் தாக வேண்டும்.

—எஸ்தோனியா

635. (தர்மம்) கொடுத்ததும் புசித்ததும்தான் ஒருவ னுக்குச் சொந்தம்.

—இந்தியா

636. இயற்கையல்ல, பெருமைதான் அதிகம் வேண்டு மென்று ஆசைப்படுகிறது.

—இங்கிலாந்து

537. இளமையில் ஒரு சாளைமீன் சாப்பிடுகிறவன் முது மையில் உறுதியான முதுகெலும்போடிருப் பான்.

—ஸ்பெயின்

638. ஒரு ஏழைக்கு மற்றொரு ஏழை உதவும்போது கடவுளே சிரிக்கிறார்.

—இங்கிலாந்து

(தேர்ந்து தமிழாக்கியவர் : எஸ். ஏ. சுலைமான், M. A.)

EID MUBARAK !

Phone : 5139

# The Indian Auto Stores

20, NORTH VELI STREET,

**MADURAI-1.**

Dealers in : Motor Parts
Specialist in ; Jeep Tata Mercedes - Benz Fargo Trucks
Hindustan Ambassador & Fiat Car Parts

---

## ஈத் வாழ்த்துக்கள் !

நூரு பத்தை கைலிகள் சாயத்திற்கும், நீடித்த உழைப்பிற்கும் உத்திரவாத முள்ளது. கண்கவர் வண்ணங்களிலும், பல டிசைன்களிலும் உற்பத்தி செய்கிறோம் !




தயாரிப்பாளர்கள் :—

**நூர் & சன்ஸ்**

தபால் பெட்டி
எண் : 1560




# 10. சேனாதிபதியின் கடிதம்

இளவரசன் ஈஸாவுக்கும் தனக்கும் ஏற்பட்ட இழப்பு என்ன என்பதை ஜூலியன்பிரபு கூறத் துவங்கு முன்பாகவே இளவரசி மரியாவும் அவளைத் தொடர்ந்து தாரிக், துணைத் தளபதி முகீத் ரூமி, அப்துல் அஜீஸ் இப்னு மூஸா ஆகியோரும் வரிசையாக ஒவ்வொருவராய் ஈஸாவின் கூடாரத்தினுள் நுழைந்து கொண்டிருந்தார்கள். அனைவரின் முகங்களிலும் துக்கத்தின் சாயை படர்ந்து கிடந்தது.

ஈஸா தானாகவே ஊகித்துக் கொண்டான், தனக்கு ஏற்பட்ட இழப்பு என்னவாக இருக்கக் கூடும் என்று, ஏனெனில், அந்த நேரத்தில் அவனுக்கு அங்கு இருந்த ஒரே உறவு அவனுடைய தம்பியான உமர்தான்,

அவனாகவே மறுபடி எதுவும் பேசு முன்பாக, வந்திருந்தவர்களைப் பார்த்து "இளவரசர் உமர் வீரசுவர்க்கம் புகுந்த செய்தி இவருக்கு இதுவரை தெரியாது!" என்று ஜூலியன் கூறவும் உடன்பிறந்த பாசம் அம் மாவீரனையும் ஒரு குலுக்குக் குலுக்கிற்று.

"இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்!" என அவனுடையவாய் முணுமுணுத்தது.

சிறிதுநேரம் செயலற்றிருந்த பின் ஈஸா பேசினான்:

"அறப்போரில் வீர மரணம் எய்திய தியாகிகளின் மறைவுக்கு நாம் வருந்துவதில்லை. ஆனால் நாம் இன்னும் ஆற்றவேண்டிய பணிகள் எவ்வளவோ இருக்கின்றன. முதல் போரிலேயே அவன் மடிந்திராமல் மேலும் சண்டைகளில் ஈடுபட்டு வெற்றி கண்டு அதன்பின் மடிந்தாலும் அவனுடைய ஆசை நிறைவேறியிருக்கும். நாம் என்ன செய்யலாம். இறைவனின் நாட்டப்படி நடந்துவிட்டது!"

"இளவரசர் நேற்றையப் போரில் ஆற்றிய அற்புத சாகசங்களைப் பற்றி புளோரிந்தா நேற்றிரவெல்லாம் வர்ணித்துப் பேசிக்கொண்டிருந்தாள். இன்னும்கூட அவரை நேரில் எதிர்த்த எதிரி வீரர்கள் நூற்றுக் கணக்கில் உயிரிழந்தனராம். ஸ்பானியன் ஒருவன் கோழைத்தனமாக அவரைப் பின்புறமாக வந்து தாக்கியதனுலேதான் உயிர் இழந்ததாகச் சொல்கிருர்கள்."

அத்தனை பேருக்கும் மத்தியில் அமர்ந்திருந்த ஒரே பெண்ணுன மரியாவினுல் அவ்வாறு பேசாமல் இருக்க முடியவில்லை. தன் இன்னுயிர்க் காதலனுக்கு ஏற்பட்டிருந்த இழப்பு அவளுக்குப் பெரும் துன்பத்தைக் கொடுத்திருந்தது.

அப்போதுதான் ஈஸா அவளைத் திரும்பிப் பார்த்தான். அவளுடைய குரலிலே கனிவும் பரிவும் கலந்து குழைந்திருந்தது. அவளுடைய கண்கள் அவள் வாய்விட்டுச் சொல்லாத அனுதாபத்தை அப் பார்வையின் மூலம் தெரிவித்தன.

அதன் பிறகுதான் அவனுக்குச் சட்டென்று நினைவு வந்தது. உடனே ஜூலியனின் பக்கமாகத் திரும்பி, "பிரபு, உங்களுக்கும் ஏதோ இழப்பு என்று சொன்னீர்களே! என்னவென்று கூறவில்லையே!" என்ருன்.

துக்கம் மறுபடியும் ஜூலியனின் குரலை அடைத்தது. "மரியாவே கூறட்டும்!" என்று வெகு சிரமத்துடன் சொல்லி நிறுத்திக் கொண்டான்.

மரியாவுக்கு அந்த நிலைமை சங்கடமாக இருந்தது. தளபதி தாரிக் முதலியவர்களின் அருகில் இருந்துகொண்டு தன்னுல் முதலில் எப்படி ஈஸாவிடம் அந்த அளவுக்குப் பேச முடிந்ததென்று அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது, எனவே சற்றுத் தயங்கினுள் அவள்.

அவளுடைய நிலையைப் புரிந்து கொண்ட ஈஸா, "என்ன நடந்தது மரியா? இளவரசி புளோரிந்தா சுகம்தானே!" என்று கேட்டான். தன்மீது ஆசை வைத்துத் தோல்வி கண்டபின் தன்னுடைய தம்பி உமரின் மீது விருப்பம் கொண்ட புளோரிந்தா அவனையும் இழந்த பிறகு தனக்குத் தானே ஏதாவது தீங்கிழைத்துக் கொண்டிருப்பாளோ என்று ஒருகணம் எண்ணமிட்டது அவன் மனம்.

தயங்கித் தயங்கிப் பேசினுள் மரியா. அவள் கூறிய விவரம் இதுதான்:

போர் நடந்த இரண்டு நாட்களிலும் இளவரசன் உமரின் பின்னுலேயே குதிரைமீது எப்போதும் சுற்றிவந்து அவனையும் மற்ற முஸ்லிம் வீரர்களையும் ஊக்குவித்துக்கொண்டு அலைந்த புளோரிந்தா, எதிரிகளால்அவன் வஞ்சகமாகத் தாக்கப்பட்டு முதுகில ஈட்டியால் குத்துண்டு குப்புற விழுந்ததைக கண்களால் கண்டதும் மூர்ச்சித்துக் குதிரை மீதிருந்து கீழே விழுந்தாள். எங்கிருந்தோ மின்னல வேகத்தில் பாய்ந்து வந்த ஸ்பானிய வீரன் ஒருவன் கீழே விழுந்த புளோரிந்தாவைத் தூக்கித் தன் குதிரை மேல் வைத்துக்கொண்டு விரைந்து சென்று மறைந்துவிட்டான். இரண்டாம் நாள் போர் முடிவதற்குச் சற்று முன்னதாகத் தான் அச் சம்பவம் நடந்தது.

தளபதி தாரிக்கும் மற்றவர்களும் அதுபற்றி முன்னதாக அறிந்திருந்த போதிலும் புளோரிந்தாவின் பேச்சிலிருந்துதான் முழு விவரத்தையும் தெரிந்து கொண்டார்கள்.

தாரிக் ஜூலியனை நோக்கிக் கேட்டான்:

"பிரபு, தங்கள் செல்வியைக் கவர்ந்து சென்றவன் சாதாரணப் போர் வீரனா? அல்லது படைத் தலைவர்களுள் ஒருவனா? ஏதாவது விவரம் தெரிந்ததா உங்களுக்கு?"

"தெரிந்ததனால்தான் நம்பிக்கை இழந்து தவிக்கிறேன். அவளைக் கவர்ந்து சென்றவன் கஸ்டைல் புரட்சித் தலைவனான பலாஜியஸ் தான் என்று கூறுகிறார்கள். அவன் வெறிபிடித்த தேசியவாதி என்று நான் அறிவேன். நாங்கள் உங்களோடு சேர்ந்துகொண்டிருப்பது அவனுக்குத் தெரியும். அதனால் அவளை ஒரு துரோகி எனக் குற்றம் சாட்டி என்னவிதமான கொடுமைகளுக்கு ஆளாக்கப் போகிறானோ தெரியவில்லை!"

"ஒரு பெண்ணிடம், அதுவும் புளோரிந்தா போன்ற ஓர் அழகியிடம் அவ்வாறு மிருகத்தனமாக அவன் நடந்துகொள்வான் என்று நான் நம்பவில்லை. இளவரசியின் அழகுக்கு அடிமைப்பட்டு அவரைத் தன் வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொள்ள பலாஜியஸ் விரும்பினால் நான் ஆச்சரியப்பட மாட்டேன்!" என்றான் ஈஸா.

"பலாஜியஸின் முரட்டுக் குணம் உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. கொடியவனான ராடரிக் மன்னன்கூட அவனுக்கு அஞ்சினான் என்றால் அதிலிருந்தே தெரிந்துகொள்ளலாம்!" என்றான் சியூட்டா சிற்றரசன்.

"கொடியவர்கள் தம்மைவிடக் கொடியவர்களைக் கண்டுதான் அஞ்சவேண்டும் என்பதில்லை. நேர்மைக் குணம் படைத்தவர்களைக் கண்டும்கூட அஞ்சுவதுண்டு. அவன் எப்படிப்பட்டவனாக இருப்பினும் இளவரசியாரை அவனிடமிருந்து மீட்க நம்மாலான முயற்சிகள் அனைத்தும் செய்வோம். இரவோடிரவாக இன்று எதிரிப் படைகள்

அனைத்தும் கலைந்து பின்வாங்கிச் சென்றுவிடும் என்று தெரிகிறது. நம்மீது ஏற்பட்டுவிட்டிருக்கும் அச்சம் காரணமாக அவர்கள் தம் கூடாரங்களையும் அவற்றிலுள்ள ஆயுதம் போன்ற பொருள்களையும்கூட அப்படியப்படியே போட்டுவிட்டு உயிர் தப்பினால் போதுமென்று ஓடிக்கொண்டிருக்கிறார்களாம்!" என்றான் தாரிக்.

"தியோடமிர் மட்டும் தன்னுடைய மாகாணத்தைக் காப்பாற்றும் நோக்கத்துடன் தலைநகரான முர்சியாவுக்குத் தன் படைகளுடன் புறப்பட்டுவிட்டானாம். நாட்டின் தலைநகரமான தாலதோவை நோக்கி மற்ற படைகள் அனைத்தும் விரைந்து செல்கின்றன என்று என் ஒற்றர்கள் தகவல் கொண்டுவந்துள்ளனர். காலதாமதம் செய்யாமல் நாமும் முன்னேறிச் சென்று தாலதோவை முற்றுகையிட வேண்டும். ராடரிக் விழுந்ததோடு நமக்குக் கிடைத்த வெற்றி, தலைநகர் நம்வசப்பட்ட பிறகுதான் பூர்த்தியாகும். தாலதோவும் வெகு நாட்களுக்குத் தாக்குப்பிடிக்காமல் விரைவிலேயே நமக்குப் பணிந்துவிடும்!"

தன் மகள் புளோரிந்தாவை கூடிய விரைவில் மீட்கவேண்டுமென்ற ஆவலால் உந்தப்பட்டுத்தான் ஜூலியன் அவ்வாறு பேசுகிறான் என்பதை அனைவரும் உணர்ந்துகொண்டனர்.

"நிலைமை எவ்வளவு சாதகமாகத் தோன்றினாலும் அடுத்த நடவடிக்கை எடுக்கு முன்பாக நாம் நிதானித்து முன்னேறுவது தான் நல்லது என்று நினைக்கிறேன். நான் புறப்படு முன்பாக சேனாதிபதி மூஸா அவர்களும் அவ்வாறு என்னை எச்சரித்திருக்கிறார். எனவே சேனாதிபதிக்கு நிருபம் அனுப்பி அடுத்த நடவடிக்கை பற்றி ஆலோசனை கேட்டால் நல்லது என்று நம்புகிறேன்." என்றான் தாரிக்.

ஈஸா அதனை ஆதரிக்கவில்லை.

"இப்போது நமக்குக் கிடைத்துள்ள அனுகூலத்தை இழந்து எதிரிகள் தம் நிலையைப் பலப்படுத்திக்கொள்ள இடங்கொடுக்காமல் உடனே முன்னேறுவது தான் சிறந்த யுத்த தந்திரமாகும்!" என்றான் அவன்.

தான் சொன்ன திட்டத்திற்கு ஈஸாவிடமிருந்து ஆதரவுகிடைக்கவும் அதைப் பயன்படுத்திக் கொண்டு, ஜூலியன் தன்னுடைய கூற்றை மேலும் வலியுறுத்தினான்.

தளபதி தனக்குச் சரியென்று தோன்றுகிற வகையில் முடிவு செய்யட்டும் என்று கூறினார்கள் முகீதும் அப்துல் அஜீஸும்.

இறுதியாக ஜூலியனும் ஈஸாவும் கூறியபடியே மேற்கொண்டு முன்னேறுவது என்றும் அதற்காக இஸ்லாமியப் படைகளை மூன்று பிரிவாகப் பிரிப்பது என்றும் முடிவாயிற்று.

ஒரு பிரிவு அப்துல் அஜீஸ் இப்னு மூஸாவின் தலைமையில் கிழக்காகச் சென்று முர்சியா மாகாணத்தின் முக்கிய நகரங்களான அல்விரா, மலாகா, கிரானதா முதலிய இடங்களைக் கைப்பற்றிக்கொண்டுமுன்னேறி முர்சியா கவர்னரான தியோடமிர் பிரபுவைச் சந்தித்து முறியடிக்க வேண்டும்.

தெற்கு ஸ்பெயினில் மிக பலம் பொருந்திய கோட்டையும் நீர் வளம், நிலவளத்தில் சிறந்ததுமான கார்தோவாவை துணைத் தளபதி முகீத்ருமி, பொறுக்கி எடுத்த எழுநூறு வீரர்களுடன் சென்று முற்றுகையிட்டுக் கைப்பற்ற வேண்டும்.

எஞ்சிய படைகள் அனைத்தும் தாரிக் தலைமையில் அந்த யுத்த களத்துக்கு வெகு அருகாமையில் இருந்த எஸிஜா என்ற கோட்டையைப் பிடித்துக் கொண்டு அங்கிருந்து நேராகத் தலைநகரமான தாலதோவை இலக்கு வைத்து முன்னேற வேண்டும் என்று முடிவெடுக்கப் பட்டது.

"ராடரிக் மன்னனின் உடல் கிடைத்ததா?" என்று அப்துல் அஜீஸ் ஒரு கேள்வியை எழுப்பினார்.

கை வெட்டுண்டு, கழுத்திலே பாய்ந்த ஈட்டியைப் பிடுங்கி எறிந்துவிட்டுக் குதிரையைத் திருப்பிக்கொண்டு ஓடிய மன்னன், அதன்மீது குப்புற விழுந்ததை ஈஸாவும் அவனைச் சேர்ந்த வீரர்களும் கண்டார்கள். குதிரை நேராகச் சென்று பார்பேட் நதியில் இறங்கி அதனைக் கடக்க முயன்றது. அந்தச் சமயத்தில் நதியில் வெள்ளம் பெருகி ஓடியதாலும் வெகு கனமான இரும்புக் கவசத்தை அணிந்திருந்த மன்னனின் உடல் குதிரையின் முதுகில் இருந்து நழுவி ஒரு பக்கமாகச் சரிந்து தொங்கி குதிரையை அலைக்கழித்ததாலும் ஆற்றின் பெரு வெள்ளத்தில் அதுவும் சரிந்து விழுந்து முழுகிப் போனதை சிலர் பார்த்ததாகவும் ஜூலியனுக்குச் செய்தி கிடைத்திருந்தது.

இவ்வளவும் தெரிய வந்த போது மன்னன் மாண்டு மடிந்ததைப் பற்றி அவர்களுக்கு எத்தகைய ஐயமும் ஏற்படவில்லை. அவனுடைய சடலம் மறுநாள் கிடைத்துவிடும் என்று நம்பினார்கள்.

ஆனால் மறுநாள் அவர்கள் ராடரிக் மன்னனின் சடலத்தைத் தேடியபோது எவ்வளவோ முயற்சி செய்தும் அவர்களால் அதைக் கண்டுபிடிக்கவே முடியவில்லை.

ஆற்றை நோக்கிக் குதிரை ஓடியபோது அவன் தலையிலிருந்து விழுந்த மணிமகுடமும் அவன் உடலில் அணிந்திருந்த

வேறுசில ஆயுதங்கள். ஆபரணங்கள் போன்ற பொருள்களும் ஆங்காங்கே கிடைத்தன. ஆற்றின் கரையோரமாகச் சென்று தேடியவர்கள் சிலர் மன்னனுடைய பாத அணிகளைக் கண்டு பிடித்து எடுத்துவந்தனர். என்ன முயன்றும் மன்னனின் உடல் மட்டும் கிடைக்கவில்லை. ஆற்று வெள்ளத்தினுல் அடித்துச் செல்லப்பட்டிருக்கலாம் என்று முடிவு செய்தனர் முஸ்லிம்கள்.

அவர்கள் அந்த முடிவுக்கு வந்தாலும் அத்துடன் விஷயம் தீர்ந்துவிடவில்லை இன்றுவரையிலும்கூட ஸ்பானியருக்கு அது ஒரு புரியாத புதிராகவே இருந்து வருகிறது மன்னனின் உடல் கிடைக்காமல் மறைந்தது ஸ்பானிய வரலாற்றில் ஒரு முக்கியமான இடம் பெற்றுவிட்டது. அதைப்பற்றி நூற்றுக் கணக்கான கற்பனைக் கதைகள் எழுந்தன. அவற்றில் ஒன்றிரண்டு ஸ்பானியரின் உள்ளங்களிலே ஆழப் பதிந்து எதிர்கால வரலாற்றை மாற்றவும் ஓரளவு உதவின.

யுத்தகளத்திலிருந்து தப்பிச் சென்ற ராடரிக் மன்னன் உயிர் பிழைத்து எவராலும் எளிதில் சென்று அடைய முடியாத ஒரு மலையுச்சிக்குச் சென்று, தன் கடந்தகாலப் பாவச்செயல்களை நினைத்து வருந்தி, தன் உடலை வருத்திக்கொண்டு, கர்த்தரிடம் மன்னிப்புக் கோரிப் பெற்று, மேலும் தவம் பல புரிந்து அசாதாரண சக்தி பெற்று, சிரஞ்சீவியாக வாழ்வதாகக் கூறினுர்கள். என்ருவது ஒருநாள் இறங்கி வந்து தன்னுடைய தவறுகளின் விளைவாக முஸ்லிம்களிடம் தான் இழந்துவிட்ட நாட்டை மீட்டு ஸ்பெயினிலிருந்து அவர்களை விரட்டியடிக்கப் போவதாகச் சபதம் பூண்டிருக்கிருன், விரைவிலேயே அது நிறைவேறும் என்று பாதிரிமார்கள் பிரசாரம் செய்துகொண்டே இருந்தார்கள், குறைந்தது அதறகு அடுத்த ஐநூறு ஆண்டுகள் வரையில்!

யுத்த களத்தில் ஸ்பானியர் விட்டுச்சென்ற ஆயுதங்களும் விலையுயர்ந்த பொருள்களும் கணக்கிலடங்காதவை. தறிகெட்டுத் திரிந்த பல ஆயிரம் குதிரைகளை முஸ்லிம் வீராகள் பிடித்து வசப்படுத்திஞர்கள்.

மத்திய கால ஆசிய—ஐரோப்பிய வரலாறுகளிலே இணை காண முடியாத ஒருமாபெரும் ராணுவ வெற்றி இது என்று வரலாற்ருசிரியர்கள் அந்தப் போரின் முடிவைப் பற்றிக் குறிப்பிடுகிருர்கள். அதற்குக் காரணம் கண்டு பிடிக்க முடியாமல் அவர்கள் தடுமாறுகின்றனர். விட்டிஸா, சக்ரவர்த்தியின் நெருங்கிய உறவினர்களான துரோக சிந்தை படைத்த ஸ்பானியர் சிலரின் உதவியால்தான் அரபியர் வெற்றி பெற முடிந்தது என்று எழுதி விட்டு, உண்மையை முழுவதும் மறைக்க இயலாமல், அடுத்தாற் போலவே, துரோகம் அவர்களுக்கு உதவிஞலும்கூட அவர்களுடைய வெற்றியின் மகத்துவத்தை ஒரேயடியாக மறுக்க முடியாதுதான்!" என்று ஒப்புக் கொள்கிருர்கள்.

உண்மையில் விட்டிஸாவின் உறவினர்கள் செய்த 'உதவி' எல்லாம் போரில்நேரடியாகக்கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நின்றது தான். அதற்கும் ராடரிக் மன்னன்தான் பொறுப்பாக இருந்தான். அவர்களைப் பின்னணியில் நிறுத்தி வைத்து விட்டு சண்டை செய்யும் சந்தர்ப்பத்தையே அவன் அவர்களுக்கு அளிக்கவில்லை, தாரிக் போன்ற முஸ்லிம் படைத் தலைவர்களுக்குத் தெரியாமல் அவர்களைப் போய்ச் சந்தித்துப் பேசிய

ஜூலியன் பிரபுவிடம் விட்டிஸா வின் குமாரர்கள் அதைத்தான் சொன்னார்கள். தங்களின்மீது அவநம்பிக்கைகொண்டுசண்டை செய்யச் சந்தர்ப்பம் அளிக்காத மன்னனின் சார்பில் தாங்கள் போரிடும் பிரச்னையே எழவில்லை என்று அவர்கள் கூறினர்.

பார்பேட் நதிக்கரை போருக்குப் பிறகு நடந்த எத்தனையோ சண்டைகளும் அரபியர்முனனேறிய வேகமும் ஸ்பானியருக்கு எதிர்ப்புத் திறன் அற்றுப்போய் விட்டதையும் முஸ்லிம் படைகளின் வீராவேசத்தையும் நிருபித்துக் காட்டி, ராடரிக் மன்னனின் தோல்வி சந்தர்ப்ப வசமாக நிகழ்ந்த ஒற்றைச் சம்பவம் அல்ல என்பதையும் உறுதிப் படுத்துகிறது.

மூன்று பிரிவுகளாகப் பிரிந்த முஸ்லிம் படைகள் சூறாவளி வேகத்தில் முன்னேறிக்கொண்டிருந்தன. எதிர்ப்புகளையெல்லாம் முறியடித்துத் தவிடுபொடியாக்கி கோட்டைக்குப் பின் கோட்டையாகக் கைப்பற்றிச் சென்றனர் அப் பெருவீரர்கள்.

அப்துல் அஜீஸ் இப்னு மூஸாவின் தலைமையில் சென்ற படை ஆர்ச்சிதோனா, அல்விரா முதலிய ஊர்களைக் கைப்பற்றிக் கொண்டு மலாகா என்னும் மாபெரும் கோட்டையை நெருங்கிக் கொண்டிருந்தது,

சண்டமாருதமெனப் புறப்பட்ட முகீத் ரூமியின் சிறுபடை எதிர்ப்பட்ட இடங்கள் அனைத்தையும் கைப்பற்றிகொண்டு கார்தோவா கோட்டையை அடைந்து அதை முற்றுகைக் குள்ளாக்கியது.

தளபதி தாரிக் எஸிஜா கோட்டையை வெகு எளிதில் கைப் பற்றியபின் தலைநகரை நோக்கி வேகமாக வெற்றி யாத்திரை புரிந்துகொண்டிருந்தான்.

புறப்படுவதற்கு முன்பாக பார்பேட் யுத்தகளத்தில் கிடைத்த பொருள்களில் தன் படைகளுக்குத் தேவையானவை போக மற்ற பொருள்கள், ஆயுதங்கள் அனைத்தையும் சேனாதிபதி மூஸாவுக்கு அனுப்பிவைத்து தனது அடுத்த திட்டம் பற்றி விரிவான நிருபமும் வரைந்திருந்தான் தாரிக்

அவற்றைப் பெற்று, வெற்றி பற்றி அறிந்த மூஸா அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

உடனே திமிஷ்கு நகரிலிருந்த கலீபா வலீத் அவர்களுக்கு விவரங்கள் அனைத்தையும் தெரிவித்துக் கடிதம் எழுதி அனுப்பினார் அவர்.

அதன்பிறகு மற்றொரு கடிதம் எழுதி அதைத் தாரிக் இடம் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி அனுப்பிவைத்தார் சேனாதிபதி மூஸா.

மூஸாவின் கடிதம் தாரிக்கின் கைக்குக் கிடைத்தபோது, தாலதோவுக்குச் செல்லும் வழியில் பாதி தூரத்துக்கு மேல் கடந்து சென்றுவிட்டிருந்தது அவனுடைய படை. முகீத் இடமிருந்தும் அப்துல் அஜீஸ் இடமிருந்தும் நல்ல செய்திகள் வந்து கொண்டிருந்தன.

அந்த சமயத்தில் கிடைத்த மூஸாவின் கடிதத்தைப் படித்துப் பார்த்த தாரிக், அதிர்ச்சியடைந்து அளவிலாக் கவலை கொண்டான். ஆலோசனைக்காக ஜூலியனையும், ஈஸாவையும் அவசரமாக அழைத்துவரும்படி ஆளனுப்பிவிட்டு சிந்தனையில் மூழ்கினான் தளபதி.

(தொடரும்)

# விறு விடை

★ கட்சி சார்பில்லாத தேசீய சர்க்கார் அமைவது சாத்தியமா?

★ பெண்களின் திருமண வயதை உயர்த்தலாமா?

★ காங்கிரஸ் எதிர்க்கட்சியாக அமரவேண்டுமென திரு. சஞ்சீவ ரெட்டி நினைப்பது மெய்யா?

★ தேர்தல்களை ஒத்திவைக்காதது எதனால்?

எம் அபூபக்கர்,
மாயூரம்.

கே: தமிழ் நாட்டின் அடுத்த முதன் மந்திரியாக காமராஜர் தேர்ந்தெடுக்கப் படுவாரா?

ப: அதைவிட அவர் எதிர்க்கட்சித் தலைவராக அமரும் வாய்ப்புத்தான் அதிகமாய் இருப்பதாகத் தோன்றுகிறது!

பி. முகம்மது காஸிம்,
மதுரை.

கே: நாட்டின் இப்போதைய பொருளாதார நிலை எப்படி இருக்கிறது?

ப: "சினிமாக் கொட்டகை வாசல்களில் நீளமாகக் 'கியூ' வரிசைகள் நிற்பதும், சாலைகளில் புதுப் புதுக் கார்கள் ஓடுவதும் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைக் காட்டவில்லையா?" என்று பிதற்றித் திரிந்தவர்கள் கூட 'கப், சிப்' என்றுவாயை மூடிக் கொண்டு கிடக்கவேண்டிய அளவுக்கு அது சீரழிந்து கிடக்கிறது.

எஸ். நூர்முகம்மது.
கோவை.

கே: சில தலைவர்கள் அஞ்சியது போல தேர்தல்களை ஒத்திப் போடாமல் நடத்திவிடுவார்கள் போலத் தோன்றுகிறதே!

ப: நாள்தோறும்ரூபாயின் மதிப்புத் தேய்ந்துகொண்டு போவதைப்போலவே, ஆளுங் கட்சியின் மதிப்பும் மங்கி வருகிறது. கொஞ்சநஞ்சம் மிஞ்சியிருக்கும் மதிப்பும் மறையு முன்பாக தேர்தலை நடத்தி விடுவதுதான் நல்லது என்று

நினைத்திருப்பார்கள், காங்கிரசில் உள்ள 'புத்திசாலிகள்!

டி. கிலுறுமுகம்மது,
சென்னை-5.

கே: இளைஞர்களும் யுவதிகளும் எதிலுமே நம்பிக்கையில்லாமல் இருப்பது மதக் கல்வி இல்லாமையினுல்தான் என்னும் பொருள்பட கவர்னர் சம்பூரணனந்து பேசியிருக்கிருரே, அதை ஏற்றுக் கொள்கிறீர்களா?

ப: மிக இளம்வயதிலேயே மார்க்கக் கல்வி புகட்டப்பட வேண்டும். பள்ளியிலும் கலாசாலையிலும்கூட அவரவர் மதக் கொள்கையின் அடிப்படையில்அறக்கல்வி போதிக்கப்படவேண்டும். இந்த நிலையில் வளர்ந்து பெரியவர்கள் ஆகும்போதுதான் இளைஞர்களுக்கு வாழ்க்கையின் லட்சியம் என்ன என்பது புரியும். எதிலும் பற்றும் நம்பிக்கையும் ஏற்படும்.

இக்காலத்தில் பெரும்பாலானவர்கள் மார்க்கக் கல்வியின் ஆரம்பப் பாடங்களைக்கூட சொல்லிக் கொடுக்காமல் குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பிவிடுகிருர்கள். கல்விக்கூடங்களில் மதக் கல்வி கற்பிப்பது மதச்சார்பின்

மைக் கொள்கைக்கு முரண் பட்டது என்று எண்ணி, அங்கும் எதுவும் போதிக்கப்படுவதில்லை. அச் சூழ்நிலையில் வளர்ந்து வாலிபர்களாகும் இளந்தலைமுறையினரிடம் நம்பிக்கை, கட்டுப்பாடு, ஒழுக்கம் முதலிய நற்குணங்கள் தலை காட்டாது. எதிலும் உணர்ச்சி வசப்பட்டு அவர்கள் புரட்சி செய்வதையும் வன்முறைச் செயல்களில் இறங்குவதையும் நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம்.

அஹமது சாலிகு,
சென்னை-1.

கே: ஜனநாயக அடிப்படையில், கட்சி சார்பற்ற, திறமைசாலிகளைக் கொண்ட தேசீய சர்க்கார் டில்லியில் ஏற்பட வேண்டுமென திரு ஜயப்பிரகாச நாராயணன் கூறுகிறாரே, அது நடக்கக்கூடியதா?

ப: நடக்கக்கூடியதுதான். மக்கள் விரும்பினால் எதுவும் நடக்கும். அடுத்து வரும் தேர்தலுக்குப் பின் அத்தகைய நிலை ஏற்பட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை. போகிற போக்கைப் பார்த்தால் காங்கிரஸ் உட்பட எந்தக் கட்சிக்கும் பார்லிமெண்டில் தனியாக மெஜாரிட்டி பலம் கிடைக்காமல் போகக்கூடும் என்று அரசியல் விமர்சகர்கள் ஐயப்படுகிறார்கள். அந்த நிலைமையில் ஜே. பி. யின் திட்டத்தை அமல் நடத்திப் பார்க்கலாம். கிரீஸ் நாட்டில் இப்போது அப்படித்தான் அரசாங்கம் நடைபெறுகிறது.

ஆர். குலாம்மெய்தீன்,
காரைக்கால்.

கே: பெண்களின் திருமண வயதை 21 ஆக உயர்த்தப் போகிறார்களாமே, அதனால் என்ன பலன் கிடைக்கும்?

ப: ஆண்களுக்கு எத்தனை வயது நிர்ணயிக்கப் போகிறார்கள் என்று கூறப்படவில்லை. பெண்களுக்கு 21 என முடிவுசெய்தால் ஆண்களுக்கு 25வயதாவது வேண்டும் என்று கூறுவார்கள். ஜனத்தொகைப் பெருக்கத்தைக் கண்டு கிலியடைந்திருப்பதால் ஆட்சியாளருக்கு இம்மாதிரி விபரீதமான யோசனைகள் எல்லாம் தோன்றுகின்றன. நாட்டின் பழக்க வழக்கங்கள், சீதோஷ்ண நிலை எதனையுமே கருதிப் பார்க்காமல் அவசரப்பட்டு இப்படியெல்லாம் திட்டமிடுகிறார்கள். லூப், ரப்பர் கருவி போன்ற சாதனங்களின் உபயோகத்தை மிக எளிதாக்கிவரும் சர்க்காரின் நடவடிக்கைகளினால் ஒழுக்கமின்மை கூடி வருவதாக ராஜாஜி போன்ற பெரியவர்களே குற்றம்சாட்டி வருகிறார்கள். இந்த நிலைமையில் திருமணத்திற்குள்ள குறைந்தபட்ச வயதையும் ஒரேயடியாக உயர்த்திவிட்டார்களானால் மேற்சொன்ன தீமை அதிகரிப்பதுதான் கண் கண்ட பலனாக இருக்கும்.

சா. அஹ்மது கபீர்,
திருநெல்வேலி.

கே: கொஞ்ச காலத்திற்கு காங்கிரஸ் எதிர்க்கட்சியாக

இருப்பது அதற்கு நல்லது என்று திரு சஞ்சீவ ரெட்டி கூறுகிருரே. மெய்யாகவே அப்படி நினைப்பாரா?

ப: உண்மையிலேயே அவ்விதமாக அவர் நினைப்பவராகஇருந்தால் பார்லிமெண்டுகளிலும் ராஜ்ய சட்டசபைகளிலும் உள்ள ஸ்தானங்களுக்கு சரிபாதிக்கும் குறைவாக அபேட்சகர்களை நிறுத்த வேண்டும் என அவர் காங்கிரஸ் மேலிடத்துக்கு யோசனை சொல்லி இருக்க வேண்டும். அப்படிச்சொன்னதாகத் தெரியவில்லை. "வரும்பொருள் உரைப்பது மந்திரிக்கழகு" என்ற சொல்லுக்குப் பொருந்தப் பேசியிருக்கிருர் மத்திய மந்திரியான சஞ்சீவ ரெட்டியார் என்றுதான் எடுத்துக் கொள்ளவேண்டும்!

ஏ. ஜமால்முகம்மது,
திருச்சி.

கே: "காங்கிரஸ் அபேட்சகர்களாக இன்னும் நல்ல ஆட்களைப் பொறுக்கியிருக்கலாம்!" என்று பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் கூறியிருப்பது சரியா?

ப: அது அவர்கள் கட்சியின் உள் விவகாரம். அங்குள்ள குழப்பங்களையும், கோஷ்டி மனப்பான்மைகளையும், பிளவுகளையும், ஒரு தலைவரை மற்றொருவர் காலைவாரி விடச் செய்யும் சூழ்ச்சிகளையும் பிரதமரின் இந்த ஒரு வாக்கியமே பிரதிபலிக்கிறது.

ஆனால் ராஜஸ்தான் காங்கிரஸ்காரர்கள் சிலர் மட்டுமே 'ரோச'க்காரர்களாக இருப்பார்கள் போலத் தெரிகிறது. பிரதமர் அவ்வாறு கூறிய பிறகு நான்கு மந்திரிகள் உள்பட 20 எம். எல். ஏ-க்கள் காங்கிரசை விட்டு விலகிவிட்டனர். அவர்களுள் 12 பேர் வரும் தேர்தலுக்கும் 'டிக்கெட் கொடுக்கப்பட்டவர்கள். அவ்வாறு வெளியேறிய பின் புதுக் கட்சி ஒன்று அமைத்துக் கொண்டிருக்கிருர்கள் அவர்கள்.

மீரான்மெய்தீன்,
பம்பாய்.

கே. சந்த் பதஹ்சிங் ஆரம்பித்துவைத்த குழப்பங்கள் ஒரு

# திருமணம்

எனது தம்பி ஷாஹுல் ஹமீதுக்கும், இருமேனி, ஜனுப் லெ. இ மு. அப்துல் கரீம் அவர்களின் புதல்வி ஜீனத்துனிஸா பீவிக்கும் 30—11—66 அன்று நடந்த திருமணத்திற்கு நேரில் வருகை தந்தும், உள்நாடு, மலேசியா முதலிய வெளிநாடுகளிலிருந்தும் தபால், தந்தி வாழ்த்துக்கள் அனுப்பிய உறவினர்கள் நண்பர்கள் அனைவருக்கும் எங்களின் இதயங்கனிந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

இப்படிக்கு,

**M. அப்துல் லத்தீப்**

இருமேனி.

வாறு அடங்கிவிட்டன அல்லவா?

ப: வழக்கம்போல இந்திய சர்க்கார் பணிந்துவிட்டது. அத்துடன் தீர்ந்துவிடக்கூடிய விவகாரமல்ல அது. சண்டிகார் நகரையும் பக்ரா நங்கல் அணைத் திட்டத்தையும் சீக்கியர் மாநிலமான பஞ்சாபுக்குக் கொடுத்துவிட்டால் ஹரியானு மாநிலத்தில் புரட்சியும் உண்ணுவிரதங்களும் தோன்றும். மேலும் சில பகுதிகளைப் பஞ்சாபுடன் இணைப்பது பற்றிய பிரச்னையினுலும் குழப்பங்கள் விளையும். பத்தஹ் சிங் கேட்பதைக் கொடுக்க மறுத்தால் சீக்கியருக்குத் தனியான தாயகம் தேவை என்று கிளர்ச்சி செய்யத் துவங்கியிருக்கும் மாஸ்டர் தாராசிங்கின் கை வலுக்கக் கூடும் என்று அஞ்சி பதஹ் சிங் கோஷ்டியைத் திருப்திப்படுத்தவே இந்திய சர்க்கார் முயலுவார்கள். இப்படியாக அப் பகுதியில் குழப்பங்களுக்கு ஒரு முடிவே இல்லாது தொடர்ந்து கொண்டேதான் இருக்கும்.

அ. அப்துல் பாரி,
ஆலந்தூர்.

கே: டிசம்பர் மாதத் தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ள விசேஷ விவாகச் சட்டம் பற்றி விளக்கம் அளிக்கவும்.

ப: எந்த மதத்தைச் சேர்ந்தவராயினும் அந்தந்த மதச் சம்பிரதாயத்தின் படி மணம் புரியாமல், அதற்கென நியமிக்கப்பட்டுள்ள பதிவு அதிகாரியின் முன் சென்று, சாட்சிகளின் முன்னிலையில், மணமக்கள், கணவன் மனைவியாக வாழ விரும்புவதாக உறுதி கூறி திருமணம் செய்து கொள்வதற்கு வழி வகுப்பது விசேஷ விவாகச் சட்டம். அதன்படி இரு வேறு மதங்களைச் சேர்ந்தவர்கள் கணவன் மனைவியாக இன்னும் விளக்கமாகச் சொல்லப் போனுல் ஒருமுஸ்லிம் ஆணே, அல்லது பெண்ணே வேற்று மதத்தவரோடு, விவாகத் தொடர்பு கொண்டு சட்ட பூர்வமாக கணவன் மனைவியாக வாழலாம்.

ஆனுல் இஸ்லாமிய ஷரீஅத் சட்டத்தின்படி அத்தகைய திருமணம் செல்லாதாகையால் அச் சட்ட அமலிலிருந்து முஸ்லிம்களுக்கு விலக்களிக்கப்பட வேண்டுமென பார்லிமெண்டில் முஸ்லிம் பிரதிநிதிகள் வலியுறுத்தினர். நேரு சர்க்கார் அதற்கு செவிசாய்க்காமல் சட்டத்தை நிறைவேற்றியது.

Edited & Published by N. B. Rameeza 18, Ramasamy St, Madras-1. Printed by V· Sambandan at Sengunthamithran Press. 33 Armenian St., Madras-1

நகைகள் எப்பொழுதாவது சுமையாக இருப்ப துண்டா? (அதாவது, நல்ல பொருளில் அதி கம் என்று ஒன்றுண்டோ?)

—இந்தியப் பழமொழி.




# நாடு முன்னேறுவதற்கு வழி!

எந்த ஒரு நாடும் முன்னேறியிருக்கிறதா, சுபிட்சமாக உள்ளதா என்று அறிய வேண்டுமானுல் அந் நாட்டின் பொருளாதாரம் எந்த நிலையிலிருந்து எந்த நிலக்குச் சென்றுள் ளது என்பதை ஆராய்ந்து தெரிந்து கொண்டால் போதும். நாணயத்தின் உள்நாட்டு மதிப்பும் வெளி நாட்டு மதிப்பும் குறை யாமலிருப்பதுதான் நாட்டின் நல் வாழ்வுக்கு அறிகுறி. தவருன நிதிக் கொள்கைகளாலும், ஊதாரித் தனமான செலவுகளாலும் உணவுப் பொருள் உற்பத்திக்கு முதலிடம் அளித்து, அவற்றின் உற்பத்தியை பெருக்கிக் கொள்ளத் தவறுவதாலும் நாட்டின் பொருளாதாாம் நலிவுறும். நாணயத்தின் மதிப்பு வீழ்ச்சியுறும். அதன் விளைவாக விலைவாசிகள் ஏறிக்கொண்டே போகும். பஞ்சமும் பட்டினியும் பற்ருக்குறையும் அதிகரித்துக் கொண்டு தானிருக்கும். ஒரு நாட்டை அந்த நிலக்குக் கொண்டு செல்லும் எந்தக் கட்சிக்கும் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருக்க அருகதை யில்லை.

சென்ற இருபதாண்டுகளாக நாட்டை ஆளும் காங்கிரஸ் கட்சி மேற்சொன்ன தவறுகளைத் தொடர்ந்து செய்துகொண்டே வந்து நாட்டின் பொருளாதரத்தை கீழ் நோக்கிச் செல்ல வைத்து விட்டது. இவ்வளவும் ஓரளவுக்குத் தெரிந்திருந்தும், சென்ற தேர்தல் வரை பண்டித நேரு என்னும் ஒரு தனி மனிதர் மீது கொண்டிருந்த பற்றினுல் இயககப்பட்டே பெரும்பாலான மக்கள் காங்கிரசுக்கு வாக்களித்து வந்துள்ளனர். இன்ருே, நாட்டின் கௌரவத்தையும் தன் மானத்தையும் பாழ்படுத்திவிட்ட காங்கி ரசைப் பதவியிலிருந்து இறக்குவதற்குத்தான் நாட்டு மககளுள் பெரும்பாலானவர்கள் பதைபதைத்துக் கொண்டிருக்கிருர்கள். அவர்கள் அனைவருக்கும் கிடைததிருக்கும் அரிய வாய்ப்பே அடுத்து சில தினங்களுக்குள் நடக்க இருக்கும் பொதுத்தேர்தல் கள். பிறா சொல்லித் தான் பொதுமககள் தங்கள் கடமையைச் செய்யப் போகிருர்கள் என்று நாம் நினைக்கவில்லை. அந்த அளவுக்கு ஒவ்வொரு இந்தியருடைய அரசியல் அறிவும் பெருகி யுள்ளது. ஊழல்கள் நிறைந்த காங்கிரஸ் ஆட்சியால் சொல் லொணுத் துன்பங்கள் அனுபவித்துக் கொண்டிருப்பவர்கள் வாக்களிக்கும் நேரத்தில் மட்டும் அதை மறந்துவிடப் போவ தில்லை காங்கிரஸ் பதவியிலிருந்து இறக்கப்படும் நாளே நாடு நல் வாழ்வுப் பாதையில் நடை போடத் துவங்கும் நன்னு ளாக இருக்கும்!

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# திருமண அழைப்பிதழ்

அஸ்ஸலாமு அலைக்கும்!

பெருகிவரும் கருணையினால் பேருலகைக் காத்து வரும் எல்லாம் வல்ல இறைவனின் இன்னருளால்

நிகழும் ஹிஜ்ரீ 1386 ஷவ்வால் பிறை 29 (9-2-67) வியாழக் கிழமை மாலை, வெள்ளிக் கிழமை இரவு 10-30 மணிக்கு

---

*எங்கள் மைத்துனரும் மர்ஹூம் ஜனாப்*
*M. M. ஷேக் தாவூத் அவர்களின் மூத்த புத்திரனுமாகிய*
செல்வன்:

## M. S. செய்யது அலியார் B. A. க்கும்

*சென்னை 'முஸ்லிம் முரசு' ஸ்தாபகர் மர்ஹூம்*
*S. அப்துர் ரஹீம் அவர்களின் புதல்வியும்*
*சென்னை 'தாருல் இஸ்லாம்' ஆசிரியரும், குர்ஆன் மொழி பெயர்ப்பாளருமாகிய ஜனாப் அல் ஹாஜ் பா. தாவூத்ஷா B.A. அவர்களின் பேர்த்தியுமாகிய*
செல்வி:

## ரோஷனாரா பேகத்திற்கும்

---

'நிக்காஹ்' என்னும் திருமணம் செய்யப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு, கீழக்கரை அஹமது தெரு, மணமகன் இல்லத்தில் நடைபெறுவதால் தாங்கள் சுற்றம் சூழ வருகை தந்து சிறப்பிக்க வேணுமாய்க் கேட்டுக் கொளகிறோம்,

தங்களன்புள்ள

**M. N.** *முஹம்மது யூசுப்*
*மானேஜிங் பார்ட்னர் தாவூது ரெஸ்டாரெண்ட்*
*பினாங்கு, மலேசியா.*

**O.** *அப்துல் ஹமீது* (மெர்ச்சண்ட்)
*கீழக்கரை,*

---

அவ்வண்ணமே கோரும்:

*அல் ஹாஜ் பா. தாவூத்ஷா* பீ. ஏ

தங்கள் நல்வரவை எதிர்நோக்கும் சுற்றமும் நட்பும்,




# குடியரசுத் தலைவர்!

"அடுத்து வரும் தேர்தலைப் பற்றிக் கவலைப் படுபவன் அரசியல் வாதி. ஒரு ராஜதந்திரியோ அடுத்தடுத்து வரும் தலைமுறைகளின் நலனைப் பற்றியே சிந்திப்பவராவார். தன் கட்சியின் நலன் 'ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருப்பவன் அரசியல்வாதி. நாட்டின் நன்மைக்காக உழைப்பவர் ராஜதந்திரி" என்று ஜே. எம். கிளார்க் என்னும் அமெரிக்க அறிஞர் விளக்கியுள்ளார்.

எதிர்க் கட்சிகளைச் சேர்ந்தவர்களைச் "சனியன்கள்" என்றும் "பீடைகள்" என்றும் இன்னும் பிற மொழிகளில் மொழி பெயர்த்துக் கூற இயலாத மட்டமான அடைமொழிகளைக் கொண்டும் மேடை ஏறித் திட்டிக்கொண்டு திரிபவர்களும், தன்னுடைய கட்சி தேர்தலில் வெற்றி பெறுவதற்காக பஞ்ச தந்திரங்களையும் கையாளுவதற்குத் தயங்காத அரசியல் கட்சித் தலைவர்களும் முதல் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். ராஜ தந்திரி என்று அழைக்கப்படும் தகுதியற்றவர்கள்.

ராஜ தந்திரி என்னும் பெயருக்கு உரியவர்கள் ஏதாவது ஒரு அரசியல் கட்சியின் கொள்கைகளிலே நம்பிக்கை கொண்டவர்களாக இருக்கலாம். அல்லது எக் கட்சியையும் சாராத அரசியல் விவேகிகளாகவும் இருக்கலாம். அத்தகையவர்கள் கட்சி வேற்றுமைகளுக்கு அப்பாற்பட்டு நாட்டு மக்கள் அனைவருடைய நன் மதிப்புக்கும் பாத்திரமாக விளங்குவார்கள். அவ்விதமான பெருமைக்குரிய பெருமக்களே ஜனநாயக நாடுகளில் ஜனாதிபதிகளாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

சுதந்திர இந்தியாவிலும் அத்தகைய மாண்புமிக்க பெரியார் இருவர் அப் பதவியை அலங்கரித்து வந்துள்ளனர். முதலாவது ஜனாதிபதியான டாக்டர் ராஜேந்திர பிரசாத் அவர்கள் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவராயினும் நாட்டு மக்கள் அனைவராலும் ஒருமுகமாகப் போற்றி மதிக்கப்பட்டவர். அவர் ஜனாதிபதியாக இருக்கும் பொழுதே குடியரசின் துணைத் தலைவராக அமர்ந்திருந்து அடுத்து ஜனாதிபதியாகப் பதவி வகித்துவரும் டாக்டர் எஸ். ராதா கிருஷ்ணன் அவர்கள் எக கட்சியையும் சாராத, உலகமே மதிக்கும் தத்துவ மேதை என்பதை அனைவரும் அறிவார்கள். சந்தர்ப்பம் நேரும் போதெல்லாம், தவறுகளைச் சுட்டிக்காட்டிப் பகிரங்கமாகக்கண்டிக்கவும் அவர் தயங்கியதில்லை. அப்படிப்பட்ட ஒரு வழி காட்டி நாட்டின் ஜனாதிபதியாக அமர்ந்திருப்பது அதன் பாக்கியமே ஆகும்.

இவ்வாண்டின் குடியரசு தினத்தை யொட்டி அவர் வானொலி மூலம் நாட்டு மக்களுக்கு விடுத்த செய்தி உருக்கமானதாகவும் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்போர் உட்பட நாட்டு மக்கள் அனைவருக்குமே அறவுரை பயப்பதாகவும் இருந்தது. அரசாங்கத்தின் தவறுகளைக் கூட அவர் தாட்சண்யமின்றிக் கண்டித்தது சம்பந்தப்பட்ட

வர்களைத் திடுக்கிடச் செய்துள்ள தாகக் கூறப்படுகிறது.

உடல் நலமின்மை, ஆட்சியாளரின் போக்கு பற்றிய அதிருப்தி ஆகியவை காரணமாக மறுமுறையும் ஜனாதிபதிப் பதவியில் அவர் நீடிக்க விரும்பவில்லை என்றும் பேசப்படுகிறது. அடுத்த மே மாதம் 12-ந் தேதியுடன் அவருடைய பதவிக் காலம் முடியும்.

இந்த நிலைமையில் நாட்டின் அடுத்த ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்படலாம் என்று கூறப்படும் இரண்டொரு பெயர்களைப் பத்திரிகைகளில் படிக்கும் போது நாட்டின் எதிர்காலம் பற்றி நமக்குக் கவலை தோன்றுகிறது. அதெல்லாம் உண்மையில் நடைபெறக்கூடியதல்ல. சம்பந்தப்பட்டவர்களே கிளப்பி விடும் பிரசாரமாகவே இருக்கும் என்று நம்புவோம்.

ஜனாதிபதிப் பதவியில் அமரக் கூடியவர் நாட்டின் கலாச்சாரம், பண்பாடு, உயர் ஒழுக்கங்கள் முதலியவற்றையெல்லாம் பிரதிபலிக்கக்கூடிய அறிவுக் களஞ்சியமாக இருக்கவேண்டுமேயன்றி அரசியல் சூழ்ச்சிகள் புரிவதில் கை தேர்ந்தவர் என அவப்பெயர் தேடிக்கொண்டுள்ள அரசியல் வாதி எவருமாக இருக்க முடியாது. அப்படிப்பட்ட தரக்குறைவான அரசியல் தலைவர்களின் பெயர்களைக் குடியரசுத் தலைவர் பதவிக்கென பிரஸ்தாபிப்பதும்கூட அப் பதவியை அவமதிக்கும் செயலாகும் என்று அஞ்சுகின்றோம்.

இந்தியாவின் முதல் இரண்டு ஜனாதிபதிகளைப் போலவே அடுத்த குடியரசுத் தலைவரும் கட்சிப் பூசல்களில் சிக்கி உழலும் அரசியல்வாதியாக இராமல், கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்ட ராஜதந்திரியாக, அரசியல் விவேகியாகத் தேடிப் பார்த்துத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பதை இப்போதே நினைவூட்ட விரும்புகிறோம்!

# கண்டதும் கேட்டதும்



"முஸ்லிம் லீக் இவ்வாண்டு பொதுத் தேர்தலில் நிறுத்தியிருக்கும் வேட்பாளர்களின் வெற்றி வாய்ப்புகள் எப்படியிருக்கின்றன?" என்று கேட்டு உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் உள்ள நம் வாசகர்களிடமிருந்து நாள்தோறும் கடிதங்கள் வந்துகொண்டேயிருக்கின்றன: 1962-ம் ஆண்டுத் தேர்தலில் லீக் வேட்பாளர்கள் ஒருவர் கூட வெற்றிபெறாமல் போனதை நினைவில் கொண்டு அவர்கள் இவ்வாறு கவலையோடும் ஆர்வத்தோடும் எழுதுகிறார்கள்.

சென்ற ஐந்தாண்டுக் காலத்தில் நிலைமை எவ்வளவோ மாறியுள்ளது. காங்கிரசின் மீது மக்களுக்கு வெறுப்பு பன்மடங்காகிவிட்டது. சென்ற தடவை தி.மு.க. முஸ்லிம் லீக் ஆகிய இரு கட்சிகள் மட்டுமே நெருங்கி ஒத்துழைத்தன. இப்போது தி.மு.க. மிகப்பெரிய அளவில் வளர்ந்துவிட்டிருப்பதல்லாமல் கூட்டணியும் வலுவுள்ள எதிர்க் கட்சிகள் அனைத்தையும் ஒருங்கே இணைத்து அணைத்துக்கொண்டுள்ள பெரியதொரு அமைப்பாக விளங்குகிறது. எனவே வெற்றி வாய்ப்புகள் இத்தடவை மிக அதிகமாகவே இருக்கின்றன என்று உறுதி கூற விரும்புகிறேன்.



தலைநகரில் நமக்கு ஒதுக்கப்பட்டுள்ள ஒரே தொகுதியில் போட்டியிடுபவர் டாக்டர் ஹபீபுல்லா பேக் எம் பி பி.எஸ் அவர்கள் இந்துப் பெருங்குடி மக்கள் மிகப் பெரும்பான்மையாக வாழும் ஒரு தொகுதியிலிருந்து நகரசபைப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பதவி வகித்துவரும் இவர் சில ஆண்டுகளுக்கு முன் சென்னையின் உதவி மேயராக அமர்ந்து மிகச் சிறந்த முறையில் பணியாற்றியுள்ளார். ஆரம்ப காலத்தில் அரசாங்க டாக்டராகப் பணியாற்றிய இவர் அப் பதவியைத் துறந்துவிட்டு தனிப்பட்ட முறையில் டாக்டர் தொழில் புரிந்து வருகிறார். "கைராசி டாக்டர்" என்றும் "ஏழை மகககளின் டாக்டர்" என்றும் புகழ்பெற்ற இவர் எளியவர்களுக்

குத் தொண்டு செய்வதில் இன்பம் காண்பவர். பொதுப் பணிகளிலும் முஸ்லிம் லீக் ஸ்தாபனப் பணிகளிலும்பங்குகொண்டு இரவு 11 மணிக்குத் தம் வைத்திய சாலேக்கு அவர் திரும்பிச் சென்ருலும் பொறுமையோடு காத்திருந்து அவரிடம் சிகிச்சை பெற்றுத் திரும்புவார்கள் அவரிடம் வரும் நோயாளிகள். இனிய சுபாவமும், அதே சமயத்தில் உள்ளத்தில் தோன்றியதை ஒளிவு மறைவின்றியும் தாட்சண்யமின்றியும் திறந்து பேசி விடும் இயல்பும் சுயநலமின்மையும் கொண்ட இத்தகைய ஊழியர் ஒருவர் சென்னே ஹார்பர் தொகுதிக்குக் கிடைத்திருப்பது பற்றி அப் பகுதி மக்களே நாம் பாராட்டுகிருேம்.

**நா**டறிந்த நாவலர், சொல்லின் செல்வர் ரவண சமுத்திரம்



அல்ஹாஜ் எம் எம். பீர்முகம்மது அவர்களே அறியாதார் தமிழகத்தில் இருப்பது அரிது. முஸ்லிம் லீகின் தீவிர ஊழியர் என்பதற்காகவே சிறைவாசம் அனுபவிக்கும்படி செய்யப்பட்ட தியாகி பொது வாழ்வில் பரந்த அனுபவம் கொண்ட ஹாஜி சாஹிப் அவர்கள் இலங்கை, பர்மா, மலாயா, முதலிய நாடுகளிலெல்லாம் அடிக்கடி சுற்றுப் பிரயாணம்செய்து இஸ்லாமியத் தொண்டு ஆற்றியவர். அந்த அளவுக்கு பொதுவாழ்விறகும் சமுதாயத்தின் ஸ்தாபனத்திற்கும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். ஊராட்சி மன்ற உறுப்பினராகவும் பணியாற்றி வருகிருர். உயர்நிலேப் பள்ளி இறுதி வகுப்பு வரைகூட முறையாகப் பயிலாத இவரைப் பல் கலேக் கழகங்கள் சிறப்புரைகள் நிகழ்த்த அழைக்கின்றன என்ருல் பலருக்கு அது வியப்பளிக்கும் செய்தியாக இருக்கலாம். புள்ளி விவரங்களில் பெரும் நிபுணரான இவர் சட்டமன்ற வாயிலாகவும் மக்களுக்கு சேவை புரியப் போகும் அந் நந்நாளே விரைவில் எதிர்பார்க்கிறேன்.

**பா**பநாசம் தொகுதியில் நிற்கும் ஜனப் ஏ. முஹம்மது சாலிஹ் பி ஏ. பி எல். அவர்கள் ஒரு வழக்கறிஞர், தஞ்சை மாவட்டத்தின் பிரபல லீக் ஊழியர்களுள் ஒருவரான ஜனப்



குலாம் மெய்தீன் அவர்களின் இளவல் இவர். இவரை எதிர்த்துப் போட்டியிடும் காங்கிரஸ் வேட்பாளர் தஞ்சை ஜில்லாவின் பெரிய நிலக்கிழார்களுள் ஒருவர். அப்படியிருந்தும் லீக் அபேட்சகருக்கே வெற்றி வாய்ப்புகள் அதிகமாக இருப்பதாக தேசீயப் பத்திரிகைகளே ஒப்புக் கொண்டுள்ளன.

ராணிப்பேட்டைத்தொகுதியில் லீக்ஊழியரான ஜனுப் எம். ஏ. கபூர் அவர்களுக்கு எதிராக காங்கிரசும் ஒருமுஸ்லிம் அபேட்சகரை நிறுத்தியிருக்கிறது.



காங்கிரஸின் வேட்பாளர் வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள மிகப் பெரிய பஸ் முதலாளிகளுள் ஒருவர் எனினும் லீக் வேட்பாளருக்கே வெற்றிவாய்ப்பு அதிகம் என்று நமக்குக் கிடைக்கும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

இத் தேர்தலில் நமக்கு ஒதுக்கப்பட்டுள்ள ஒரே ஒரு பாராளுமன்றத் தொகுதி ராமநாதபுரம் தொகுதியாகும். மதுரையின் நகரசபை உறுப்பினரான. ஜனுப் எஸ். எம் ஷரீப் எம். ஏ. அவர்கள் லீக் வேட்பாளராக இங்கு போட்டியிடுகிறார். சிறந்த பேச்சாளரும். முஸ்லிம் லீகின் முன்னணி ஊழியர்களுள் ஒருவருமான ஜனுப் ஷரீப் சாஹிப நெடுங் காலமாக சமுதாயத் தொண்டிலும் பொதுத் தொண்டிலும் ஈடுபட்டுப் பரந்த



அனுபவம் பெற்றுள்ளார் எம். ஏ. பட்டதாரியான இவர் தனிப் பட்ட முறையில் சட்டமும் பயின்று ஒரு பகுதி தேர்வு பெற்றிருக்கிறார். இவருடைய கல்வியறிவும் பொது வாழ்வில் இவர் பெற்றுள்ள பயிற்சியும் இவர் ஒரு சிறந்த "பார்லிமெண்டேரியன்" ஆகத் திகழ்வதற்கு உதவுமென்று நம்புகிறேன்.

"நாட்டிலேயே மிகவும் எளிய வனான ஒருவனும்கூட நேர்மை என்னும் கவசம் தாங்கி, அரசியல் போராட்டத்தில குதிக்கும்போது, தவறானவற்றைத் தாங்கி நிற்கும் பெரும் கூட்டத்திற்கு இருப்பதைவிட அதிகமான வலிமையைப்பெற்றுவிடுகிறான்!" என்பதாக டபிள்யூ ஜே. பிரையன் என்னும் மேலை நாட்டு அரசியல் அறிஞர் ஒருயிருக்கிறார்.

முஸ்லிம் லீக் வேட்பாளர்கள் வெற்றி பெறுவதற்கு இதைவிட வேறு அத்தாட்சி வேண்டுமா?

# காங்கிரசுக்கு வோட்டுப் போடலாமா?

காயிதெ மில்லத் எம். முகம்மது இஸ்மாயீல் ஸாஹிப், எம்.பி.

**கா**ங்கிரஸ் தலைவர்கள் இன்னொரு ஐந்து வருடங்கள் அதிகாரம் கொடுக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். தாங்கள் தான் தேசத்தை நல்லாட்சியில் வைக்க முடியும் என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்களுடைய ஆட்சி ஒன்றிரண்டு ஆண்டுகள் அல்ல, இருபது ஆண்டுகள் நடந்துவந்திருக்கின்றது. ஜனநாயக வரலாற்றிலே இவ்வளவு நீண்ட காலம் ஒரு கட்சியினர் ஆட்சியிலிருந்தது கிடையாது இவ்வளவு நீண்ட காலம் நாட்டுக்கு என்ன நலனை உண்டாக்கியிருக்கிறார்கள் என்பது மூடு மந்திரமல்ல நலன் என்பது மக்கள் அனுபவிப்பது அதனால அது ரகசியமாக இருக்கமுடியாது மக்கள் அநுபவிப்பதாகக் காங்கிரஸ்காரர்கள் சொல்லும் அந்த நலனைப் பற்றி மக்களை சொல்லட்டுமே! அவர்கள் "நாட்டில் உணவுப் பொருளுக்குப் பஞ்சமில்லை. குடி தண்ணீருக்குக் குறைவில்லை" என்று சொல்வார்களா?

இவ்வளவு பஞ்சமும் குறைவும் எப்பொழுது ஏற்பட்டிருக்கிறது? முன்பு எப்பொழுதுமில்லாத மிதமிஞ்சிய வரியை இந்த இருபது வருஷ காலமும் மக்களிடமிருந்து வசூலித்து அதுவும் பற்றாதென மக்களையெல்லாம் அடகுவைத்து அந்நிய நாடுகளிலிருந்து ஆயிரக் கணக்கான கோடி ரூபாய் கடன் வாங்கி ஐந்து வருஷத் திட்டங்கள் ஒன்றுக்கு மூன்றாகப் போட்டுத் தர்பார் நடத்தினார்கள். இவ்வளவு செய்த பின்பும் பஞ்சம் என்கிறார்கள்.

மழை குறைவதோ, இல்லாமலே போவதோ இப்போது மட்டுமல்ல, மற்ற நாடுகளில் ஏற்படுவது போல் நம் நாட்டிலும் வழக்கம்தான் இதுவெல்லாம் ஆட்சி செய்தவர்களுக்குத் தெரியாமலா போய்விட்டது? இதையெல்லாம் மனத்தில் கொள்ளாமல் வேறு எதையோ நினைத்துத் திட்டமிட்டார்கள்.

உலகம் மிக்க நாகரீகம் பெற்று முன்னேறிவிட்டது என்று சொல்கிறோம் உண்மைதான்.



ஆனால் இந்த நாகரிகங்களுக்கெல்லாம் முன்னால் ஏழாயிரம் வருஷங்களுக்கு முன்பு எகிப்தை ஆண்டவர்கள் பஞ்சம் வருவதற்குமுன்னால் அதற்கான அறிகுறிகளை அறிந்து தக்க ஏற்பாடுகளைச் செய்தார்கள் பின்னர் பஞ்சம் உண்மையில் வந்துவிட்ட போது எகிப்து நாட்டில் மக்களுக்கு வேண்டிய அளவு உணவு இருந்தது மட்டுமல்லாமல் பஞ்சத்தால் வாடிய சுற்றியுள்ள நாட்டு மக்களுக்கும்கூட உணவு தானியம் கொடுத்து உதவும் அளவுக்கு முன்னேற்பாடுசெய்து வைத்திருந்தார்கள் ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முன் செய்த திட்டம் அப்படி. அதற்குப் பின் ஏழாயிர வருஷ காலம் நாகரிகம் முன்னேறியிருக்கும் இக்காலத்தில், அதுவும் திறமைசாலிகள் புத்திசாலிகள் என்று சொல்லிக் கொள்ளும் காங்கிரஸ்காரர்கள் ஆட்சி செய்யும் இந்த நாட்டில்

இவ்வளவு பஞ்சம். இவர்களுடைய திறமையின் அழகும் திட்டங்களின் உயர்வும, இதிலிருந்து மக்களுக்குத் தெரியாமலா போகும்?

மற்ற துறைகளிலும் காங்கிரஸ் கட்சியாருடைய சாதனைகள் என்ன?

நாலு வண்டிகள் போனால் குழிவிழும் ரஸ்தாக்களும், மருந்தும் வைத்தியர்களும் இல்லாத ஆஸ்பத்திரிக் கட்டடங்களும் தண்ணீர் பாய்ச்சிப் பயிர்செய்ய முடியாத லட்சக் கணக்கான ஏக்கர் நிலங்களின் மத்தியில் உள்ள அணைத் திட்டங்களும் நூற்றுக் கணக்கான கோடி ரூபாயில் நிர்மாணித்து விட்டபின் ஆணி போன்ற சில உறுப்புகள் வெளிநாட்டிலிருந்து வாங்குவதற்கு அந்நியச் செலாவணி இல்லை என்பதால் துருப் பிடித்துப் போயோ ஓடத் தயங்கிக் கொண்டோ இருக்கும் தொழிற் சாலைகளுமதானா இவர்கள் இருபது வருஷ காலத்தில் திறமையுடன ஆட்சி செய்ததின் பலன்? இத்தனை கோடானு கோடி ரூபாய் செலவுசெய்து நாட்டுக்கு உருவாக்கியுள்ள சொத்து இது தானா?

கேட்கப்போனால், லஞ்ச ஊழல் பெருத்துவிட்டது என்கிறார்கள் அதன் அர்த்தம் மககளின் பணம் களவு போய் விட்டது எனபதாகும். அதிகத் திறமையுடனும், கவனத்துடனும் காவல் செய்துவந்த காங்கிரஸ் ஆட்சியினர் எவ்விதம் இப்படிக் களவுகொடுத்தார்கள்? திட்டமிட்ட இடங்களில் இல்லாமல் மற்றவர்களுடைய கையில் பணம் மிதமிஞ்சிக் குவிந்திருப்பதற்குக் காரணம் என்ன? இதைப்பற்றி விசாரிக்க வேண்டுமென்ற கூக்குரலுக்குக் காங்கிரஸ் கட்சியினர் செவி சாய்க்கிறார்களா? இது வல்லாம மக்கள் அறியாதவையா?

நாட்டுப் பணத்தைக் களவு கொடுத்ததோடு நிற்காமல், காப்பதற்கு என்று இவர்களிடம் ஒப்படைத்த நாட்டின் பகுதிகளையே களவு கொடுத்து விட்டார்கள்.

சீனாக்காரன் கையில் இன்னும் இருந்துவரும் பகுதி 20,000 சதுர மைல் என்று காங்கிரஸ் காரர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் அது 50,000 சதுரமைல் என்று சொல்லும் ஆராய்ச்சியாளர்களும் நம் நாட்டில் உண்டு. இதில் விசேஷம் சீனாக்காரன் நம்நாட்டுக்குள் நுழைந்து ஆக்கிரமித்துக்கொண்ட சங்கதி இரண்டு வருஷங்களுக்கு மேலாக ஆட்சியாளருக்குத் தெரியாதாம் நம் நாட்டின் ஒரு பகுதியாகிய கட்ச்'சில் பாகிஸ்தானியர்கள் நுழைந்து நடமாடி வந்தது ஒரு வருஷம் வரை இவர்களுக்குத் தெரியாதாம். நாட்டைக் காங்கிரஸ் கட்சியினர் காக்கும் இலட்சணம் இது! இதற்குமேலும் அவர்கள் மக்களிடம் சொல்லுகிறார்கள், "நாங்கள்தான் நாடாளத் தெரிந்தவர்கள்" என்று. இந்நாட்டு மக்களை இவர்கள் எவ்வளவு கேவலமாக மதித்திருக்கிறார்கள்! — இவர்களைக் கண்டு உலகம் நகைப்பதில் வியப்பில்லை!

தேசம் சுதந்திரம் பெற்ற ஆரம்பகாலத்தில் நம்மைமிகுந்த மதிப்புடன் கொண்டாடின உலக நாடுகள். இன்று சிறுசிறு நாடுகள் கூட நம்மை ஏளனம் செய்யும் நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்ட திறமைசாலிகள், புத்திசாலிகள் காங்கிரஸ்காரர்கள்! நாட்டின் நலத்தை மனத்தில் கொண்டவர்கள்—வருங்கால சந்ததியினரின் உரிமைகளையும் மதிக்க வேண்டிய மனிதர்கள். இன்னும் இந்த ஆட்சிக்குத் தாட்சண்யம் காட்டலாமா? அது எந்த விதத்திலாவது நியாயமாகுமா என்பதைக் கவனிக்க வேண்டும்.

# காங்கிரசை ஏன் வீழ்த்த வேண்டும்?

## கலைஞர் மு. கருணாநிதி

நச்சரவை ஏன் அடிக்க வேண்டும்? தேளை ஏன் நசுக்க வேண்டும்?

இந்தக்கேள்விகளுக்கும் 'காங்கிரஸை ஏன் வீழ்த்த வேண்டும்?' என்ற கேள்விக்கும் வேறுபாடு ஒன்றுமில்லை.

காங்கிரஸ் என்ற அந்த ஆங்கிலச் சொல்மீது எந்தவிதக் காழ்ப்பும் நமக்கில்லை.

தேளுக்குப் பெயர் "தேன்" என்று அப்போதே வைத்திருந்தால்கூட அந்தப்பெயர்கொண்ட நச்சுப் பூச்சியை நாம் வெறுத்துத்தான் ஒதுக்குவோம்.

திலகரும்—லஜபதிராயும், காந்தியும்—ராஜாஜியும், படேலும்—நேருவும், நேதாஜியும் சிதம்பரனாரும் வளர்த்தகாங்கிரஸ்என்று பெருமை பேசும் போதெல்லாம் இந்திய விடுதலைக்குக் குண்டடி பட்டுச்செத்த வீரர்களின் தியாக வரலாறே நம்முன் நிற்கும் இன்றோ பஸ் ரூட்—பர்மிட்—கோட்டா — லைசென்ஸ் என்ற பரிசுகள் பெற்ற கனதனவான்களின் காங்கிரசே நம் கண்களுக்குத்தெரிகிறது.

எட்டு முறை சிறைசென்றவர் என்ற திருப்பெயர் மாறி, ஏழு பர்மிட்டுகள் வாங்கியவர் என்ற பெருமையும் அந்தஸ்தும் இன்றையக் காங்கிரசின் நிலா வெளிச்சமாகக் கருதப்படுகிறது

இவர் உப்புச் சத்தியாக் கிரகத்தில் உதைபட்டவர் என்று அவர்தம் தழும்புகளுக்கு முத்தம் கொடுத்தது அன்றையக் காங்கிரஸ்.

இவர் ஒரே மந்திரி சிபாரிசில் ஒன்பது பஸ் ரூட்கள் பெற்றவர் என்று அவர்தம் படிக்கட்டில் பல் இளித்து நிற்கிறது இன்றையக் காங்கிரஸ்.

இப்போது புரிகிறதல்லவா? காங்கிரசின் வரலாறு வாழ்த்துக்குரியது. அதன் இன்றைய வாழ்க்கை ஏழைகளின் சாபத்துக்கும், தியாகிகளின் கோபத்துக்கும் உரியது.

இருபதாண்டு காலம் ஒரே கட்சியின் கையில் கட்சிச் சகடம் சுழலுகிறது. என்ன வழி இனிமேல் பிழைப்பதற்கு என்று தெரியாமல் மக்களின் தலையும் சுழலுகிறது.

குதி கயிறு தாண்டுகிற சிறுமிகள், தாவித் தாவிக் குதிப்பது போல் இருந்தாலும் ஒரே இடத்தில்தான் குதித்துக் கொண்டிருப்பார்கள்.

அதற்கும் காங்கிரசின் திட்டச் சாதனைகளுக்கும் அதிக வித்தியாசமே இல்லை.

குடை ராட்டினக் குதிரைகள் போல விலைவாசி ஏற்றமும் மக்களின் வாங்கும் சக்தியும் இருப்பதை எடுத்துக் காட்டாத மக்கள் பிரதிநிதிகள் இல்லை அலட்சியம் ஒன்றே காங்கிரஸ் அரசின் விடையாகத் திகழகிறது

அரிசியிலே கல்லைக் காணீர் எனக் கண்ணீர் வடித்தால்; "கல் இருப்பதற்காக ஆத்திரப் படாதே! அரிசியும் இருப்பதற்

காக ஆச்சரியப்படு!'' என்று கூறுகிறது காங்கிரஸ் அரசு.

மானமாற உடை இல்லை எனிலோ, வானமே வையத்தின் நீல உடை எனக் கவிதை எழுதிக் காட்டுகிறது காங்கிரசு.

வரிச்சுமை தாளவில்லை எனப் புலம்பும் மக்கள்மீது வறுமைத் தோள் உண்டே, அந்த வலிமைத் தோளால் தாங்குவது தானே என வக்கணை பேசுகிறது காங்கிரசு

நாணய மதிப்பும் போயிற்று; நாட்டு மதிப்பும் போய்க் கொண்டிருக்கிறது.

கைநீட்டாத நாடில்லை. கடன் பெறாத நாடில்லை ... கண்ணீர் வெள்ளமும் நின்றபாடில்லை.

வருங்கால மன்னர்களாம் இந் நாட்டுக் குழந்தைகளின் தலையில் இப்போதே எண்பத்தைந்து ரூபாய் மதிப்பில் முள் கிரீடம் சூட்டிக் கடன்கார சாம்ராஜ்யத்தைப் பரவலாக்குகிறது காங்கிரசு.

இத்தனை மோசடிக்கும் விமோசனம் புதிய அரசு என எதிர்க் கட்சிகள் பேசினாலோ, ''ஆகா! ஊகூ!'' என்று ஜனநாயகத்தின் கழுத்தை வெட்ட அரிவாள் தூக்குகிறது காங்கிரசு!

இப்போது சொல்லுங்கள்: நச்சரவு ஏன் அடிக்கப்பட வேண்டும்?

தேள் ஏன் நசுக்கப்பட வேண்டும்?

காங்கிரஸ் ஏன் வீழ்த்தப்பட வேண்டும்?

நன்றி: 'கல்கி'

# நாட்டின் நன்மையைக் காப்பீர்!

## ராஜாஜி

எல்லா அரசியல் கட்சிகளும் தத்தம் தேர்தல் அறிக்கையை வெளியிட்டிருக்கின்றன.......அந்த அந்தக் கட்சி, தான் அதிகாரத்துக்கு வந்தாலோ, அல்லது சட்ட மன்றங்களில் எதிர்க்கட்சியாக உட்கார்ந்தாலோ எந்தக்கருத்துக்களை வற்புறுத்தும் என்பதை இந்த அறிக்கைகள் விளக்கியிருக்கின்றன.

ஆனால் தற்போது மக்கள் கவனிக்கவேண்டிய விஷயம்



ஒன்றே. காங்கிரஸ் கட்சி மறுபடியும் ஐந்து வருஷங்கள் மக்களிடம் பட்டாப் பெற்று அதிகார ஸ்தானத்துக்கு வந்தால்,தேசம் கடன்பட்டுப் பாழாகி ஏழைமக்கள் துயரத்தில் சிக்கித் தத்தளிப்பார்கள் இந்தமுடிவுக்கு எதிர்க் கட்சிகள் அனைத்தும் வந்திருக்கின்றன ஆனபடியால காங்கிரஸுக்கு வோட்டு முத்திரை வைக்காதீர்கள். இரட்டை மாட்டுச் சின்னத்திற்கு முத்திரை வைக்காதீர்கள்.

தமிழ்நாட்டில் கூட்டணி எதிர்க் கட்சிகள் ஒன்றுபட்டு நிறுத்தியிருக்கும் அபேட்சகருக்குக் கட்டாயம் வோட்டுச் செய்யுங்கள். உதாரணமாகச் சொல்லுகிறேன்: சுதந்திராக் கட்சி அபிமானிகள் அனைவரும் கூட்டணி வேட்பாளர் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவராயின் அவருக்கே வாக்களித்து உதய சூரியன் சின்னத்துக்கு முத்திரை போடவேண்டும். தம்முடைய கட்சியாளர் அல்லவே என்று வருத்தப்பட வேண்டாம். கூட்டணி வேட்பாளர் அனைவரும நம்முடைய வேட்பாளரே.

நான் விடுத்திருக்கும் இந்த வேண்டுகோளை மதித்து நாட்டினுடைய நன்மையைக் காப்பீர்களாக. காங்கிரசுக்குத் தோல்வி கொடுத்தால்தான் நாட்டில் நல்லாட்சி தோன்றும். லஞ்சமும் மோசமும் தீர்ந்து, மலையுச்சி ஏறியிருக்கும் விலை வாசிகள் கீழ் இறங்கி, பாரதநாடு தான் இழந்துவிட்ட மதிப்பை மறுபடியும் சம்பாதிக்க வழி ஏற்படும். இருபது ஆண்டு நிருவாகத்தில் காங்கிரஸ் செய்திருக்கும் பணி நாட்டை அன்னிய அரசாங்கங்களுக்குத் தீர்க்கமுடியாத 4000 கோடி ரூபாய்க்கு மேல் கடன்களுக்கு அடகு வைத்திருப்பது ஒன்றே. அதிகார பலத்தைக் கொண்டு, நாட்டில் மக்கள் சேமித்து வைத்திருக்கும் பணத்தைச் சுரண்டித் தன் அதிகாரம் நீடித்திருக்கச் செய்து வருகிறது காங்கிரஸ் இந்தத் தேர்தலில் மக்கள் தைரியமாக எதிர்க் கட்சிகளின் கூட்டணி வேட்பாளர்களுக்கு முழு ஆதரவு தர வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்

'காங்கிரசுக்குத் தோல்வி கொடுத்தால நாட்டில் அராஜகம் ஏற்படும். நிருவாகம் ஒழுங்காக நடக்காது' என்று காங்கிரசைச் சேர்ந்த யார் சொன்னாலும் நம்பாதீர்கள். அராஜகம் ஒருநாளும் ஏற்படாது. நியாயமான நிருவாகம் நடைபெறும்.

நன்றி: 'கல்கி'




# 26. இஸ்லாமிய அரசியல் நெறி

“உங்களுள் ஒவ்வொருவரும் ஒரு ஆட்சியாளரே. எனவே உங்களுள் ஒவ்வொருவரும் அவரவர் ஆட்சிக்குட்பட்டவர்களைக் குறித்து (மறுமை நாளில்) விசாரிக்கப் பெறுவீர். ஆட்சியாளனை மன்னன் அவனுடைய குடிமக்களைக் குறித்தும், குடும்பத் தலைவன் அவனுடைய பராமரிப்பின் கீழுள்ளவர்கள் பற்றியும், குடும்பத் தலைவி தன் கணவனின் வீட்டு நிர்வாகம் பற்றியும் விசாரிக்கப் பெறுவர். ஒரு ஊழியனும் கூட தன் எஜமானனுடைய பொருள் சம்பந்தப்பட்டவரை அதற்கு ஆட்சியாளன் ஆவதால் அவனிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்பு பற்றி அவனும் விசாரிக்கப்படுவான்” (புகாரீ 11 : 11)

அபூபக்கர் (ரலி) கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது, “நான் செய்து வந்த தொழில் என் குடும்ப நிர்வாகத்துக்குப் போதுமானதாக இருந்து வந்தது மக்களுக்குத் தெரியும். இப்போதோ, நான் முஸ்லிம்களுடைய ஊழியத்தில் ஈடுபட்டிருப்பதால் என் குடும்பம் (பைத்துல் மால் எனும்) பொதுக் கருவூலத்திலிருந்து தனது உணவுத் தேவையைப் பெற்றுக் கொள்ளும்” என அவர்கள் கூறியதாக ஆயிஷா (ரலி) அறிவித்தார்கள். (புகாரீ 34 : 15)

ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்வோரின் நிலைமை இன்னது என்றும், அவர்களுடைய கடமைகள் யாவை என்றும் மேற்கண்ட ஹதீதுகளிலிருந்து தெரிந்து கொள்கிறோம்.

முறையற்ற ஆட்சியை, திறமையற்ற ஆட்சியை மக்கள் சகித்துக் கொண்டிருந்த போதிலும்கூட நாளை மறுமைநாளில் இறைவன் முன்னிலையில் பதில் சொல்லித் தீர வேண்டும் என்ற அச்சம் ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்துள்ளவர்களுக்கு இருந்தால் நிர்வாகம், நீதியும் நேர்மையும் பொருந்தியதாகவும், ஊழல்கள் இன்றி திறமையானதாகவும், அமையும். ஆரம்பகால இஸ்லாமிய கலீபாக்கள் அத்தகைய உள்ளச்சத்துடனேயே ஆட்சி செலுத்தி வந்தார்.

உச்சத்திலிருந்து ஆட்சி செலுத்துவோருக்கு மட்டுமன்றி, எந்தவிதமான பதவியும் வகிக்கும் பொது ஊழியருக்கும் கூட அது பொருந்தும் என்பதையும் காண்கிறோம்.

மேலும் நாட்டையாளும் தலைவராகவோ, மந்திரிகளாகவோ தேர்ந்தெடுக்கப்பட்டபோதிலும் கூட அவர்கள் தம் குடும்ப நிர்வாகத்திற்கு வேண்டிய பொருளை மட்டும் பொது நிதியிலிருந்து ஊதியமாகப் பெற்றுக் கொண்டு நாட்டின் முழுநேர ஊழியராகப் பணிபுரிய வேண்டும் என்பதையும் அறிந்துகொள்கிறோம். அதாவது, நாட்டையாளும் மந்திரிகளாக இருந்தாலும் கூட அவர்கள் பொதுமக்களின் ஊழியர்களே அன்றி எஜமானர்கள் அல்ல என்பதை இஸ்லாமிய அரசியல்நெறி வலியுறுத்துகிறது.

இன்றைய ஆட்சியாளர்களாக விளங்கும் மந்திரிகளுள் எத்தனை பேர், காந்திஜீ சிபாரிசு செய்த, மேற் கூறிய வழி முறைகளைப் பின்பற்றுகிறார்கள்? ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்பவர்களே இறைவனுக்கஞ்சாமல் நேர்மையற்ற வழிமுறைகளைப் பின்பற்றினால் அவர்களின் கீழ் பணி புரியும் பொது ஊழியர்களிடம் நேர்மையையும், நீதியையும், வஞ்சனையற்ற திறமையான உழைப்பையும் நாம் எவ்வாறு எதிர்பார்க்க முடியும்?

எனவே ஆட்சித் துறையில் எத்தகையபதவிவகிப்பவர்களாக இருப்பினும், தாம் பொதுமக்களின் சேவகர்களேயன்றி எஜமானர்கள் அல்ல என்பதையும், முதலில் மக்களுக்கும் அதற்கும் மேலாக இறைவனுக்கும் பதில் சொல்ல வேண்டியவர்கள் என்பதையும் எப்போதும் நினைவில் கொண்டிருந்தார்களானால் தான் நாடு நலம் பெறும். இஸ்லாமிய அரசியல் நெறியின் அடிப்படைத் தத்துவம் இதுதான். முஸ்லிம்களல்லாதவர்களும் கூடத் தயங்காமல் பின்பற்ற வேண்டிய உயர் நெறி இது!

---

## சந்தாதார்கள் கவனத்திற்கு!

சந்தாத் தொகை அனுப்பும் பொழுதும் கடிதம் எழுதும் பொழுதும் தங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடுக.

திருவாகி, 'முஸ்லிம் முரசு'

# வெற்றி விழா!

மத்திய தரைக்கடல் தீவுகளில் ஒன்ருன சைப்ரஸ் நாடு ஒரு காலத்தில் முஸ்லிம்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. அந்த நாட்டை கி. பி. 649–ஆம் ஆண்டில் கைப்பற்றிய படையுடன் பெருமாஞர் (ஸல்) அவர்களின் பிரிய தோழர்களுள் ஒருவரான ஹலரத் ஆபூதர்தா (ரலி) என்னும் பெரியாருமசென்றிருந்தார்கள். "என்னைச் சேர்ந்தவர்களுள் மிகப் பெரிய துறவி அபூதர்தா தான்!" என்று நாயகம் (ஸல்) அவர்களாலேயே பாராட்டப் பெற்றவர் அவர்.

சண்டையெல்லாம் ஓய்ந்து முழுமையான வெற்றிகிட்டிய பிறகு முஸ்லிம்கள் வெற்றி விழாவை அளவுகடந்த உற்சாகத்துடன் கொண்டாடத் தொடங்கினர். அதே நேரத்தில் தோல்வியுற்று நாட்டைப் பறிகொடுத்த மக்களுள் பெரும்பாலாஞேர் நாட்டைவிட்டு வெளியேறிக்கொண்டிருந்தனர்

ஊரெல்லாம் வெற்றி விழாக் கோலம் பூண்டிருந்த போது ஹலரத் அபூதர்தா மட்டும் ஒரு மூலையில் அமர்ந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார்.

"மகிழ்ச்சியான இவ் வேளையில் இம் மனிதர் மாத்திரம் அழுது கொண்டு நம்முடைய சந்தோஷத்தைக் குலைக்கிருரே!" என்று பலர் ஆத்திரப் பட்டனர்.

"அவருடைய உள்ளம் புண்படும்படியாக என்ன நிகழ்ந்தது விட்டதோ, தெரியவில்லையே!" என்று அச்சம் கொண்ட ஒரு சிலர், அவரை அணுகி அவருடைய துக்கத்தின் காரணத்தைக் கேட்டார்கள்.

அழுகையை நிறுத்தாமலேயே அவர் சொன்ஞர்:

"இந்த நாட்டைச் சேர்ந்த மக்கள் தம் தேசத்தை இழந்து வீடு வாசல்களைத் துறந்து நாட்டைவிட்டே வெளியேறிக் கொண்டிருப்பதைப் பார்க்கிரேமல்லவா? நல்ல நிலையில் வாழ்ந்து வந்த வலிமை வாய்ந்த ஒரு சமுதாயம்தானே அது! ஆனல் இறைவனின் கட்டளைகளுககு மாறுசெய்து, வரையறைகளை மீறிய சுகபோக வாழ்வில் ஈடுபட்டதாலேயே அவர்களுக்கு இந்த நிலைமை ஏற்பட்டது. எங்கே நம்முடைய சமுதாயமும் ஒரு காலத்தில் அவர்களைப் போலவே நடந்து கொண்டு அதன் விளைவாக இதுபோன்ற நிலைமையை அடைந்துவிடுமோ என்று சிந்தித்துப் பார்த்தபோது ஏற்பட்ட துக்கத்தை என்னல் அடக்கிக்கொள்ள முடியவில்லை!"

கோலாகலமான அவ்வெற்றி விழாக் கொண்டாட்டங்கள் உடனே நிறுத்தப் பட்டன!



உம்... ம்... ம்... கொஞ்சம் தள்ளினால் போதும், கிளம்பி விடும். ஜோரான என்ஞ்சின்தான். ஆனால் நாம் கை கொடுத்துத் தள்ள வேண்டியிருக்கிறது. கிளம்பிவிட்டால் பின் கவலையில்லை.

இந்தியப் பொருளாதாரம் என்ற வண்டி இப்போது கிளம்பிவிட்டது. உருக்கு ஆலைகளும், யந்திர சாதனங்களும், மின்சார திட்டங்களுமே நம் பொருளாதார உயர்வுக்கு ஆதாரம்.

வேலை ஆரம்பமாகிவிட்டது. முன்னேற்றம் திட்டமாக நடைபெறுகிறது. அதில் சந்தேகமில்லை.



**தன்னம்பிக்கையூட்டும்**

**பொருளாதாரம் இதுவே!**

DA-66/579

முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் தமிழுக்கும் தமிழ் வாயிலாகத் தம் மார்க்கத்திற்கும் ஆற்றியுள்ள தொண்டு அளவிடற்கு அரியது. போற்றத்தக்க முஸ்லிம் பெரும் புலவர்களுள் எண்மரைப் பற்றிய சுவையான அறிமுகம் இது. அப் புலவர் பெருமக்களையே பேசவைக்கும் அரியதொரு நாடக பாணியில் அன்பர் "ஜேயெம்" அவர்கள் படைத்தளித்துள்ள இவ்வரிய "இலக்கிய யாத்திரை" ரேடியோ மலேசியாவில் ஒலிபரப்பாகியது. அனுமதி பெற்று பிரசுரிக்கப்படுகிறது. இதன் முதற் பகுதி சென்ற இதழில் வெளியாகியது.

# கவிக் குரல்

(4)

ரசிகன்: காசிம் புலவர் அவர்களே! தமிழிலே பல திருப்புகழ்கள் தோன்றியிருக்கின்றன. என்றாலும் அருணகிரி நாதர் இயற்றிய திருப்புகழும் தங்களது திருப்புகழும் இணையற்றுவிளங்குகின்றன. ஒன்றுக்கு மற்றொன்று குறைந்தது அல்ல. தமிழிலே எத்தனையோ கவி வடிவுகளும், இலக்கிய முறைகளும் இருக்க, தாங்கள் திருப்புகழ் பாடியதற்கு ஏதேனும் காரணம் உண்டா?

காசிம்: உண்டு. எனது இளமைப் பருவம். திருவடிக்கவிராயர் என்ற பெரும் புலவரிடம் தமிழ் இலக்கியம் பயின்று கொண்டிருந்தேன். அந்த ஆசிரியர் எப்பொழுதும் அருணகிரிநாதரின் திருப்புகழின் பெருமையையே பாடிக்கொண்டிருப்பார். இதை அடிக்கடி கேட்டு என் காதும் புளித்துவிட்டது. ஒரு நாள் திருப்புகழின் பெருமையை வழக்கம்போல் ஆசிரியர் சொல்லிக்கொண்டிருந்தபோது, எனக்கு ஏதோ வேகம் ஏற்பட்டுவிட்டது. "அத்தகைய திருப்புகழை நானும் இயற்றுவேன்" என்று சூளுரை செய்தேன். ஆசிரியரும் உற்சாகம் அளித்தார்.

ரசிகன்: பிறகு என்ன நிகழ்ந்தது?

காசிம்: நாட்கள் நகர்ந்தன. திருப்புகழ் எழுத வேண்டும் என்ற ஆர்வம் தீவிரமடைந்து வந்தது ஆனால் உள்ளத்திலே தயக்கம். நம்மால் எழுத முடியுமா என்ற திகைப்பு அவசரத்தில் ஆசிரியரிடத்தில் வாககுறுதி கொடுத்து விட்டோமே என்ற வருத்தம். பகலும் இரவும் இதே குழம்பிய உள்ளம். ஓரிரவு. இருளும் நிலவும் இரண்டறக் கலந்திருந்த நேரம். கால்போன போக்கில் குழம்பிய உள்ளத்தோடு நடந்து கொண்டிருக்கிறேன். பல்வேறுபட்ட சிந்தனைகள் மறைந்து ஒரே எண்ணம் எழுகிறது. பெருமானார் நாயகத் திருமேனி அவர்களைப்பற்றி எண்ணினேன். அவர்கள் தாம் உதவ

வேண்டும் என்ற வேண்டுகோளை சமர்ப்பித்தேன். செயலற்ற நிலையிலே கண்மூடிவிட்டேன். தூங்கி எழுந்தேன். ஏதோ பேரொளி ஒன்றைகண்டதாக பிரமை. மனம் அமைதியாக இருந்தது. என்னையுமறியாமல் கவிதையடிகள் ஆற்றொழுக்குப் போல ஓடிவந்தன. 'பகரும்' என்ற சொல்லை முதலாவதாகக் கொண்டு திருப்புகழை முடித்தேன். பெருமானார் அவர்களின் துணை முன்நின்று உதவியது.

ரசிகன்: திருப்புகழ் தோன்றிய வரலாற்றை அறிந்தேன். உணர்ச்சிதரக் கூடியது,தான். இதைத்தவிர தாங்கள் இயற்றிய நூல் ஏதேனும் உண்டா?

காசிம்: உண்டு. 'இன்னிசை' என்ற பெயரில் ஒரு கவிதை நூல் இயற்றியிருக்கிறேன். பெருமானார் அவர்களின் பண்புச் சிறப்புகளை எண்ணி என்னையும் மறந்த நிலையில் உருவாகியது இந்த நூல். பூவாறு என்ற ஊரில் போக்கு மூசா மரைக்காயர் என்ற ரசிகப் பெருமகனின் ஆதரவில் இதை அரங்கேற்றினேன்.

ரசிகன்: தங்கள் வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் பற்றி ஓரளவு கேட்டிருக்கிறேன். அரம்பைவத்துப் பாடப்பட்ட பல பாடல்களை, தங்களது கவிதைகளால் வலுவிழக்கச் செய்திருக்கிறீர்கள் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அது எப்படி என்பதை விளக்க முடியுமா?

காசிம்: (சிரித்துக்கொண்டே) சில புலவர்கள் ஆத்திரத்தில் மக்களை சபித்துப் பாடிவிடுகிறார்கள். அது சில சமயங்களில் பலித்தும் விடுகிறது. புரையூர் என்ற ஊரில் வாழ்ந்த மக்களைப்பற்றி ஒரு புலவன் இழிவாகப் பாடிவிட்டான். அன்றிலிருந்து அம் மக்கள் பலவித துனபங்களை அனுபவித்து வந்தார்கள் நான் அந்த ஊருக்குப் போயிருந்த சமயம் நிலைமையை நேரில் கண்டறிந்தேன். அன்று வெள்ளிக்கிழமை பகல் தொழுகைக்குப் பிறகு மக்களின் துன்பம் துடைக்க வேண்டுமென்று இறைவனை இறைஞ்சினேன். புது நம்பிக்கையோடு மாற்றுப்பாடலைப் பாடினேன.

"பானை உறங்கா பகலடுப்புத் தீயுறங்கா
பூனை உறங்கா புரையூர் நன்னாட்டில்
வத்தைப்பழம் தின்னுன் வயிறெல்லாம் நண்ணியிடான்
பொத்தைப்பழம் போலுமிரான் புரையூரான் சீமானே"

இந்தப் பாடலைக் கேட்டதும் அம் மக்களது மனதிலே புதிய நம்பிக்கையும் வேகமும் எழுந்தது. அன்றிலிருந்து எல்லாம் நலமே நடந்தன.

ரசிகன்: இவ்விதமே சாத்தான் குளத்து மக்களைப் பற்றிய பாடலுக்கும் தாங்கள் மாற்றுப்பாடி அவர்களது துன்பம் துடைத்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

காசிம்: உண்மைதான்... மேலும் என் காலிலே இருந்த பெரும்புண், கனவில் தோன்றிய காத்தமுந்நபி அவர்களின் எச்சலபட்டு மறைந்ததும் தாங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்.

ரசிகன்: ஆம்... தங்களுக்கு பெருமானார் அவர்களிடமிருக்கும் ஆழ்ந்த பக்திக்கு இதெல்லாம் சான்றுதான் தங்களது திருப்புகழும் இன்னிசையும் இதற்கு நல்ல எடுத்துக்காட்டுகள். தங்களது நூல்களைப் பற்றி நாங்கள் பெருமையடைகிறோம். தங்கள் பெயர் என்றும் வாழ்க.

(5)

ரசிகன்: ஜவாதுப்புலவர் அவர்களே! உங்களை மகிழ்ச்சியோடு வரவேற்கிறேன் 'சரபம் கவிச்சக்கரவர்த்தி சவாதின்மேல் ஆணையென்றால் அரவம் கடித்திடவும் அஞ்சுமே' என்ற பாடலை அறிவேன். 'குஞ்சரக் கோட்டு தண்டிகை வாணன் வண்டமிழ் சவாது வாயெலாம் நஞ்சே' என்ற பாடலையும் கேட்டிருக்கிறேன். இந்தப் பாடல்களை எல்லாம் கேட்டறிந்தபிறகு தங்களைப்பற்றி கற்பனை செய்துபார்த்திருக்கிறேன். தாங்கள் கண்டிப்பும் கடுமையும் நிறைந்தவர் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். தங்கள் தோற்றத்தில் பயங்கரம் நிறைந்திருக்கும் என்றுகூட நினைத்திருந்தேன்.

ஜவாது: இப்போது எப்படி இருக்கிறேனாம்? (சிரிப்பு)

ரசிகன்: அழகாக இருக்கிறீர்கள்; கம்பீரமாக இருக்கிறீர்கள்; பெருமிதத் தோற்றமளிக்கிறீர்கள்.

ஜவாது: மிக்க நன்றி.

ரசிகன்: தங்களது பாடல்கள் பலவற்றைப் படித்திருக்கிறேன். குறிப்பாக தனிப்பாடல்கள் பெரும்பாலானவற்றை அவை பாடப்பட்ட சந்தர்ப்பத்தோடு தெரிந்திருக்கிறேன். அதனால் ஒரு முக்கிய செய்தியை இப்போது தங்களிடம் கூறவிரும்புகிறேன். அது தங்களுக்கு கசப்பாக இருக்கலாம், என்றாலும் சொல்லவே விரும்புகிறேன்.

ஜவாது: தாராளமாகச் சொல்லுங்கள்... கேட்க தயாராக இருக்கிறேன்.

ரசிகன்: தங்களுக்கு எடுத்ததற்கெல்லாம் கோபமும் வேகமும் தோன்றியிருக்கிறது. சிந்திக்காமல் அற்ப விஷயங்களுகெல்லாம் அரம்வைத்துப் பாடியிருக்கிறீர்கள். சிறு குழந்தைகளை சபித்திருக்கிறீர்கள்: சூழ்ச்சியற்ற கிராம மக்களைக் கண்டித்திருக்கிறீர்கள். தங்கள் கருத்துக்கு ஒத்துவராதவர்களைக் கண்டபடி திட்டியிருக்கிறீர்கள்.

ஜவாது: இதைநான் ஒத்துக்கொள்ளமாட்டேன் நிகழ்ச்சிகளை மேலோட்டமாகப் பார்த்துவிட்டு தாங்கள் முடிவு செய்துவிட்டீர்கள். எனது நிலைமையையும் தெளிவுபடுத்த விரும்புகிறேன் நான் கண்ணியமான வாழ்வை விரும்பினேன் எல்லோரும் எனக்கு மதிப்பளிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். மனிதனுக்கு மனிதன் வேறுபாடுஅற்ற வாழ்க்கை நிலவவேண்டும்என்று விழைந்தேன. மக்களெல்லோரும் இறைபக்தியும், இனிய பண்பாடுகளும் இணைந்தோராய் வாழவேண்டும் என்று கனவு கண்டேன் இந்த எனது கருத்துகளுக்கு மாறுபட்ட முறையில் ஏதேனும் நிகழ்ந்தால்

நான் என்னையே மறந்துவிடுவேன். என்னுள்ளே புதுவேகம் தோன்றி, எனது அதிருப்தி கவிதையாக வெளிப்பட்டுவிடும் அது சம்பந்தப்பட்டவர்களுக்குப் பாதகம் விளைவித்து விடுவதாகவும் கேள்விப்பட்டேன்.

ரசிகன்: இம்மாதிரி தாங்கள் பல பாடல்களைப் பாடியிருக்கிறீர்கள். ஏதேனும் ஒரு சம்பவத்தை விளக்க முடியுமா?

ஜவாது: விளக்கலாமே... எனது சுற்றுலாவின்போது முக்குளம் என்ற ஊர் வந்தடைந்தேன். அது முஸ்லிம்கள் அதிகமாக

வாழ்ந்த சிற்றூர். பள்ளிவாசலின் அருகில் பல்லக்கை நிறுத்தி கீழே இறங்கினேன். நடுப்பகல் நேரம். தொழுகை நேரம் வந்தும் கூட இறைவழிபாடு நிகழ்த்த யாரும் வரவில்லை. பிறபகல் வரை காத்திருந்தேன். அப்போதும் யாரும் வரவில்லை. முன்னிரவு பிறந்தது. அவ்வூர் முஸ்லிம்கள் அனைவரும் வயலுக்குப் போய்விட்டு இரவிலதான் திரும்புவார்கள் என்று கேள்விபபட்டேன் எனக்கு ஆத்திரம் அதிகரித்தது முஸ்லிம்கள் அடிப்படைக் கடமையாகிய தொழுகையை நிறைவேற்றாதிருக்கிறார்களே என்று கோபம் எழுந்தது. என்னை மறந்த நிலையில் பாடல் ஒன்று வெளிப்பட்டது. அந்தப்பாடல் உங்களுககுத் தெரியும் என்று நினைக்கிறேன.

ரசிகன்: நினைவிருக்கிறது. இதோ சொல்லுகிறேன்.

“வாங்கு சொல மோதினில்லை; வந்து தொழ லெப்பையில்லை
ஓங்கு ஜமாத்தெல்லாம் உழப்போனர்—பாங்குடனே
எக்குளத்துக் கொக்கும் இகலி வந்து முட்டையிடும்
முக்குளத்துப் பள்ளி முகப்பில்...”

இந்தப்பாடல்தானே.

ஜவாது: நன்ருக நினைவு வைத்திருக்கிறீர்கள்... இப்படித் தான் ஒவ்வொரு சூழ் நிலையிலும் பாடல் எழுநதது. சூழ்நிலையை நன்கு விளங்கிக் கொண்டால், என்மீது வீணபழி சுமதத மாட்டீர்கள்.

ரசிகன்: நல்லது புலவர் அவர்களே... தாங்கள் வாழ்ந்த காலத்தில் ராமனுதபுரத்தில் ரகுநாத சேதுபதியும், புதுக்கோட்டையில் விஜய ரகுநாதத் தொண்டைமானும், கர்னுடகத்தில் ஆற்காடு நவாப் முகம்மது அலி வாலாஜா அவர்களும் அரசோச்சியதாக வரலாறு கூறுகிறது இந்த மன்னர்களுடன் தங்களுக்கு அறிமுகம் உண்டா?

ஜவாது: உண்டு. ரகுநாத சேதுபதிக்கும் எனக்கும் நெருங்கிய நட்பு உண்டு. என்னை குடும்ப நண்பராகக் கருதி வந்தார். தமது அத்தாணி மன்றக் கவிஞராக ஆக்கிக் கொண்டார். அவரைப் பற்றி பல பாடல்களைப் பாடியிருககிறேன். எனது தேவைகளை அவர் உடனுக்குடன் பூர்த்தி செய்து வைப்பார். புதுக்கோட்டை மன்னரும் என்மீது அளவுகடந்த பிரியம் வைத்திருந்தார். எனது பாடல் என்ருல் அவருக்கு உயிர். நான் இயற்றிய ‘முகிய்யித்தீன் ஆண்டகை பிள்ளைத்தமிழ்’ என்ற நூலுக்கு நவாப் முகம்மது அலி வாலாஜா அவர்களையே கொடை நாயகராகக் கொண்டு அவரது முன்னலேயே அரங்கேற்றம் செய்தேன் இதற்காக சென்னை சென்று நவாபின் ‘அமீர் மஹாலில்’ அரங்கேற்றம நிகழ்த்தினேன். மன்னர் அவர்களுக்குத் தமிழ் தெரியாது. உடனுக்குடன் உருதுவில் மொழி பெயர்க்கப்பட்டது. நூலினைக்கேட்டு மன்னர் பெருமகிழ்ச்சி அடைந்தார்.

ரசிகன்: இந்த நூலைத்தவிர வேறு என்னென்ன நூல்கள் இயற்றியிருக்கிறீர்கள்?

ஜவாது: நாகூரில் அடக்கமாகியிருக்கும் ஷாகுல் ஹமீது ஒலியுல்லா அவர்களைப் பற்றி "நாகைக் கலம்பகம்" இயற்றியிருக்கிறேன். நாயகத் திருமேனி அவர்களைப்பற்றிய நினைவுகளை மனதில் ஏந்திய "மதீனத் தந்தாதி" என்ற நூலும் எனது படைப்பே.

ரசிகன்: தங்களது தண்ணிய கவிதை நடை முன்மாதிரியானது. குறிப்பாக பிள்ளைத்தமிழில் தாங்கள் பயன்படுத்தியிருக்கும் அணிகளும், அழகிய நடையும் என்றும் ரசிக்கத்தக்கவை.

"நிலவொழுகிய பிறை பூமேலே
நிலவிய விரல் ஒலிமார்மேலே

நிகழ்குதி கலைஞர் தன் நா மேலே
நிலைநடு மலரடியார் மேலே"

என்றெல்லாம் வரும் அடிகள் பல நூறு தடவைகள் படித்து மகிழத்தக்கவை.

ஜவாது: இவை எல்லாவற்றையும் விட ஒழிவின்றி சதா அலைகள் வீசிக்கொண்டிருக்கும் நாகூர் கடற்கரையில் அமர்ந்து

நாகூர் ஒலியுல்லா அவர்கள்மீது நான் பாடல்களை இயற்றிய அந்த நாட்களை மறக்கவே இயலாது. ஏதோ புத்துணர்ச்சியினால் உந்தப் பட்டவனைப்போல பாடிக் கொண்டிருந்தேன்.

ரசிகன்: ஏதேனும் ஒருபாடலைச் சொல்லுங்கள்...

ஜவாது:

"கலிதீரவேண்டும் கருத்தில் இபுலீஸ்
வலிதீர வேண்டுமென வந்தால்—ஒலியான
நாகைத்துரையார் எந்நாளும் உயிர்துணையார்
நாகைத் துறையார் நமக்கு"

ரசிகன்: மனதைத் தொடும்பாடல்... புலவர் அவர்களே...! தங்களது தனிப்பாடல்களும், வாலாற்றுப் பாடல்களும் பக்திப்பாக் களும் இலக்கிய வரலாற்றில் சிறந்ததொரு இடத்தைப் பெற்றுக் கொண்டிருக்கின்றன. காளமேகத்தையும் மிஞ்சிவிடும் வகையிலே தாங்கள் தனிப்பாடல்களை ஆக்கியிருக்கிறீர்கள் "வண்டமிழின் எண்ணோ? எழுத்தோ? இசையோ? இயற்புலவர் கண்ணோ சவா துக்கவி"என்றபாடல் சாதாரணப்பாடல் அல்ல. தங்கள் ஆற்றலை நன்கு வெளிப்படுத்தும் பாடல்.

## (6)

ரசிகன்: வாருங்கள் வண்ணக் களஞ்சியப் புலவர் அவர்களே! தாங்கள் இயற்றியிருக்கும் எண்ணற்ற பதங்களும் கீர்த்தனைகளும் தங்கள் இயற்பெயரையே மாற்றிவிடும் அளவுக்குப் புகழ் பெற்று நிற்கின்றன. அப்படித்தானே!

வண்ணம்: எனது படைப்பின் வேகத்தை உயர்வை நானே புகழ்ந்து கொள்ள விரும்பவில்லை எனது வண்ணங்களில் மிகப்பல நாகூர் தர்காவிலே அரங்கேற்றமாயின. அதனை செவியடுத்த நாகூர் ரசிகப் பெருமக்கள் அன்பு கூர்ந்து 'வண்ணக் களஞ்சியம்' என்ற பட்டத்தை எனக்கு அளித்தார்கள். அதற்குப் பிறகு எனது இயற்பெயராகிய ஹமீத் இபுறுகிம் என்பதை பலரும் மறந்து விட்டனர் 'வண்ணக் களஞ்சியம்' என்ற பெயரே நிலைபெற்றது.

ரசிகன்: தாங்கள் பல இசை வடிவங்களிலும் பாடல்களைப் பாடியிருக்கிறீர்கள். இது தங்களுக்கு இசைத்துறையில் இருந்த ஆழ்ந்த ஞானத்தைக் காட்டுகிறது. இந்த இடத்தில் ஒரு முக்கிய செய்தியைப் பற்றி தங்கள் கருத்தைத் தெரிந்து கொள்ள விரும்பு கிறேன். இஸ்லாத்தில் சங்கீதத்துக்கு இடமில்லை என்று சிலர் சொல்லுகிறார்களே—அதுபற்றி தங்கள் கருத்து என்ன?

வண்ணம்: உள்ளத்தில் தூங்கிக்கிடக்கும் கீழ்த்தர உணர்ச்சி களைத் தட்டி எழுப்பும் வண்ணம் அமைந்திருக்கும் சங்கீதத்தை இஸ்லாம் விரும்பவில்லை என்பது உண்மையே. இந்த ஒரு நிலைக்கு ஆக்கம் அளிக்கும் வண்ணம் அமையுமாயின். அது வாய்ப்பாட் டாகவோ, வாத்திய சங்கீதமாகவோ எப்படியிருந்தாலும் அது விரும்பத்தகாதது என்பதுதான் என் கருத்தாகும். அதே சமயம் மனதிலே பக்தி யுணர்வை ஊட்டி, தீய எண்ணங்களைச் சுட்டெ ரித்து, இறை எண்ணத்தை இதயத்தில் வளர்க்கும் இசையை இஸ் லாம் ஆதரிக்கிறது. பெருமானார் அவர்கள் மீது 'மௌலூது'

இசையோடு ஓதப்படுகிறது. அவர்கள் பேரிலான 'கஸீதத்துல் புர்தா' மனங்கவரும் வண்ணத் தோடு பாராயணம் செய்யப்படுகிறது இன்னும் பலவிதமான கீர்த்தனைகளும் பைத்துகளும் முஸ்லிம் புலவர்களுக்கு இசையின் மேலிருந்து பேரார்வத்தையும், புலமையையும் காட்டுகின்றன.

ரசிகன்: இசையுடனும் இயலுடனும் தொடர்புடைய நாடக நூல் ஒன்று தாங்கள் எழுதியிருப்பதாகக் கேள்விப்பட்டேனே. அது என்ன நூல்?

வண்ணம்: பாமரமக்களும் இசையின்பத்தை நுகரவேண்டும் என்ற எண்ணத்தில் 'அலிபாதுஷா நாடகம்' என்ற நூலை ஆக்கினேன். இந்த நாடகத்துக்கு நல்ல வரவேற்பிருந்தது.

ரசிகன்: இதைத்தவிர தாங்கள் இயற்றியிருக்கும் மற்றைய நூல்கள் யாவை?

வண்ணம்: 'குத்புநாயகம்' என்ற பெருநூல் ஒன்று. எனது மூதாதையாகிய ஏர்வாடியில் அடக்கமாகியிருக்கும் சையது இபுருகீம் அவர்களைப் பற்றியும் அவர்களது முயற்சியால் தென்னகத்தில் இஸ்லாம் பரவிய விதத்தைப் பற்றியும் 'தீன் விளக்கம்' என்ற நூலை இயற்றியிருக்கிறேன். எல்லாவற்றுக்கும் மேலாக சுலைமான் நபி அவர்களது வரலாற்றை 'இராஜநாயகம்' என்ற நூலில் விளக்கியிருக்கிறேன்

ரசிகன்: தங்களது படைப்புகளிலேயே தலைசிறந்தது 'இராஜநாயகம்' என்று கேள்விப்பட்டிருக்கிறேன் அந்த காப்பியத்திலே வரும் பல பாடல்கள் புகழ்பெற்றவை.

வண்ணம்: உங்களைக் கவர்ந்த அடிகள் ஏதேனும் உண்டா?

ரசிகன்; தாராளமாக. உதாரணமாக இந்த அடிகளையே கூறலாமே,

"மல்லிகை மலரின் மணம் எவர் கொடுத்தார்?
மணமற முருக்கையார் கெடுத்தார்?
கல்லெலாம் மணியாய் ஒளிர்வதார் தடுத்தார்?
காக்கைக் கண்மணி ஒன்றார் எடுத்தார்!"

மல்லிகை மலருக்கு போதையூட்டும் புதுமணம் தந்ததுயார்? முருங்கை மலரும் வெண்மையாகத்தானே இருக்கிறது? அதற்கேன் நறுமணமில்லை? எத்தனையோ கற்களைக்காணுகிறோம். எல்லாம் ஒளிரும் மணியாக, வைரமாக சுடர்விடுவதில்லையே... இதற்கெல்லாம் என்ன காரணம் என்று கேள்வியை எழுப்பி படைப்பின் தத்துவத்தை அழகுற விளக்குகிறீர்கள் இப்படி மிகப்பல பாடல்கள் எல்லாப் பாடல்களுமே மணம தரும் மல்லிகை; ஒளிரும கற்கள்.

வண்ணம்: பாராட்டுக்கு நன்றி. என்னால இயன்ற அளவு சமயத்தொண்டு செயதிருக்கிறேன், முஸ்லிம்களுக்கு இசைத்துறை அறிவு நிரமப உண்டு என்பதைக் காட்டியிருக்கிறேன், வரலாற்று அறிவும் குறைந்துவிடவில்லை, என்பதை மெய்ப்படுத்தியிருக்கிறேன். எல்லாம் இறைவன் அருள்.

ரசிகன்: தங்களின் வண்ணங்கள் என்றும் புகழ்மிகு பொக்கிஷமாக விளங்கிக் கொண்டிருக்கும். அதில ஐயமில்லை.

(அடுத்த இதழில் முடியும்)

# திருமணம்

ராஜபாளையம் ஜனாப். கே. எம். கே மன்னான் முஹம்மது அவர்களின் குமாரத்திகள் பேபி என்கிற ராபியத்து பீவிக்கும், கௌஸர் பீவிக்கும். கோம்பை ஜனாப். எம். காதர் மொஹிதீன் அவர்களின் குமாரர் அப்துல் கலாம் ஆஜாத்துக்கும், சிவகாசி ஜனாப். எச். ஷர்புதீன் அவர்களின் சகோதரர் எச். முஹம்மது அலீ ஜின்னா அவர்களுக்கும் முறையே திருமணம் 22 - 1 - 67 அன்று சிறப்பாக நடைபெற்றது.

★ ★

நாகை மர்ஹூம் ஹஸன் மீரா லெப்பை மரைக்காயர் குமாரர் மரைக்கா வாப்பா என்கிற காதர் பக்கீர் மரைக்காயர் அவர்களுக்கும் காரை ஜனாப் முஹம்மது சுல்தான் மரைக்காயர் அவர்களின் குமாரி ஷேக் தாவூது நாச்சியாருக்கும் அண்மையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

★ ★

கம்பம் ஜனாப் மூ. உ. காதர் மீருலெவ்வை ராவுத்தர் குமாரர் அப்துல் ஜலீலுக்கும், பெரியகுளம் தென்கரை ஜனாப் பி. ஏ. எம். ஹஸன் முஹம்மது ராவுத்தர் அவர்களின் குமாரி மெஹருன்னிஸா பேகத்திற்கும் 23—1—67-ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

சங்கு கே. ஈ. முஹம்மது அபூபக்கர் ஸாஹிப் (மர்ஹூம்) அவர்களின் செல்வன் முஹம்மது இத்ரீஸ் அவர்களுக்கும் ஜனாப். வி. எஸ். முஹம்மது யாகூப் அவர்களின் செல்வி கதீஜா ஹானம் அவர்களுக்கும் (மர்ஹூம்) சங்கு கே. ஈ. முஹம்மது அபூபக்கர் ஸாஹிப் அவர்களின் செல்வி நைனம்மா கனி பீவிக்கும். ஜனாப். சங்கு கே. எம் அப்துல் வஹாப் அவர்களின் செல்வன் முஹம்மது கனி பாவா அவர்களுக்கும் 28—1—67-ல் வெகு சிறப்பாக திருமணம் நடைபெற்றது.

★ ★

ஜனாப் சங்கு ஏ. ஏ. கோஸ்கனி அவர்களின் புதல்வர் அப்துல் ஹமீதுக்கும் ஜனாப். சங்கு கே. எம். அப்துல் வஹாப் அவர்களின் புதல்வி முஹம்மது பாத்திமா கனி பீவிக்கும் 28-1-67-ல் திருமணம் சிறந்த முறையில் நடைபெற்றது.

★ ★

சென்னை நகரசபை எலக்ட்ரிகல் உதவி இன்ஜினீயர் திரு. ஜெரிமியா அவர்களின் மூத்த புதல்வர் திரு. அஷ்பி பிரபாகர் ஜான்ஸன் அவர்களுக்கும் ஆந்திரா கூடூர் திரு டி. எட்வின் அவர்களின் மூத்த புதல்வி திரு லட்சுமி காந்தாவுக்கும் 25-1-67 அன்று சென்னை வெஸ்லி சர்ச்சில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!




## 10. வெண்மாளிகையின் திறவுகோல்கள்!

இரண்டு மாதங்கள் ஓய்வெடுத்துப் புதிய தெம்புகொண்ட படைகளுடன் கதிஸிய்யாவிலிருந்து புறப்பட்டுச்சென்ற ஸஅத் அடுத்திருந்த ஹீராவின் கிராமங்களையும் நகரங்களையும் பணியச்செய்தார். அவ்வாறு எவ்வித எதிர்ப்புமின்றி ஸவாதை மீண்டும் கைப்பற்றினர். அப்போது முதன்னுவுடன் முன்னர் செய்திருந்த ஒப்பந்தங்களைக் கிழித்தெறிந்துவிட்ட ஹீராவாசிகள் மீது கூடுதலான வரிகளை விதித்தார் இஸ்லாமியத் தளபதியார். அப்பால் அவர் பாபிலின்பால் தம்முடைய கவனத்தைக் செலுத்தலானர்.

ஃபுராத் நதியின் கீழ்கரையோரம் இருந்த அவ்விடத்தில், அண்மையில் கதிஸிய்யா களத்திலே முஸ்லிம்களிடம் படு தோல்வியுற்றுப் பல பக்கங்களிலும் சிதறியோடிய பாரசீகப் படைத்தொகுதிகள் ஃபிருஸன், ஹுர் மூஸான், மிஹ்ரான் ஆகியோர் தலைமையில் கூடியிருந்தன. அங்கும் அவர்கள் தளபதியார் ஸஅதின் தலைமையில் வந்த முஸ்லிம் படைகளால் முறியடிக்கப்பட்டு, சின்னு பின்னப்படுத்தப்பட்டனர்.

அதைப்பற்றி கலீபா உமருக்கு எழுதிய கடிதத்தில் ஸஅத் குறிப்பிட்டார்.

"பிருஸன் நிஹாவந்துக்கு ஓடிவிட்டார். அங்குதான் பாரசீக நாட்டு அரச பொக்கிஷங்கள் எல்லாம் சேமிக்கப்பட்டிருக்கின்றன. ஹுர் மூஸான் பாரசீகக் குன்றுகளுக்கு அப்பால் உள்ள தமது மாகாணத் தலைநகரான அஹ்வாஸுக்குத் தப்பிச் சென்று விட்டார். ஆற்றுக்கப்பால் உள்ள பகுதியில் தம்முடைய படையுடன் முகாமடித்திருப்பதாகத் தெரிகிறது. மேலும், ஒருசில பாரசீகப்படைப் பிரிவுகள் ஆற்றுக்கு இப்பால் உள்ள பஹ்ரஷஹ்ர் கோட்டையில் தஞ்சம் புகுந்துள்ளன. இந்நிலையில், மதாயினை முஸ்லிம்கள்

கைப்பற்றுதவரை ஸஅதின் மீது பாரசிகரின் செல்வாக்கு இருந்து வருவதை நாம் தவிர்க்க முடியாது. அப்பகுதியின் மீது முஸ்லிம்களும் நிரந்தரமாக ஆதிக்கம் கொண்டிருக்க முடியாது. இது விஷயமாகக் கலீபா அவர்களின் கட்டளையை எதிர் நோக்கியவனாக இருக்கிறேன்.''

இரண்டொரு மாதங்களில் கலீபாவிடமிருந்து வந்த உத்தரவு ஸஅதின் எண்ணத்திற்கு ஆதரவாகவே இருந்தது.

ஆகவே, அவர் உற்சாகமுடன் தம்முடைய படைகளை அழைத்துக்கொண்டு மதாயின்நோக்கிப் புறப்பட்டார். போகும் வழியில் பலவிடங்களில் பாரசிகர்களுடன் சிறுசிறு சண்டைகள் ஏற்பட்டன. அவற்றையெல்லாம் எளிதில் சமாளித்தவராக ஃபுராத் நதிக்கப்பால் இயற்கை வளமிகுந்த சமவெளிகளினிடையே விரைவாகப் படை நடத்திச் சென்றார் ஸஅத்.

மதாயினுக்கு ஒரு சில கல் தூரத்திலே முஸ்லிம்படைகளைத் தடுத்து நிறுத்தும் எண்ணத்தில் மாபெரும் பாரசீகப்படையொன்று மன்னன் யஜ்த்கிர்தின் தாயாருடைய தலைமையின் கீழ் வேகமாக வந்தது. ஆனால் அவளுடைய சேனை அடியோடு முறியடிக்கப்பட்டது. வெற்றிகண்ட வீர முஸ்லிம்கள் தஜ்லாவை நோக்கித் துரிதமாக முன்னேறினர்

அதன் மேல்கரையில் பெருமையுடன் நின்றது செலுஸிபா. அது மாவீரன் அலக்ஸாந்தரின் வீரத் தளபதிகளில் சிறந்த ஸெலுக்கஸ் என்பவரின் சந்ததியினரால் கட்டப்பட்டிருந்தது. பஹ்ரஷஹ்ர் கோட்டையைக் கொண்டிருந்த அந்நகரை எதிர் நோக்கி மறுகரையில் எழிலுடன் காட்சியளித்தது தெஸிபோன். பாரசீக அரசர்களால் கட்டப்பட்டு, அடுத்தடுத்து வந்த ஆட்சிகளின்போது அது மென்மேலும் வனப்பு மிக்கதாகச் செய்யப்பட்டிருந்தது. பாலம் ஒன்றினால் இணைக்கப்பட்டிருந்த அவ்விரு நகரங்களும் ஒருசேர மதாயின்-இருநகரங்கள் -என்ற பெயரில் பாரசீகப் பேரரசின் தலைநகராக விளங்கின.

தஜ்லாநதிக்கரை வந்தடைந்த முஸ்லிம்களுக்கு 'சவால்' விடுவதுபோல வலிமையுடன் நின்றது பஹ்ரஷஹ்ர் கோட்டை. எவராலும் சுலபத்தில் ஏறமுடியாதவாறு அதன் சுவர்கள் நெடிதுயர்ந்து நின்றன. மேலும், அவை எதிரிகள் இலகுவாகத் துளைத்துவிட முடியாதவகையில் பலமாகவும் கனமாகவும் அமைந்திருந்தன. அக்கோட்டையின் பாதுகாப்பிலே பல பாரசிகப் படைகள் பதுங்கியிருக்க, அதை முற்றுகையிட்டனர் முஸ்லிம்கள்.

ஆரம்பத்தில், பாரசிகர்கள் கோட்டை, கொத்தளங்கள் மீது நின்றவாறு, தங்களை வளைத்து நின்ற முஸ்லிம்கள் மீது நல்ல குறியுடன் பெருங்கற்களை வீசினர்; வேல்களை எறிந்தனர்; அம்புகள் தொடுத்தனர். அவற்றிற்கெல்லாம் திறமையுடன் ஈடுகொடுத்து நின்ற ஸஅதும் அவருடைய படை வீரர்களும் அவ்வப்போது கோட்டை மதில்கள்மீது சிறுசிறு தாக்குதல்கள் நடத்தி வந்தனர். அதே நேரம், கோட்டைக்குத் தரைவழியாக வெளியுலகுடனிருந்த தொடர்புகளைத் துண்டித்ததுடன் அங்கு உணவுப் பொருள்கள் செல்லும் மார்க்கங்களையெல்லாம் தடுத்து நின்றனர்.

மாதங்கள் பலவாகின. பட்டினிக் கொடுமையானது பாரசீகர்களைப் பணியவைக்கும்வரையில்

முற்றுகையை நீடிக்கும் உறுதியுடன் நின்றார் ஸஅத்.

அதற்கிடையில் அவர் கலீபாவிடமிருந்து வந்த உத்தரவுக்கிணங்க ஒரு சில புதிய போர் முறைகளைக் கையாண்டு கோட்டையைத்தாக்கிக் கைப்பற்றுவதற்கான திட்டமிட்டார்.

ஓரிரவு பின்னிலவின் மெல்லிய ஒளியிலே, பஹ்ரஷஹ்ர் கோட்டையின் பிரதான வாயிலுக்கு முன், பாறைக் கற்களையும் தீப்பந்தங்களையும் விசையுடன் முன்னோக்கி உயரே எறியும் வில்லியந்திரங்கள் வரிசையாக நிறுத்தப்பட்டன. பலம் பொருந்திய பிரம்மாண்டமான வாயிற் கதவுகளை இடித்துத் தள்ளுவதற்காக நீண்டு, கனமான மர உருளை வீரர்களால் முன்னும் பின்னும் நகர்த்துவதற்கு வசதியாக தாங்கு மேடைமீது கொண்டு வரப்பட்டது. மேலும், நான்கு அடுக்குகள் கொண்ட உயரமான மரக்கோபுரங்களும் உருட்டிக் கொண்டு வரப்பட்டன. ஒவ்வொரு அடுக்கிலும் பத்துப் பன்னிரண்டு வீரர்கள் கையில் கோடாரி ஏந்தி நின்றனர். அக்கோடாரிகளைக் கொண்டு கோட்டையின் வாயிற்கதவுகளை வெட்டிப்பிளக்கத் தயாராக இருந்தனர். நிலவொளி மங்கிவரும் நேரத்தில், குதிரைமீதேறிய வீரர்கள் அவ்வில்லியந்திரங்களுக்குப் பின் வந்து அணிவகுத்து நின்றனர். அவர்களையடுத்து, இரு மருங்கிலும் சிறகு விரித்தாற்போல காலாட் படையினர் வந்து குவிந்து நின்றனர்.

கோட்டையின்மற்றபுறங்களில் பெயரளவுக்குச் சிறு படைப் பிரிவுகளை நிறுத்திவிட்டு, சேனையின் பெரும் பகுதியைத் தலைவாயில் முன் நிற்கச் செய்தார், இஸ்லாமியத் தளபதியார் ஸஅத்.

தஜ்லா நதிமீது பட்டுத் தெறித்த வைகறையின் செவ்வொளியில் பஹ்ரஷஹ்ர் கோட்டை குளித்து நின்றவேளை, முஸ்லிம் சேனையின் வில்லியந்திரங்கள் கற்களையும் தீப்பந்தங்களையும் உயரத் தூக்கியெறிந்து கோட்டைக்கு அப்பால் வீசின. அதன் வாயிலோரம் கொண்டு வந்து நிறுத்தப்பட்ட உயர் கோபுரங்களிலிருந்த வீரர்கள் தங்கள் கைகளிலிருந்த கோடரிகளைக் கொண்டு வாயிற் கதவுகளைத் தாக்கத் துவங்கினர். கீழே, பலநூறு வீரர்கள் ஒன்றுசேர்ந்து வாயிற்கதவின் மீது மர உருளையால் 'டமார், டமார்' என இடிக்க முனைந்தனர்.

கோட்டையின் உட்புறமாக வாயிற்கதவுகள் எதிரிகளால் கற்குவியல்களையும் மற்றும் கனத்த பொருள்களையும்கொண்டு அணை கட்டிப் பலப்படுத்தப்பட்டிருந்த நிலையில், அவை முஸ்லிம் வீரர்கள் இயக்கி நின்ற உருளையின் தாக்குதலுக்கு அவ்வளவு எளிதில் வழிவிடுவதாக இல்லை. இருந்தும், கொஞ்சமும் ஊக்கம் குன்றாமல், தங்கள் முயற்சிகளைவிடாது தொடர்ந்தனர், முஸ்லிம் வீரர்கள். திடீரென அக்கதவுகள் சற்று ஆட்டம் கொடுத்தன. ஆதைக்கண்டு உற்சாகம் கொண்ட முஸ்லிம் வீரர்கள் இன்னும் விரைவுடன் அவற்றை இடித்தனர். படிப்படியாக அவர்கள் முயற்சி வெற்றிகாண, கதவுகள் பளாரெனத் திறந்தன.

அதை எதிர் நோக்கியிருந்த முஸ்லிம் குதிரை வீரர்களும் காலாட்படையினரும் "அல்லாஹு அக்பர்" என்று முழங்கிய

வர்களாக கோட்டையினுள் 'திமு திமு' வென்று புகத் துவங்கினர் அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாற்றமாக கோட்டை வாயிலோரம் அவ்வளவு எதிர்ப்பில்லை பெயரளவுக்கு ஒரு சிறிய படையே அவ்விடம் நிறுத்தப்பட்டிருக்க வேண்டும்! 'பின்... அங்கே வந்து பதுங்கிய படைகளின் பெரும் பகுதி எங்கே?'— தளபதியார் ஸஅதுக்கு வியப்பாக இருந்தது அந் நிலையில் அவர் நகருக்குள் நடத்திச்சென்ற முஸ்லிம் வீரர்களை எதிர்த்து நிற்கவும் அதிக மானவர்கள் இல்லை. அப்படியெதிர்த்து நின்றவர்களுக்கும் உடம்பில் போதிய தெம்பில்லை பட்டினியாலும் பசியாலும் வாடிய ஏழை, எளியவர்களைத் தவிர மற்றவர்களின் புழக்கம் அதிகமாக இல்லை நகரே பெரிதும் வெறிச்சோடி இருந்தது. இஸ்லாமியப் படையினர்க்கு ஏற்பட்ட குறைந்த எதிர்ப்பின் காரணத்தை இப்போது எவரும் சொல்லாமலே புரிந்து கொண்டார் ஸஅத்.

பஹ்ரஷஹ்ர் கோட்டையிலிருந்த செல்வந்தர்களும் பாரசீகப் படைகளும் இரவோடிரவாகக் கொஞ்சம் கொஞ்சமாக ஆற்றின் வழியாக வெளியேறிச் சென்று எதிர்கரையிலிருந்த நகரப்பகுதியை அடைந்து விட்டனர்.

அவ்வாறு செலுஸியா முஸ்லிம்களின் வசமாக, தஜ்லா ஃபுராத் நதிகளிடையே இருந்த பிரதேசமெல்லாம் இப்போது முஸ்லிம்களுடைய ஆட்சியின் கீழ்வந்தது. என்றாலும், தஜ்லாவின் மறுபுறமிருந்த தெஸிபோனையும் முஸ்லிம்கள் கைப்பற்றாத வரையில் ஸஅதின் உள்ளம் நிலை கொள்ளாது போலிருந்தது. தஜ்லாவின் மேல்கரையில் பாரசீகர்களின் தலை நகரை எதிர் நோக்கிப் பாளையமடித்திருந்த நேரத்திலே அவர் மனம் நெடுந்தூரத்திற்கப் பாலிருந்த இஸ்லாமியத் தலைநகரை நோக்கித் திரும்பியது. கடந்த காலத்தை ஊடுருவிச் சென்று, அங்கு முன்னர் நிகழ்ந்த சம்பவமொன்றை அது மீண்டும் மீண்டும் நினைவுகூர்ந்த வண்ணமிருந்தது....

மாநபியவர்கள் மதீனா வந்து சேர்ந்த ஐந்தாம் ஆண்டு மக்கத்துக் குரைஷியரும் அவர்களுடைய போர்க் கூட்டாளிகளும் மதீனாவின் மீது பெரும் படை நடத்திவந்தனர். அதையறிந்த பெருமானார் அவர்கள், நகரின் பாதுகாப்பு ஏற்பாடுகளை மேலும் பலப்படுத்த விரும்பினார்கள். அப்போது ஸல்மான் ஃபாரிஸி ஒரு யோசனை சொன்னார். கோட்டை சுவரில்லாது எதிரிகள் தாக்குவதற்கு எளிதாகத் திறந்திருந்த புறத்தில் ஆழமாக ஒரு அகழி வெட்ட வேண்டும் என்றார். உடனே அவ்வகழி தோண்டுவதற்கான ஆ...த்தங்கள் நடக்க முற்பட்டன. மற்றவர்களைப் போலவே மாநபியவர்களும் தோளிலே மண் சுமந்து சென்று அப்பால் கொட்டி வந்தார்கள்; கல்லுடைத்துக் குழி தோண்டினார்கள். அவர்கள் ஓடியாடி இயங்கிக் கொண்டிருந்த இடத்திற்கு அண்மையில் ஸல்மானும் வேறு சிலரும் கையிலே கோடாரி கொண்டு மண் பறித்துக் கொண்டிருந்தனர்.

ஓரிடத்தில், கரும்பாறையொன்று அவர்களுக்குப் பெருத்த சிரமத்தைத் தந்து கொண்டிருந்தது. அதைப் பெயர்த்தெடுக்க அவர்கள் எவ்வளவோ முயன்றார்கள். அவர்கள் உடம்புகளில் வியர்வை அருவியாக வழிந்தோடியதே தவிர, பாறை அசைந்து கொடுப்பதாக இல்லை

கொஞ்ச நேரம் அவர்கள் மேல் மூச்சுக் கீழ்மூச்சு வாங்க நின்றார் கள்.

அதைக்கண்ணுற்ற அண்ணல் நபியவர்கள் அவர்களிடம் வந் தார்கள். அங்கு வெட்டப்பட்டி ருந்த குழியில் குதித்தார்கள். ஸல்மான் கரத்திலிருந்த கோடா ரியைச்சட்டாரென வாங்கினார்கள். தங்களின் தோழர்களை அயரச் செய்துவிட்டபாறையைநோக்கி வெகுவேகமுடன்கோடாரியைத் தணித்தார்கள். அது பாறைமீது 'ணங்' என்ற ஒலியுடன் விசை யாகப்பட்டபோது மின்னலைப் போல அனற்பொறிகள் கிளம் பின.

''அல்லாஹு அக்பர்!'' என்று கூறினார்கள் ஆண்டவன் திருத் தூதர் அவர்கள். அதேபோல அருகில் நின்று கொண்டிருந்த தோழர்களும் முழங்கினர்.

மீண்டும் கோடாரிகொண்டு பாறையைத் தாக்கினார்கள் நாயகம் அவர்கள். அதுமோதிய இடத்தில் மீண்டும் மின்னல் பளிச்சிட்டது. ''அல்லாஹு அக்பர்!'' என்று அண்ணலாரும் அவர்களுடைய தோழர்களும் குரல் எழுப்பினர்.

இன்னும் பலமுடன் மூன்று வது முறையாகப் பாறைமீது கோடாரிகொண்டு இடித்தார் கள், நன்னபி அவர்கள் இப் போதும் நெருப்புப் பொறி பறந் தது. இப்போது பாறை முற்றி லும் பெயர்ந்து விட்டது. தக்பீர் முழக்கங்கள் உற்சாகமுடன் முழங்கின.

தங்களை ஆசுவாசப் படுத்திய வர்களாகக் கோடாரியை மீண் டும் ஸல்மானிடம் தந்தார்கள், பெருமானார் அவர்கள்.

அப்போது அவர்களிடம் ஸல் மான் மிகுந்த மரியாதையுடன் கேட்டார்.

''அன்னை தந்தையரை விட அருமையான எங்கள் நாயகமே, தங்கள் கரம் பிடித்த கோடாரி பாறைமீது பட்டபோதெல்லாம் மின்னல் போலப் பொறிகள் தெறித்தனவே! அதன் உண் மையை எங்களுக்குச் சொல்ல லாமா?''

முகத்தில் மென்முறுவல் படர அண்ணல் நபியவர்கள் சொன் னார்கள்: ''ஸல்மான்! அப்பொறி கள் உம் கண்களுக்குப் புலப்பட் டனவா? உண்மை இதுதான்: முதல்பொறி கிளம்பியபோது வானவர் ஜிப்ரயீல் தோன்றி யமன் தேய அரண்மனையின் திறவுகோல்களை அல்லாஹ் எமக்களித்திருப்பதாகச் சொன் னார். இரண்டாவது முறை கைஸ ரின் அரண்மனைத் திறவுகோல் களைத் தந்திருப்பதாக அறிவித் தார். மூன்றாவது தடவையில் கிஸ்ராவுடைய அரண்மனையின் திறவுகோல்களை இறைவன்'' எனக்களித்திருப்பதாகத் தெரி வித்துச் சென்றார்.

கிஸ்ராவின் அரண்மனைச்சாவி களை அவர்களிடம் இறைவன் தந்திருக்கிறான் என்றால்........? பாரசீகப் பேரரசின் வெண் அரண்மனையை முஸ்லிம்கள் கைப்பற்றுவார்கள் என்பதைத் தானே இறைவன் தன்னுடைய திருத்தூதர் அவர்களுக்கு உணர்த்தினான்? அவ்வாறே அவர்களும் அதைத் தங்கள் தோழர்களிடம் அறிவித்தார் கள்...

'அந்த தீர்க்க தரிசனம் மெய் யாகும் காலம் வந்துவிட்டது!'- தமதுள்ளத்திலே மீண்டும் மீண் டும் எழுந்த அவ்வெண்ணத் தைத் தம்முடைய வீரர்களுக் கெல்லாம் தெரியப் படுத்தினார் ஸஅத். அதைக் கேள்வியுற அவருடனிருந்த படைத்தலைவர் களும் மற்றபடையினரும் கிஸ்ரா

வின் அரண்மனையைக் கூடிய விரைவிலே கைப்பற்றுவதில் அளவு கடந்த உற்சாகம் கொண்டனர்.

ஆனால்...

ஆற்றைக் கடந்து செல்வது எப்படி?

ஏனெனில், தெஸிபோனுக்குப் பின்வாங்கிச் சென்ற பாரசீகர்கள், தலைநகரின் இரு பகுதிகளையும் இணைத்து நின்ற பாலத்தையும் இரகசியமாக அழித்துச் சென்றுவிட்டனர். அத்துடன், மதாயினின் மேலை நகரக் கரையோரம் மிதந்து கிடந்த படகுகளையெல்லாம் கடத்திச்சென்று விட்டனரே! ஆக, முஸ்லிம்கள் நதியை எவ்வாறு கடந்துசென்று கிஸ்ராவின் அரண்மனையைக் கைப்பற்றுவது?

''ஆற்றைக்கடந்து செல்வதற்கான படகுகள் எல்லாம் பகைவரின் கையில் இருக்கின்றன. எனவே ஆற்றை நாம் கடந்து வரமுடியாது என்ற தைரியத்தில் அவர்கள் இன்னும் தங்கள் நிலையைப் பலப்படுத்திக் கொள்வார்கள் அன்றோ? இந்தநிலையை நீடிக்க விடுவது நமக்கு எப்போதுமே ஆபத்துத்தான். தங்கள் வசமிருக்கும் படகுகளில் வந்து, எந்த விநாடியும் எதிரிகள் நம் மீது பாயக்கூடும். ஆற்றின் மறுபுறம் ஒன்று திரண்டிருக்கும் எதிரிப்படைகளை அங்கிருந்து விரட்டாதவரை, நாம் நிம்மதியாக இருக்க முடியாது'' என்று தம் வீரர்களுக்கு விளக்கமாகக் கூறினார் தளபதியார் ஸஅத்.

அவையனைத்தும் உண்மைதான் என எல்லாருமே ஒப்புக்கொண்டனர். என்றபோதிலும் எதிரிகளை விரட்டியடிக்க வேண்டுமானால் நதியைக் கடந்து செல்லவேண்டுமா? 'எவ்வாறு செய்வது? எவ்வாறு.........?'— முஸ்லிம் படைவீரர்கள் அத்தனை பேர்களுடைய உள்ளங்களிலும் அதேகேள்விதான்! (தொடரும்)

# பழமொழி

639. ஏழைச் சுற்றத்தானையும் சிறிய காயத்தையும் அலட்சியம் செய்யாதே.

—பின்லாந்து

640. நாற்பது வயது இளமையின் முதுமை, ஐம்பது வயது முதுமையின் இளமை.

—பிரான்ஸ்

641. செத்தவனுடைய செருப்புகளுக்காகக் காத்திருப்பவன் நீண்ட தூரம் வெறுங்காலுடன் செல்கிறான்.

—ஸ்காட்லாந்து

642. வம்பு பேசுபவனின் வாய் சைத்தானின் தபால் பை.

—வேல்ஸ்

643. பொய்காரன் ஞாபகத்தோடு பொய் சொல்ல வேண்டும்.

—ஸெக்கோஸ்லோவக்கியா

644. அயலானுடைய கால் ஒடிந்த பிறகு, தான் மிக நன்றாக நடக்கலாம் என்று பொறாமைக்காரன் நினைக்கிறான்.

—டென்மார்க்

645. நண்பர்களே மிக நெருங்கிய உறவினர்கள்.

—ஹாலந்து

646. ரொம்பக் குறைவாகச் சாப்பிட்டுவிட்டேனென்று ஒரு போதும் கவலைப்படாதே.

—எஸ்த்தோனியா

647. நம்பிக்கையும் தைரியமும் வெற்றிக் கிரீடத்தின் இரு ஒளிமிகு வைரங்கள்.

—இந்தியா

648. ஊசியைப் பார்த்து சல்லடை சொல்கிறது, ''உன்னுடைய வாலில் ஒரு ஓட்டை இருக்கிறது,'' என்று.

—இந்தியா

# ஆயிரம்

649. தர்மம் ஒருபோதும் ஏழையாக்கினதில்லை, களவு ஒருபோதும் பணக்காரனுக்கியதில்லை, செழுமை ஒருபோதும் அறிவாளியாக்கினதில்லை.

—இங்கிலாந்து

650. முப்பது வயதில் ஒரு மனிதன் கிழவனுகச் சாகலாம், எண்பது வயதில் (ஒரு மனிதன்) இளைஞனுகச் சாகலாம்.

—இங்கிலாந்து

651. நிறைய மரியாதை, நிறைய தந்திரம்.

—*ஸ்காட்லாந்து*

652. கசப்பான கவளம் அதிக நேரம் சவைக்கப்படும்.

—வேல்ஸ்

653. கணவனில்லாத பெண் கடிவாள மில்லாத குதிரை மாதிரி.

—*பல்கேரியா*

654. உன் நண்பனை இரகசியமாகத் திருத்து, வெளிப் படையாகப் புகழ்.

—*ஸெக்கோஸ்லோவக்கியா*

655. ஒரு எலும்புக்காக ஒரு நேர்மையான மனிதன் தன்னை நாயாக்கிக் கொள்ள மாட்டான்.

—*டென்மார்க்*

656. நல்ல மனச்சாட்சி ஒரு மென்மையான தலையணை.

—*எஸ்தோனியா*

657. தீமை விரைவில் செய்யப்படுகிறது; புண் நீண்ட காலம் வலித்துக் கொண்டிருக்கிறது.

—*பின்லாந்து*

658. எல்லாப் பாவங்களும் முதுமையடையும்போது பேராசை இளமையாக இருக்கிறது.

—*பிரான்ஸ்.*

659. நெருப்பில் ஊதினல் கண்களில் தீப் பொறிகள் விழும்.

—ஜெர்மனி

*(தேர்ந்து தமிழாக்கியவர்: எஸ். ஏ. சுலைமான், எம். ஏ.)*

ஜனவரி இதழின் தொடர்

# விஞ்ஞானமும் கலையும்!

மூலம் : முஹம்மது மார்மடியூக் பிக்தால் (ஆங்கில முஸ்லிம்)
தமிழ் : ஆர். பி. எம். கனி, பி. ஏ., பி. எல்.



அரேபியாவில் இஸ்லாம் வருவதற்கு முன்பு ஒரே ஒரு வகை இலக்கியம்தான் இருந்து வந்தது. அதுவே கவிதை. அக்கால அரபிகள் சிறந்த பாடல்கள் எழுதியிருக்கின்றனர். அது காரணமாக அக்காலக் கவிஞர்களை இஸ்லாமிய யுகத்தில் வாழ்ந்த ஆயிரக்கணக்கான கவிஞர்களைவிடவும் உயர்ந்தவர்களாகச் சிலர் கருதுகின்றனர். இடையனின் புல்லாங்குழல் இசைதான், சாஸ்திரோக்தமான சங்கீதத்தைவிட இனிமையானது என்று கூறுவதைப் போன்ற அபிப்ராயம் இது. நானும் இத்தகைய அபிப்பிராயமுடையவனே. உணர்ச்சியைப் பொறுத்தவரை, இஸ்லாத்திற்கு முந்திய காலையில் பாடப்பட்ட கவிதைகளைப்போல்எதுவுமே இல்லை. ஆனால் நாசூக்கையும் கலாச்சாரத்தையும் அடிப்படையாகக்கொண்டு மதிப்பிடுவதாயின் இம்ரஉல்கைஸ், அந்தார், கஅப் இப்னு ஸுஹைர் போன்ற இஸ்லாத்திற்கு முந்தின அரபிக் கவிஞர்களுடைய கவிதைகளை, அபூதையிப், அல்முதநப்பி போன்ற முஸ்லிம் கவிஞர்களுடைய கவிதைகளுடன் ஒப்பிடுவதற்கில்லை. முஸ்லிம் நாகரிகத்தில் கவிதை என்பது ஒரு சிலருக்குக் கடவுள் அருளும் வரப்பிரசாதமாகக் கருதப்படவில்லை. சகல அறிஞர்களுக்கும் அது ஒரு பொழுதுபோக்கு. உயர்தரமான கவிதைகள் எழுதிய அரபி, பாரசீக, துருக்கிய கவிஞர்களுடைய பெயர்களை மட்டும் குறிப்பதானால் கூட பல புஸ்தகங்கள் நிறைந்துவிடும்.

கிரேக்க, லத்தீன் நூற்களை தர்ஜுமாச் செய்து முஸ்லிம்கள் செய்த சேவையைப் பற்றி நான் விவரிக்காமல் விட்டுவிடுகிறேன். இவை மானிடருக்கு அறிவொளி கொளுத்துவதில் பேருதவி செய்திருப்பது உண்மையேயாயினும் இஸ்லாமிய நாகரிகத்தின் பயனாக உண்டானவை என்று இவற்றைக் கூற முடியாது. நீதிபோதனை செய்யும் நூற்களோ ஏராளமாக உள்ளன. தர்க்க சாஸ்திரம்

பற்றிய, இலக்கணம் பற்றிய நூற்களும் மிகுதமாகக் காணப்படுகின்றன. ஆனல் இவை இன்றைய வாசகர் களைக் கவரக் கூடியனவல்ல.




தத்துவம் பற்றிய நூற்கள் எண்ணிலடங்கா. அவற்றில் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) எழுதிய நூற்கள் போன்றவை இன்றும் கவனமாகப படித்தறிய வேண்டியவை.

சரித்திரம் முஸ்லிம்களால் உன்னதமாக வளர்க்கப்பட்டது. ஐரோப்பாவில்போல, பொதுவாக தேதிகளையும் போர்களையும், வம்சங்களையும் முஸ்லிம் சரித்திராசிரியர்கள் குறித்து வைத்துள்ளனர். ஆனல் மிக நுணுக்கமான தகவல்களையும் நல்கும் பல அருமையான சரித்திர நூற்களும் உள்ளன. அரபி சரித்திராசிரியர்களில் என்னை முற்றும் கவர்ந்தவர்களுள் உமாரஹ், இப்னுல் அதீர், இப்னு கல்தூன் ஆகியோர் முக்கியமானவர்கள். இப்னு கல்தூன் ஓரிரு நூற்றுண்டுகளுக்கு முன்புதான் வாழ்ந்திருந்தாரோ என்று எண்ணச் செய்பவை அவருடைய நூற்கள். எகிப்திலே வாழ்ந்த அஹ்மது அல் ஜபர்தியும் என் நினைவிலேயே நிற்கிருர். இவர் பிரெஞ்சு ஆக்கிரமிப்புக் காலத்திலும் அர்னுயட் முகம்மது அலி ஆட்சிக்கு வந்த காலத்திலும் வாழ்ந்தவர். இச் சரித்திராசிரியர்களைப்பொதுப் படையான சரித்திரம் எழுதியவர்கள் என்று ஐரோப்பியர்கள் கூறுகின்றனர்.

இவர்கள் தவிர, இஸ்லாமிய சரித்திரத்தைப் பற்றி மட்டும் பேசும் பெரும் சரித்திராசிரியர்களும் உண்டு. இவர்களில்

மிகத் தெளிவான சரித்திரங்கள் எழுதியவர்கள் பலர். அவர்களுள் இஸ்மாயீல் அபுல் பிதாவிடமும், பைத்துல் முகத்தஸைப்பற்றிச் சரித்திரம் எழுதிய மஜ்ஹுத்தீன் இடமும் எனக்கு அதிக ஈடுபாடுண்டு.

பிரயாண வரலாற்று நூற்களும் பல உண்டு. அவற்றில் இப்னு பதூதாவின் நூல் ஒன்று: ஆயினும் இது அதிக உபயோககரமானது என்று சொல்ல முடியாது

இனி வேறெங்கும் ஒப்புவமையாகக் காணமுடியாத இஸ்லாமிய இலக்கியத்தைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். இதுதான் நபி பெருமான் (ஸல்) அவர்கள் திருவாக்கியங்களின் தொகுப்பு. இவ்வகை இலக்கியத்தில், தவறு இல்லாதபடி சரிபார்த்து சோதனை செய்வதில் பெருத்த அக்கறை காட்டப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ஆரம்ப காலத்தில் இவற்றைச் சேகரித்து வைத்தனர். அடுத்த தலைமுறையில் இவற்றை மீண்டும் பரிசோதனையிட்டு, அலசிப் பார்த்து தகுந்த ஆதாரமுள்ள திருவாக்கியங்களைத் தொகுத்தனர்; சரியான ஆதாரமற்ற வாக்கியத்தின் அருகே அவ்விஷயத்தைத் தெரிவித்திருந்தனர். சுன்னத்து வல் ஜமாஅத்தார்கள் ஆதாரப் பூர்வமானவை என்று ஏற்றுக் கொள்பவை ஆறு தொகுதிகள் ஆகும். இவற்றில் யாவருக்கும் தெரிந்தவை சஹீஹுல் புகாரியும், சஹீஹ் முஸ்லிமும் ஆகும்.

முஸ்லிம் அரசியல், சமுதாயச் சட்டங்கள், தினசரி வாழ்க்கை நியதிகள்பற்றி உதாரணங்களோடு பேசும் பிக்ஹுவும் ஒருவகை இலக்கியமாகும். மேலும் இதில் அரசாங்க நியதிகள், அரசியல் சமுதாயச் சட்டங்கள், தினசரி ஒழுக்கம்பற்றிய விதிகள் முதலியன தொட்டு, இபாதத்தில் அனுசரிக்க வேண்டிய நியமங்கள் வரை, தொழுகையில் எப்படி தக்பீர் கட்டுவது, எப்படிச் சிரசைத் தரையில் வைப்பது என்பது வரை, கணவன் மனைவியிடம் கொண்டிருக்க வேண்டிய உறவு ஆகியவை ஈறாகப் பல விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. இக் குறிப்பிட்ட இலக்கியம் இஸ்லாமிய முறைகளை க்ஷீணமடையச் செய்த பிற்கால முல்லாத்தனத்தின் பயனாக ஏற்பட்டதாகும். இதனை ஆக்கியவர்கள் உலக ஒளியின்றி திரு குர்ஆன் போதுமானது என்பதை நிரூபிப்பதை நோக்கமாகக் கொண்டிருந்தனர். எழுத்தைப் பாராட்டிவிட்டு, அதிலுள்ள ஜீவனை எடுத்துக்கொள்ளத் தவறியதே இந்த இலக்கியத்தின் குறையாகும்.

பிக்ஹு பற்றிய நூற்களில் முஸ்லிம்களுக்கு அவசியமான ஞானமும் இருக்கவே செய்கிறது. ரஸவாதத்தில் ஆராய்ச்சி நடத்தியவர்கள் ரஸாயனத்தைக் கண்டுபிடித்தது

போல, ஒரு தவருன லக்ஷியத்தின்படி (இஸ்லாத்தில் பாகுபாடுகளை ஏற்படுத்தும் நோக்குடன், அதாவது லௌகீக, அரசியல் துறைகள் என்று இஸ்லாத்தில் பாகுபாடு செய்யும் நோக்குடன்) ஆராய்ச்சி நடத்தியவர்கள், இஸ்லாமிய போதனைகளை வகைவகையாகப் பிரித்து எழுதி வைத்தனர் இச்சட்ட திட்டங்கள் ஒரே வகையானவையல்ல, காலத்திற்கேற்றவாறு வளரக் கூடியவை என்ற உண்மை மட்டும் உணரப்படின் முஸ்லிம் கலைப்பண்பில் பிக்ஹு முக்கிய இடம் பெற்றுவிடும்.

அரபி இலக்கணத்தின் பெருமையை ஒரே வரியில் கூறுவதாயின், ஆங்கில இலக்கணத்தோடு அதை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, ஆங்கிலத்தில் இலக்கணமே இல்லையோ என்று தோன்றும். அத்தனை விரிவான இலக்கணம் அரபியிலுள்ளது. அதையும் ஓர் அறிவியற் கலையாகவே அரபிகள் கொண்டாடுகின்றனர்.

இந்தப் பரந்த ரஸமான பொருள்பற்றி மேலாழ்ந்த வாரியாக நான் ஒரு சில சொன்னேன். முடிவாக இன்னொருவகை இலக்கியம்பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். இதுவும் மிகப் பெரியது; பல உட்பிரிவுகளைக் கொண்டது. இவ்வுலகில் மனிதன் இறைவனோடு எப்படித் தொடர்பு கொள்வது என்பதுபற்றிக் கூறும் 'தஸவ்வுப்' அது. இறைவன் இருக்கிருஞ என்பதே வாதத்திற்குரிய விஷயம் என்று மேனுட்டு

அறிஞர் சிலர் கருதுகின்றனர். ஆனால் ஒரு முஸ்லிம் அப்படிக்கருதுவதில்லை; அவன் இறைவன் மீது கொண்டுள்ள நம்பிக்கை சொந்த அனுபவத்தாலும் உண்டானதாகும். சூஃபி எழுத்தாளர்கள் அந்த அனுபவத்தை முற்றும் சரியாக வெளியிட்டுள்ளனர். ஆத்மீக உலகம் உண்டா என்பதப்பற்றியே மேனாடு விவாதித்துக் கொண்டிருக்கும் சமயத்தில், முஸ்லிம் சூஃபிகள் இறைவனோடு தொடர்பு கொண்ட அனுபவம்பற்றி இத்தனை தூரம் எழுதியது கவனிக்கத்தக்கது. இஸலாமியக் கலைப் பண்பில் காணப்படும் சிறந்த தத்துவம், ஆழ்ந்த சிந்தனை, அற்புதமான கவிதை ஆகியவற்றை இவ்வகை இலக்கியத்தில் காணலாம். நான் அறிந்த அரபி, துருக்கிய சூஃபி இலக்கியம்பற்றி மட்டுமே நான் பேசுகிறேன். பாரசீக, சூஃபி இலக்கியமே நெடுகிலும் பரவியதாக இருக்கிறது. ஆனால் அதில் பெரும் பகுதியை அரபிகள் வெறும் கற்பனையானவை என்றும், அந்த உயரிய பொருளுக்குத் தேவையான ஒழுங்கான நடைமுறையற்றவை என்றும் ஒதுக்கி விடுகின்றனர் பாரசீக சூஃபியாக்களில் பலர் மக்களை த தவறான வழியில் கொண்டு சென்றனர் என்பது உண்மையேதான். அரபி சூஃபியாக்கள் அப்படிப்பட்டவர்களல்ல. ஜாஜ்வல்யமான கவிதையும், பல ரகக் கலைப்பண்பும் பாரசீகத்தில் தோன்றியதெனினும், அங்கே தவறான இஸ்லாமிய உணர்ச்சியும் உண்டாகியுள்ளது என்பதையும் கூற வேண்டுவதாகவே இருக்கிறது. சத்தியத்தைக்கூடப் புறக்கணித்து பாரசீகஉள்ளம்பரவசமடைய விரும்புகிறது. ஆனால் அரபி, துருக்கிய உள்ளங்களோ வெறும் பிரமையை ஒதுக்கி சத்தியத்தை நாடுகின்றன. இஸ்லாத்தில் வெறும் கோட்பாடுகளைவிட உண்மையான உணர்ச்சியைவெளியிடுவதே சரியான சூஃபி கொள்கையாகும். சரியான சூஃபியாக்கள், பெரும்பாலான மக்கள் வெறும் கோட்பாடுகளை மட்டுமே அனுசரித்த காலையில், அந்த ஜீவனை வளர்த்துக் காப்பாற்றினர்.

மரணத்திற்குப்பின் மனிதன் நிலையை அறிவதற்காக மரணமானோர் ஆவிகளோடு பேசும் இழி நிலைக்கு வந்துள்ள மேல் நாட்டினர் சரியான ஆராய்ச்சி செய்யுர் அரபி சூஃபி இலக்கியத்தைக் கற்றுணரவேண்டும். அப்போதுதான், அவர்கள் அழைத்தால் வந்து பேசும் ஆவிகள் தமது பாவங் காரணமாக, தமது உடலைவிட்டு நீங்கிய பின்னரும் இவ்வுலகைச் சிறிது காலம் சுற்றியலையும் துரதிஷ்டம் வாய்ந்தவை என்பதைத் தெரிந்து கொள்வார்கள். அரபி சூஃபி இலக்கியம் அவர்கள் நோக்கத்தை

உயர்த்தும்; அவர்கள் ஏமாற்றங்கள் பலவற்றைத் தவிர்க்கவும் உதவும்.

முஸ்லிம் இலக்கியமும் கலையும் என்றும் மடிந்ததில்லை; ஆனால் இயற்கை சாஸ்திரமோ இரு நூற்றுண்டுகளுக்கு முன்பே முஸ்லிம்களிடையிலிருந்து மறைந்து விட்டது. துருக்கியிலும், சிரியாவிலும், எகிப்திலும் அச்சியந்திரம் தோன்றியதோடு ஒரு மறுமலர்ச்சியும் ஆரம்பித்தது. இஸ்லாமியப் புத்துணர்ச்சிபற்றி செய்யிது ஹலீம் பாஷா எழுதிய "இஸ்லாம்லஷிமக்" போன்ற சிறந்த நூற்கள் வெளியாயின. ஹலீம் பாஷாவின் நூல் ஷரீஅத்தின்படி நவீன நாடு எப்படி இருக்க வேண்டும் என்பதையும், முஸ்லிம்களுக்கு நல்வாழ்வு வேண்டின் அவர்கள் இஸ்லாத்திடம் திரும்பவேண்டும் என்பதையும் அதைவிட்டு அவர்கள் விலகியதாலேயே வீழ்ச்சியுற்றனர் என்பதையும் தெளிவாக்குகிறது. இந்தியாவிலும் நமது காலத்தில் ஏற்பட்ட இலக்கிய மறுமலர்ச்சியின் சின்னமாக, இஸ்லாத்தின் நான்காவது பெரிய மொழியான உர்துவில் உண்டாகியுள்ள பலதுறை நூற்களையும் பற்றி நீங்கள் அறிவீர்கள். இன்று முஸ்லிம் உலகம் முழுவதிலும் ஒரு மகத்தான மறுமலர்ச்சிக்கான சின்னங்கள் தென்படுகின்றன. அல்லாஹ்வின் நாட்டத்தோடு, இஸ்லாம் உலகில் தோன்றியதன் நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக, அது மீண்டும் உன்னதம் பெறும்படி செய்ய முஸ்லிம்கள் முயலுவார்களாக!




## 11. கோட்டைக்குள் ஒரு கோட்டை!

துணைத் தளபதி முகீத் ரூமியின் தலைமையில் சென்ற படை, வழியில் எதிர்ப்பட்ட பிரதேசங்கள் அனைத்தையும் எதிர்ப்பு எதுவுமின்றி எளிதில் வசப்படுத்திக்கொண்டு கார்தோவா கோட்டையை நெருங்கியபோது அதன் கதவுகள் மூடப்பட்டிருந்தன

அரபியரின் முன்னேற்றம் பற்றிச் செய்தி அறிந்திருந்த கார்தோவாக் கோட்டைத் தலைவன், வெளியேறிச்சென்று அவர்களை எதிர்க்கத் திராணியற்றவனாகக் கோட்டைக்குள் புகுந்துகொண்டு நீண்டதொரு முற்றுகையை சமாளிக்கத் தயாராக இருந்தான்.

ஸ்பெயின் தேசத்திலேயே மிகவும் வளமான பகுதி அதுதான். நாட்டின் மற்ற எல்லாப் பகுதிகளுக்கும் அங்கிருந்து சாலைகள் அமைந்திருந்தன. விவசாயம், கைத்தொழில், வர்த்தகம் ஆகிய அனைத்திற்கும் கார்தோவா நகரம் மிகப்பெரிய கேந்திரமாக விளங்கிற்று. அதன் இயற்கை அமைப்பும் மண்வளமும், மக்களின் தொழில்திறனும் கூடி அந் நகரை செல்வச்செழிப்பிலே சிறந்து விளங்கச் செய்திருந்தன.

பெரும் பொருளைத் தேடிக் குவித்துக்கொண்டு அதன் விளைவாக சுகபோகவாழ்விலே திளைக்கும் வாய்ப்புப் பெற்றிருப்போருக்கு வீர உணர்வு குன்றிவிடுவது இயற்கையல்லவா?

முற்றுகை துவங்கிய இரண்டொரு நாட்களுக்குள்ளாகவே முகீத் ரூமிக்கு இந்த உண்மை தெரிந்தது. அவரிடம் பிடிபட்ட ஸ்பானியர் சிலரிடம் அவர்

கேள்விமேல் கேள்வியாகத் தொடுத்து சார்தோவாவின் உள் நிலவரங்களை நன்கு தெரிந்து கொண்டார். எனவே அக் கோட்டை வெகு விரைவில் தம் வசமாகிவிடும் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது

எனினும் வலுவான மதில்களையும் கதவுகளையும் கொண்ட கோட்டைக்குள் புதுங்கிக் கிடக்கும் எதிரியை வெளியில் வந்து போரிடச் செய்வது எவ்வாறு என்றுதான் அவருக்கு விளங்கவில்லை. எத்தனை மாதமாயினும் முற்றுகைக்கு ஈடுகொடுக்கும் அளவுக்கு வேண்டிய உணவுப் பண்டங்களும் வேறு தேவையான பொருள்களும் உள்ளே பெருமளவுக்குக் குவிந்து கிடப்பதாக அவருக்குத் தெரியவந்த போது முகீத் வேறு வழிகளைப் பற்றியும் சிந்திக்கத் தொடங்கினார்.

எப்படியாவது [illegible] மதில்மீது ஒரு சிலரேனும் ஏறிவிட முடிந்தால் அதைத் தொடர்ந்து தம்முடைய நோக்கம் எளிதில் நிறைவேறிவிடும் என்று அவருக்கு உறுதியாகத் தோன்றியது.

முகீத் அனுப்பிவைத்த உளவாளிகள் கோட்டை மதில் சுவர்களை நான்கு புறமும் சுற்றி ஆராய்ந்து பார்த்து வந்தனர். அவர்களுள் ஒருவன் தந்த தகவலைக் கேட்டதும் துள்ளி எழுந்தார் முகீத். அவ் வீரனையும் அழைத்துக்கொண்டு தாமதமின்றி குதிரையை முடுக்கிவிட்ட முகீத், அவன் குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும் அப் பகுதியை நன்கு ஆராய்ந்து பார்த்தார். அவருக்குப் பூரண திருப்தி ஏற்பட்டதை அவருடைய முகம் தெளிவாகக் காட்டியது.

அடுத்து சில தினங்களுக்கு, தேர்ந்தெடுத்த வீரர்கள் பலரைப் பகுதி பகுதியாக அந்த இடத்துக்கு அனுப்பி நன்கு பரிச்சயம் கொள்ளும்படி செய்தார் முகீத். காலையிலும் மாலையிலும் எதையோ எதிர்நோக்குவது போல வானத்தை ஆராய்ந்து பார்த்துக்கொண்டிருந்தார் அவர்.

இறுதியாக, அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்த சந்தர்ப்பம் நெருங்கி வந்தது. அந்த அளவுக்கு அவர் அப்பகுதி பூமியைப் பற்றி ஆராய்ந்து தெரிந்துவைத்துக் கொண்டிருந்தார்.

விடியற்காலையில் தொழுகைக்கு எழுந்தவர்கள் வானம் கருத்து மேகங்கள் கூடி வருவதையும் விண்மீன்கள் மேகங்களுக்குப் பின்னால் ஒவ்வொன்றாக மறைவதையும் கண்டனர். வழக்கமாக வீசும் காலை இளங்காற்று அன்று அசைவற்றிருந்ததையும் அவர்கள் உணர்ந்தனர்.

அன்று முழுவதும் கதிரவன் முகங் காட்டவில்லை. எனினும் அரபியரின் முகாம் வெகு சுறுசுறுப்புடன் இயங்கியது. வாட்கள் சாணை தீட்டப்பெற்றன. ஈட்டிகளின் வளைவுகள் நேர்செய்யப்பட்டன. விற்களும் அம்புகளும் சரி பார்க்கப்பட்டன. குதிரைகளின் சேணங்கள் செப்பனிடப்பட்டன. தம் வீரத்தை வெளிப்படுத்த மீண்டுமொரு வாய்ப்புக் கிடைக்கப்போவதை நினைந்து முஸ்லிம் வீரர்களின் உள்ளங்கள் துள்ளிக்கொண்டிருந்தன.

மேகங்கள் மேலும் மேலும் சேர்ந்து கவிந்துகொண்டிருந்ததனால் நேரம் வருமுன்பே அஸ்தமித்துவிட்டது போலத் தோற்றமளித்தது.

முன்னிரவு நேரம். காற்று வீசத் தொடங்கி சிறிது சிறிதாக வலுத்துக்கொண்டே வந்தது. மழையும் விழ ஆரம்பித்தது.

தக்பீர் ஒலியைக் கிளப்பி, ருகீத் உத்தரவு கொடுத்ததும் அறுநூறு வீரர்கள் தத்தம் குதிரைகளின்மீது ஏறியமர்ந்து அவரைப் பின்பற்றிச் சென்றனர் நேரம் செல்லச் செல்ல காற்றும் மழையும் வலுத்துக்கொண்டே வந்தது அவ் வீரர் ள் அதனை ஒரு சிறிதும் பொருட் படுத்தாது தங்களின் இலட்சியத்தை நோக்கி முன்னேறிக்கொண்டிருந்தார்கள்,

மரங்கள் அடர்ந்த பகுதி அது. கோட்டை மதிலை ஒட்டினாற்போன்று ஒரு மரம் மட்டும் கொப்பும் கிளையுமாகப் படர்ந்து வானுற ஓங்கி வளர்ந்து நின்றது. எப்போதோ ஒரு சமயம் இடி விழுந்ததனால் கோட்டை மதிலின் அந்தப் பகுதியில் சிறிது இடிபாடு காணப்பட்டது. அடிக்கடி தோன்றி மறைந்த மின்னல் ஒளியிலே வானை நோக்கி வாயைப் பிளந்து கொண்டு நிற்பதுபோல பயங்கரமாகக் காட்சியளித்தது அப் பிளவு.

மதில் சுவருக்கு மிக நெருக்கமாகத் தெரிந்த கிளையும்கூட அதிலிருந்து குறைந்தது பத்தடி தூரமாவது இருக்கும் போலத் தோன்றியது,

அக் கிளையை அடைந்து அதிலிருந்து அந்த இருளில் குறி பார்த்து பத்தடி தூரம் தாவி மதில் சுவரின் மீது யாராவது குதிக்க வேண்டும், அம் முயற்சியில் ஒருவன் வெற்றிபெற்றாலும் கூடப் போதும்!

தவறினாலோ? மரணம் நிச்சயம்!

*துணிந்து முன்வந்தனர் பலர்!*

அவர்களுள் மிக மெலிந்தும் சற்றுக் குள்ளமாகவும் ஒரு சிறு பையனைப் போலத் தோற்றமளித்த அரபி வீரனொருவன் துணைத்தளபதியை நோக்கி ''தலைவரே. நான் ஒருவன்தான் இக் காரியத்தை வெற்றிகரமாகச் சமாளிக்க முடியும் என் உருவத்தைப் பாருங்கள்! மிகவும் இலேசான என் உடலை எவ்வளவு மெல்லிய கிளையாலும் தாங்கிக்கொள்ளும் மரங்கள் அடர்ந்த ஷாம் (சிரியா) பிரதேசத்தைச் சேர்ந்த எனக்கு குழந்தைப பருவம் முதற்கொண்டே சதா மரங்களின் மீது ஏறி அமர்ந்து கிளைக்குக் கிளை தாவிச் சென்று பழம் பறித்துத்தின்னும் பழக்கம் உண்டு. அப்போதெல்லாம் எனனைக் 'குரங்குக் குட்டி' என்றே பெயரிட்டு அழைப்பார்கள். உத்தரவு கொடுங்கள்!'' என்று வேண்டி நின்றான்.

முகீத் சிரித்துக்கொண்டே அவன் முதுகில் தட்டிக் கொடுத்து ''சரி. உன் வேலையைத் தொடங்கு! அல்லாஹ் நமக்கு வெற்றியை அருள்வான்'' என்றார்.

உத்தரவு கிடைத்ததுதான் தாமதம்! அம்மரத்தின்மீது பாய்ந்து ஏறி ஒரு குரங்கின் லாகவத்தோடு மளமளவென்று கிளைவிட்டு கிளைக்குத்தாவி ஒரு சில நிமிடங்களில் உச்சாணிக் கிளைக்குச் சென்று விட்டான் அவன். இடிக்கும் மழைக்கும் பயந்து அதன் மீது அடைக்கலம் புகுந்திருந்த பறவைகள் அஞ்சிபபறந்து அருகிலிருந்த மரங்களுக்குச் சென்றன. அவ்வளவு உயரத்தில் அவன் ஒரு கிளை மீது தொத்திக்கொண்டிருந்ததை மின்னல் வெளிச்சத்தில் பார்த்தபோது அவனுக்கு குழந்தைப் பருவத்தில் கொடுக்கப்பட்டிருந்த பெயர் பொருத்த

மானது தான் என்று மற்றவர்களுக்குத் தோன்றியது!

கிளை மீது அமர்ந்துகொண்டு அதை மேலும் கீழுமாக அழுத்தியும் உயரச் செய்தும் ஊஞ்சலாடிக் கொண்டே சிறிது நேரத்தைக் கடத்தினுன் அவன்.

கீழே நின்ற வீரர்கள் பதை பதைப்புடன் அவனைக் கவனித்துக் கொண்டே, அவனுடைய முயற்சி வெற்றியளித்து அவன் பத்திரமாக மதிலின் மீது சென்று இறங்கத் துணைபுரியும்படி இறைவனைப் பிரார்த்தித்த வண்ணம் நின்றனர். அப்பகுதியில் கண்ணுக்கெட்டிய வரை மதில்மீது ஸ்பானிய வீரன் எவனுமில்லை என்பதை கீழே இருந்தவர்களும் மரத்தினுச்சியில் இருந்த வீரனும் அவ்வப்போது தோன்றி மறைந்த மின்னலின் உதவியால் உறுதிப் படுத்திக்கொள்ள முடிந்தது.

அவ்விதமாக ஊஞ்சலாடிக் கொண்டே தன்னைத் தயார் செய்துகொண்டிருந்த அவ்வீரன் திடீரெனக் கிளையை விட்டு உயரே எவ்விச் சென்று கோட்டைமதிலின் மீது குதித்து இறங்கினுன், நெஞ்சத்துணிவு மிகுந்த அந்த அற்புதச் செயலைப் பார்த்த முஸ்லிம் வீரர்கள் தங்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை உரக்க வெளியிடாமல் அடக்கிக்கொள்வதற்கு வெகுசிரமப்படவேண்டியிருந்தது. இல்லாவிட்டால் அவர்கள் எழுப்பியிருக்கக்கூடிய "தக்பீர்" கோஷம் கார்தோவா கோட்டைக் குள்ளிருந்த அனைவரையுமே எழுப்பி விட்டிருக்கும்.

அதற்கு மேல் காரியங்கள் மளமளவென்று நடக்கத்தொடங்கின.

மழை கொட்டிக் கொண்டே இருந்தது. காற்றின் வேகம் தணிந்த பாடில்லை.

எனினும் அவற்றையெல்லாம் பொருட்படுத்தாது மேலே சென்ற வீரன் தொங்கவிட்ட பட்டு நூலேணியின் வழியாக முதலில் சில வீரர்கள் ஏறினர்.

அப்படி மேலே சென்றவர்கள் இறக்கிய நூலேணிகளின் வழியாகவும் மேன் மேலும் வீரர்கள் தொத்திச் சென்று மதில் மேல் போய்ச் சேர்ந்தனர்.

சுமார் நூறு பேருக்கும் அதிகமாக மேலே போய்ச் சேர்ந்த பிறகு திட்டப்படியே மதில் மேலிருந்த அரபியரும் கோட்டைக்கு வெளியில் கீழே நின்றவர்களும் கோட்டையின் பிரதான வாயிலை நோக்கி வேகமாக நகரத் தொடங்கினர்.

பேய்க்காற்று வீசி பெருமழை கொட்டிக் கொண்டிருந்த அந்த இரவில் கண் விழித்திருந்து காவல் புரியத் தேவையில்லை என்று கோட்டைக் காவல் வீரர்கள் நினைத்தனர் இயற்கையே அன்று அந்த நிலைமையைத் தோற்றுவித்து அவர்களுக்குப பாதுகாப்பு அளித்து எதிரிகளுக்கு எல்லையில்லாத் துன்பத்தைக் கொடுப்பதாக அவர்களுக்குத் தோன்றியது. பொழுது புலர்ந்த பின் மேலிருந்து பார்த்தால் அரபியரின் கூடாரங்கள் அனைத்தும் அன்றிரவின் புயற் காற்றில் பிய்த்துக் கொண்டு போயிருப்பதைக் கண்டுகளிக்கலாம் என்று அவர்கள் கனவு கண்டனர்.

அது போன்ற கனவுகளில் மூழ்கி, குளிருக்கும் மழைக்கும் அஞ்சி நன்ருகப் போர்த்து மூடிக் கொண்டு கோட்டை வாயிற் பகுதியில் முடங்கிக் கிடந்த ஸ்பானிய வீரர்கள், அரபியர் எழுப்பிய தக்பீர் ஒலி கேட்டு திடுக்கிட்டுக் கண்விழித்துப் பார்த்தபோது எதிரில் உருவிய

வாட்களுடன் நின்ற அரபியரின் உருவங்களை தீவர்த்தி வெளிச் சத்தில் பார்த்து பயங்கொண்டு அஞ்சி நடுங்கினர். அவர்கள் மனிதர்கள் தாமா அல்லது மனித உருவில் தோன்றிய பைசாசங்களா? மனிதர்களே என்றால் அந்தபயங்கர இரவிலும்கூட அவ்வளவு பாதுகாப்பான கோட்டை மதிற் சுவர்களைக் கடந்து அவர்கள் எவ்வாறு உள்ளே வந்திருக்க முடியும்?

அவர்களை மேலும் சிந்திக்க விடாதபடி அரபியர், படுத்திருந்த ஸ்பானியரைக் கால்களால் உதைத்து சண்டைக்கி கிழுத்த போது அவர்கள் எதிரிப்படையைச் சேர்ந்த மனிதர்களே என அவர்களுள் பலருக்கு உறுதியாயிற்று

அதற்கு மேலும் தாமதிக்காமல் ஒவ்வொருவனுக எழுந்து வாட்களை உருவிக் கொண்டு உள்ளே நுழைந்திருந்த எதிரிகளை எதிர்த்துத் தாக்கத் தொடங்கினர்.

கடுமையான போராட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தது. ஒன்றுக்கு மூன்றுக இருந்த ஸ்பானியக் காவல் வீரர்களை வெட்டி வீழ்த்திக்கொண்டிருந்தனர் அரபியர். நள்ளிரவாக இருந்தாலும் காற்று இடி,மழை, முதலியவற்றின் ஒலியினாலும் அங்கு நிகழ்ந்த குழப்பமும் கலவரமும் பரவுவதற்கோ அல்லது அதனால் ஸ்பானியருக்கு உதவி வருவதற்கோ வழியின்றி இருந்தது.

மும்முரமான சண்டையில் ஈடுபட்டிருந்தார்கள் எனினும் முஸ்லிம் வீரர்களின் கவனமெல்லாம் கோட்டைவாயிற்கதவைத் திறந்து விடுவதிலேயே இருந்தது. எனவே பெரும்பகுதியினர் சண்டையிட்டுக் கொண்டே நகர்ந்து. எதிர்த்துப் போரிட்ட ஸ்பானியரை பின்னுக்கிழுத்துச் சென்றனர்.

சரியான சந்தர்ப்பம் கிடைத்ததும் அதற்கெனக் காத்திருந்த அரபிய வீரர்கள் மடமடவெனக் கதவுகளைத் திறக்கும் வேலையைத் தொடங்கினர்கள்.

முதலில் திட்டிக் கதவைத் திறந்து உடனேயே, வெளியில் முகீஸ் ரூமியின் தலைமையில் தயாராகக் காத்து நின்ற வீரர்கள் வேகமாக உள்ளே நுழைய ஆரம்பித்து விட்டனர். உள்ளே இருந்தவர்களும் வெளியிலிருந்து பிரவேசித்தவர்களுமாகச் சேர்ந்து, ஸ்பானிய வீரர்கள் அவர்களைத் தடுத்து நிறுத்து முன்பாகவே, கோட்டையின் பிரதான வாயிலைத் திறந்து விடுவதில் வெற்றி கண்டார்கள்.

தாமதமின்றி ஐநூறு குதிரை வீரர்களும் உள்ளே நுழைந்து விடவும் எஞ்சியிருந்த காவல் வீரர்களுக்கு ஆயுதங்களை எறிந்து விட்டுப் பணிவதைத் தவிர வேறுவழியில்லாமல் போய் விட்டது. அவர்கள் அனைவரும் கைது செய்யப் பட்டனர்.

கோட்டைக் காவல் தலைவனுக்கு செய்தி எட்டியது. நள்ளிரவில் அந்தக்கடும் சூறுவளிக் காற்றிலும் மழையிலும் சென்று அவ்வளவு வலிமை பொருந்திய எதிரியோடு மோதினால் மேலும் பெரும் சேதமே ஏற்படும் என்று அஞ்சி அவன் பொழுது விடியும் வரை காத்திருக்க முடிவு செய்து உள்நகரிலேயே தங்கி எதிர்த்துப் போரிடுவதற்கான ஆயத்தங்களை செய்யத் தொடங்கினன். காற்றும் மழையும் நிற்கட்டுமென முகீதும் காத்திருந்தார்.

விடியற்கால வேளையில் மழை ஓய்ந்தவுடன் முகீதின் தலைமையில் முஸ்லிம் வீரர்கள் நகருக்குள் பிரவேசித்த போது அவர்களை எதிர்க்க ஸ்பானிய வீரன் எவனும் முன்வரவில்லை.

அச்சத்துடன் வீடுகளுக்குள் பதுங்கிக் கிடந்த நகர வாசிகள் சிலரை வெளியில் அழைத்து விசாரித்தபோது, நகருக்கு மத்தியில் ஒரு சிறு கோட்டைபோல அமைந்திருந்த பெரிய மாதா கோவில் ஒன்றைச் சுட்டிக்காட்டி ஓராயிரம் வீரர்களுடன் கோட்டைத் தலைவன் அதற்குள் புகுந்து கொண்டிருப்பதாகத் தெரிவித்தனர். வணக்கத் தலங்களுக்கு முஸ்லிம் வீரர்கள். எத்தகைய ஊறும் விளைவிப்பதில்லை என்று கேள்விப்பட்டதாலேயே அவர்கள் அவ்வாறு மாதா கோவிலுக்குள் நுழைந்து தங்களை மட்டும் பாதுகாத்துக் கொண்டிருப்பதாக அம்மக்கள் மேலும் கூறினார்கள்.

கோட்டைக்குள் ஒரு சிறு கோட்டையைப் போல, மிக உயர்ந்தவையும் பலம் பொருந்தியவையும் ஆன சுற்றுச் சுவர்களோடு அமைந்திருந்த அப்பெரிய தேவாலயத்தைச் சுற்றிப் பார்த்து வந்த துணைத்தளபதி முகீத், அடுத்து என்னவிதமான நடவடிக்கை எடுப்பது என உடனே ஒரு முடிவுக்கு வர முடியாமல் சிந்தனையில் ஆழ்ந்தார்,

(தொடரும்)



# வெல்க

ஆண்டாண்டாய் அல்லலுற்ற மக்கட் கெல்லாம்
அரிதான வாய்ப்பொன்று நெருங்கும் நாளில்
மீண்டுமிங்கே முன்செய்த தவறைச் செய்து
மேலுமொரு சோதனைக்குத் துணிய லாமோ?
ஆண்டவர்கள் இருபத்து வருட மிங்கே
அரசோச்சிக் கண்டபலன் வறுமை தானே?
வேண்டுமென்றே வாக்கிட்டுத் துயர வாழ்வை
வரவழைத்துக் கொள்ளத்தான் போகின் றோமா?

தனிப்பட்ட சிலபேரின் வாழ்வுக் கென்றே
தரங்கெட்ட கொள்கைக்கே ஊக்க மூட்டிப்
பிணிகொண்ட காங்கிரஸாம் ஆளுங் கட்சி
பேரிழப்பைத் தானுகத் தேடிக் கொண்டு,
"இனியென்னை யாரசைப்பார்! நானே வெல்வேன்!"
எனப்பேசல் தோல்விக்கே கொண்டு சேர்க்கும்.
மனிதமனம் மமதையிலே தருக்கும் போது
மண்ணறைதான் பொதுவாழ்வில் மீத மாகும்!

நாடாண்டோர் மக்களது வாழ்வை யெல்லாம்
நலிவுக்குள் அழிவுக்குள் சேர்த்து விட்டு,
கோடான கோடிபணத் திட்ட மென்றே
கூறுகின்ற கொள்கையொன்றை நடத்திக் காட்டி,
"நாடாளும் தகுதியுள்ளோர் எம்மை விட்டால்
நாதியில்லை" என்போர்க்கே வெற்றி கிட்டும்
கேடுமட்டும் மீண்டுமிங்கே நிகழு மானல்
கிளர்ந்துள்ள எதிர்ப்பெல்லாம் மாயம் தானு?

வெளிநாட்டில் பல்கோடி கடனைப் பெற்று
விளைத்திட்ட திட்டத்தின் பலன்தான் எங்கே?
"எலிக்கறியைத் தின்னலாமே மக்க ளெல்லாம்"
என்கின்ற நிலைதானே உணவுக் கொள்கை!
குளிக்கப்போய்ச் சேறள்ளிப் பூசிக் கொண்டோர்
குழப்பத்தை மக்களிடம் விதைத்து விட்டு
பழியெல்லாம் எதிர்க்கட்சி மீதில் போட்டு
பதவிகளைக் காங்கிரஸார் பற்றிக் கொண்டார்!

# கூட்டணி! —கவிஞர் தா காசிம்

எந்தஒரு அமைச்சர்மேல் ஊழல் குற்றம்
இல்லாமல் இல்லையென்ற குற்றச் சாட்டாய்
வந்துவிட்ட பட்டியலைப் பார்த்த பின்னும்
வாய்வீரம் பேசுகின்ற ஆளு வோர்கள்,
நொந்துபடும் மக்களுக்கு ஒருநாள் தேவை
நோட்டாகத் தருவதற்கே வாக்க ளித்தால்
பிந்திவரும் ஐந்தாண்டில் துன்ப வாழ்வை
பெற்றுவிட அச்சாரம் பெற்ற தாகும்!

மூன்றுமுறை காங்கிரஸை அரசி லேற்றி
முடிசூட்டிக் கண்டதெல்லாம் வறுமை தானே!
நான்காவ தாகஅந்தத் தவறை மீண்டும்
நாமெதற்குச் செய்யவென்று நம்மை நாமே
மீண்டுமிங்கே உள்ளத்தைத் தொட்டுக் கேட்டால்
மேலான பதிலொன்றைப் பெற்றோ ராவோம;
வேண்டாத காங்கிரஸை தேர்தல் போரில்
வெறுத்தொதுக்கித் தோல்வியினை ஏற்கச்செய்வோம்!

தொடர்ந்திங்கே ஒருகட்சி ஆண்ட தாலே
தொல்லைபல கொள்ளைபல நிகழ்ந்த துண்மை;
தொடர்ந்திங்கே ஐந்தாண்டுத் திட்டம் மூன்றால்,
தொழிலில்லை உணவில்லை என்றும் கண்டோம்;
தொடர்ந்திங்கே ஆளுவோர்கள் தேர்தல் போரில்
தோற்காமல் வெற்றிபெறும் வழியைச் செய்த
மடமையினை மீண்டுமிங்கே செய்தல் விட்டே
மனம்ஒன்றிக் கூட்டணிக்கே வாக்க ளிப்போம்!

பட்டதெல்லாம் போதாதோ மீண்டும் மீண்டும்
பட்டினியால் துடிக்காத வாழ்வைக் காண்போம்!
சுட்டெடுக்கும் வறுமைத்தீ நமக்கு வேண்டாம்!
சோற்றுக்காய் ஏங்கியழும் துன்பம் தீர்க்கும்
திட்டமொன்றைக் கூட்டணியோர் தந்து விட்டார்
தீர்ப்பளித்துக் காங்கிரஸைத் தோற்க டிப்போம்!
பட்டுவந்த தொல்லைக்கோர் முடிவைக் காண்போம்
பதறாமல் சிதறாமல் வாக்க ளிப்போம்!!

# வினா ? விடை



★ சீனா குழப்பங்களுக்குக் காரணம் என்ன ?

★ ராணுவ அதிகாரியின் நூலில் என்ன கூறப்பட்டுள்ளது ?

★ பசு புனிதமான பிராணி என குர்ஆன் கூறுகிறதா?

★ இந்திய அரசியல் கட்சிகளுக்கு அயல் நாட்டு உதவி கிடைக்கிறதா ?

அ அப்துஸ் ஸமது,
திருச்சி.

கே. சீனாவுக்குள் நடைபெறுவதாகக் கூறப்படும் குழப்பங்களுக்குக் காரணம் என்ன?

ப: என்னவென்றே தெரிந்துகொள்ள முடியாதபடி ஒரே குழப்பமாகத்தான் இருக்கின்றன, அதைப்பற்றி வரும் செய்திகளெல்லாம். ஆனால் அந்த உள்நாட்டுக் குழப்பத்துக்கு அடிப்படையான காரணம் என்ன என்பது பற்றி ஜப்பானியப்பத்திரிகை ஒன்று ஒரு சுவையான தகவலை வெளியிட்டிருக்கிறது அதன் கூற்றுப்படி, சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் மாஸேதுங்கின் மனைவிக்கும் சீன ஜனாதிபதி லியூஷாசியின் மனைவிக்கும் இடையே ஏற்பட்ட போட்டி, பொறாமை பூசல்களின் விளைவாகத் தோன்றிய போராட்டம்தான் இவ்வாறு முற்றியிருக்கிறதாம்! வயதில் குறைந்தவளான ஜனாதிபதியின் மனைவி பேரழகி என்று கருதப்படுகிறாளாம். அவள் தன்னை ஒரு ராணிபோல கருதிக்கொண்டு மமதையோடு நடப்பதாகவும் உண்மையில் அவளுடைய அந்தரங்க வாழ்க்கை மோசமானது என்றும் மாவின் மனைவி தாக்கிப் பேசியும் எழுதியும் வந்ததாக அப் பத்திரிகை மேலும் கூறுகிறது.

எம். அமானுல்லா,
சிங்கை-8.

கே: ஷரீஅத் சட்டத்தில் சர்க்காரின் தலையீட்டை எதிர்க்கும் உங்களுடைய நிலையை நான் ஆதரிக்கிறேன். ஆனால், அதேசமயத்தில் 'இஸ்லாமிய' நாடான பாக்கிஸ்தானின் சட்ட திட்டங்களெல்லாம் இஸ்லாமியக் கோட்பாடுகளுக்கு முரணில்லாத வகை

யில் அமைந்திருக்கின்றனவா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

ப: பாக்கிஸ்தானின் சட்ட திட்டங்கள் இஸ்லாமிய ஷரீ அத்திற்கு முரணானவையாக இருக்கக் கூடாது என்று அந் நாட்டின் அரசியல் சாசனத்தில் கூறப்பட்டுள்ளதாம். பிரிவினைக்கு முன் பிரிட்டிஷ் இந்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டு இயற்றிய ஷரீஅத் சட்டமே 1947-க்குப் பிறகும் இருநாடுகளிலும் இன்றுவரை அமலில் இருக்கினறது. அதையும் அந்த நாட்டின் மற்றுமுள்ள சட்டங்கள் அனைத்தையுமே மறு பரிசீலனை செய்து அடிபபடயான இஸ்லாமியக்கொள்கைகளுக்கும் ஷரீ அத்திற்கும் மாற்றமான அம்சங்கள் இருந்தால் அவற்றைச் சுட்டிக் காட்டி அவைகளைத் திருத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகளைச் சிபாரிசு செய்யும் பொருட்டு, 'அட்வைஸரி கவுன்ஸில் ஆப் இஸ்லாமிக் ஐடியாலஜி' என்று ஒரு குழுவை பாக்கிஸ்தான் அரசாங்கம் நியமித்திருப்பதாகத் தெரிகிறது.

எம். எச். சுல்தான்,
நாகூர்.

கே: இந்தியஅரசியல் கட்சிகளின் தேர்தல் செலவுகளுக்காக அந்நிய அரசாங்கங்கள் ஏராளமாகப் பொருளுதவி செய்வதாக கட்சிகள் ஒன்றின் மீது ஒன்று குற்றம் சாட்டுகின்றனவே, உண்மையாக இருக்குமா?

ப. முக்கியமாக காங்கிரசும், கம்யூனிஸ்ட் கட்சியும் அவ்வாறு ஒன்றையொன்று தாக்கிக்கொள்கின்றன. அமெரிக்க அரசாங்கத்தையும் ரஷ்யாவையும் சம்பந்தப்படுத்திப் பேசுகிறார்கள். இந்தியாவில் எத்தகைய சர்க்கார்கள் அமையவேண்டும் என்பதில் இரு நாடுகளுமே அக்கறை கொண்டுள்ளன என்பதை எவரும் மறுகக முடியாது.

மற்ற கட்சிகளைப் பொறுத்தவரை எப்படியோ? ஆனால் முஸ்லிம் லீகுக்கும் திராவிட முன்னேற்றக் கழகததிற்கும் உதவக்கூடிய நாடுதான் எதுவும் இல்லை. அவை தம்முடைய சொந்த பலத்தையும் ஊழியர்களின் உற்சாகமான உழைப்பையும் நம்பியே தேர்தலில் ஈடுபட்டுள்ளன என்பதையும் நாடு நன்கு அறியும்.

ம. அப்துர் ரஹ்மான்,
சென்னை-17.

கே: திருக்குர்ஆன், பசு மிகப் புனிதமான பிராணி என்று மதிப்பதாகவும் அதனாலேயே திருமறையின் இரண்டாம் அத்தியாயத்துக்கு அதன் பெயர் கொடுக்கப்பட்டிருப்பதாயும், எனவே: முஸ்லிமகள் பசு வதையை எதிர்க்க வேண்டும் என்றும் டாக்டர் அப்துர் ரஹ்மான் துர்ரானீ என்பவர் எழுதிய கடிதம் "இந்தியன்

எக்ஸ்பிரஸ்'' நாளிதழில் வெளி வந்ததைப் பார்த்தீர்களா?

ப: ஆம்! பிறரைத் திருப் திப்படுத்துவதற்காக திருக் குர்ஆனின் வசனத்தைப் திரித்து நேர் மாற்றமான கருத்தை வெளியிட்டிருக் கிறார் அவர். முஸ்லிம்களைப் பொறுத்தவரை மற்றெல்லா மிருகங்களைப் போலவும் பசு வும் மனிதனின் உபயோகத் துக்காக இறைவனால் படைக்க கப்பட்ட ஒரு பிராணிதான்.

நபி மூஸா (அலை) அவர்க ளின் சமுதாயத்தவரான இஸ் ரவேலர்கள் எகிப்து தேசத் தில் 400 ஆண்டுகள் வரை அடிமை வாழ்வு வாழ்ந்தனர். எகிப்தியரிடையே நிலவிய, பசுவை தெய்வமாக வணங் கும், கொள்கை இஸ்ரவேலர் களிடையும் மெதுவாகப் பரவ ஆரம்பித்தது. இறைவனுக்கு இணைவைக்கும் அச் செயலை இஸ்ரவேலர்கள் கைவிடும்படி செய்வதற்கு முதற்படியா கவே 'பசு ஒன்றை நீங்கள் பலியிட வேண்டுமென அல் லாஹ் உங்களுக்குக் கட்டளை யிட்டுள்ளான்' (2 : 66)என்று மூஸா நபி அவர்கள் தம் சமு தாயத்தவருக்கு அறிவிக்கும் படி இறைவனின் ஆணை பிறந்தது. அக் கட்டளையைத் தட்டிக் கழிக்க பல வாறு முயன்று இறுதியில மனமின் றியே அவர்கள் அவ்வாறு செய்து முடித்த வரலாறு திருக்குர்ஆனின் இரண்டாம் அத்தியாயத்தில் இடம் பெற் றுள்ளது. அதனால்தான் அந்த அத்தியாயத்திற்கு பசு வின் பெயர் சூட்டப் பெற்றுள் ளதே அன்றி டாக்டர் துர்ரானி கூறுவதுபோல பசுவுக்கு புனி தத் தன்மை கற்பிக்கும் நோக் கத்துடன் அல்ல.

பண்டைக் காலத்தில், யாக காலங்களில் பசுபலியிடப்பட்டு அதன் மாமிசம் புசிக்கப்பட்ட தற்கும், விருந்தினரை உப சரிப்பதற்காக மாடுகள் அறுக் கப்பட்டதற்கும் ருக் வேதம் போன்ற நூல்களில் நிறைய சான்றுகள் இருப்பதாக ஹிந் துப் பேரறிஞர்களே இப்போது பத்திரிகைகளில் வெளியிடத் துவங்கியிருக்கும் போது இஸ் லாத்தின் அடிப்படைக்கொள் கைகளுக்கே மாற்றமான கருத்துக்களை அவை திருக் குர்ஆனில் இருப்பதாகக் கூறி டாக்டர் துர்ரானி போன்றவர் கள் எழுதுவது விஷமத்தன மான செயலாகும்.

அஹமத் ரஜியா,
பெங்களூர்-2.

கே: ''வக்பு போர்ட்'' என் றால் என்ன? எதனால், யாரால் நியமிக்கப்பட்டுள்ளது?

ப: ஏதாவது ஒரு சொத் தினை நல்ல காரியம் ஒன்றிற் காக ஒதுக்கி, அச்சொத்தை யோ அல்லது அதிலிருந்து வரும் வருமானத்தையோ அத்தகைய காரியங்களுக்குப் பயன் படுத்தும்படி செய்யப் படும் ஏற்பாடு அல்லது அறக் கட்டளைக்குத்தான் ''வக்பு'' என்று கூறுவது என உங்க

ளுக்குத் தெரிந்திருக்கலாம், நாட்டில் மஸ்ஜிதுகள், தர்காக்கள், இன்னும் அவைபோன்ற காரியங்களுக்காக லட்சக் கணக்கில் வக்புக்கள் ஏற்பட்டுள்ளன. அவையனைத்தும் சாயானபடி பரிபாலிக்கப்படுகின்றனவா, அவற்றிலிருந்து கிடைக்கும் வருமானங்கள் விரயமாகாமலும் குறிப்பிட்ட இனங்களுக்காகவுமே செலவிடப் படுகின்றனவா என்பதைக் கண் காணிக்கும் பொருட்டு அரசாங்கம் இயற்றியுள்ள சட்டத்தின் படி ஒவ்வொரு மாநிலததுக்கும் ஒரு குழுவை அந்தந்த மாநில அரசு அமைத்திருக்கிறது. அதற்குத்தான் வக்பு போர்டு என்று பெயர். அத்தகைய குழுக்களுக்கு ஏற்படும் நிர்வாகச் செலவுகளுக்காக ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தை ஒவ்வொரு வக்பு நிர்வாகமும் போர்டுக்கு செலுத்த வேண்டுமெனவும் விதிவகுக்கப் பட்டுள்ளது.

அப்துஸ் ஸத்தார், கோவை.

கே; முன்னாள் ராணுவ அதிகாரி ஒருவர் எழுதி வெளியிட்டுள்ள நூல் ஒனறில் சீனரோடு 1962-இல் நடந்த மோதலில் ஏற்பட்ட கஷ்டநஷ்டங்களுக்கு நேருஜீ போன்ற பெருந் தலைவர்களே பொறுப்பு எனறு அவர் எழுதியிருப்பதாகக் கூறப்படுகிறதே! விவரம் அறிய விரும்புகிறேன்.

ப: நேருஜீயின் உறவினரான லெப்டினன்ட் ஜெனரல்

கவுல் என்னும் முன்னாள் படைப் பிரிவுத் தலைவர், இந்தியாவின் வடகிழக்குப் பிரதேசமான நேபாப பகுதியிலிருந்து சீனரை விரட்டும்படி உத்தரவிடப்பட்டார். அம்முயற்சியில் கண்ட தோல்வியின் விளைவாக அவர் பதவி விலக நேர்ந்தது. அவமானகரமான அத் தோல்விக்குத் தாம் பொறுப்பில்லை என்று, இப்போது அவர் எழுதி வெளியிட்டுள்ள "சொல்லப் படாத கதை" என்னும் நூலில் விளக்க முயன்றிருக்கிறார். அவ்வாறு நடந்ததற்கு ராணுவத்தினர் பொறுப்பல்ல. பண்டித நேருவும், அப்போது பாதுகாப்பு மந்திரியாக இருந்த திரு வி. கே. கிருஷ்ணமேனனும், நிதியமைச்சரான மொரார்ஜீதேசாயுமேபொறுப்பேற்க வேண்டியவர்கள் என்று அவர் ஆதாரங்களுடன் விளக்குகிறார்.

"நமது மந்திரி சபை அன்றாடம் எழும் பிரச்னைகளையே கவனித்து வந்தது. புதிய சிக்கல் ஒன்று எழுமானால் அதற்கு முற்கூட்டியே நாம் தயாராக இல்லாத நிலை நிலவியது. அப்படிப்பட்ட ஒரு நிலைமை தோன்றும் போது டில்லியில் உள்ள பெரிய சிறிய அதிகாரிகள் அனைவருமே சுற்றிச் சுற்றி வந்து, கடைசி நேரத்தில் ஏதாவது ஒரு முடிவு செய்வார்கள். இந்த முறை காரணமாக, ஒரு நெருக்கடி நிலையைச் சமாளிப்பதற்கு வேண்டிய தகுதி படைத்ததாக நமது "யுத்தஇயந்திர"த்தை வைத்துக்கொள்ளத் தவறி விட்டோம்!" என்று அவர் ஓர் இடததில் குறிப்பிட்டிருக்கிறார்.

இமாலயத் தவறுகள் இராணுவ ரகசியம் என்ற பெயரால் மூடி மறைக்கப்பட்டாலும் என்றாவது ஒரு நாள் வெளிப்பட்டே தீரும் என்று இதிலிருந்து தெரிகிறது.

அவர் குற்றம் சாட்டியுள்ள மூவருள் இப்போதிருக்கும் மேனனும், தேசாயும், "நாங்கள் குற்றவாளிகள் அல்ல. பொதுமக்களே அந்நூலைப் படித்துப் பார்த்து முடிவு சொல்லுங்கள். இருந்தாலும் அவர் நேருஜீயின் மீதே பழி சுமத்துகிறாரே. இந்த அநியாயத்தைப் பார்த்தீர்களா ?" என்று மழுப்பி, கவனத்தைத் திருப்பப் பார்க்கிறார்கள்.

"நேபா குளறுபடி"க்கு யார் பொறுப்போ, இல்லையோ என்றாலும், நாட்டின் பொருளாதாரம், சட்டம், அமைதி போன்ற உயிரான பிரச்னைகளிலும் கூட இன்றைக்கும் மத்திய அரசாங்கத்தின் நிர்வாகயந்திரம்,பாதுகாப்புபற்றி லெப். ஜெனரல் கவுல் குறிப்பிட்டிருக்கும் முறையிலேயே தான், இயங்கிக் கொண்டிருப்பதாக அரசியல் பார்வையாளர்கள் கூறுவதை யாரும் மறுக்க முடியாது !

Edited & Published by N. B. Rameeza 18, Ramasamy St, Madras-1. Printed by V. Sambandan at Sengunthamithran Press. 33 Armenian St., Madras-1